# ஸ்ரீ அப்பர் சுவாமிகள்

# குருபூஜை விழா மலர்





269

KMM0269

திருவாமூர்

30-4-1970

உ

குருபாதம்

560

திருவாமூர்

# ஸ்ரீ அப்பர் சுவாமிகள் குருபூஜை விழா மலர்

கம்பன் அடிப்பொடி
திரு. சா. கணேசன் அவர்கட்கு
அன்பளிப்பு

சென்னை, தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையத்தில் 27—4—70-ல் நிகழ்ந்த
திருவாமூர் 81 கார் ஊர்வலத் தொடக்க விழாவில்
தமிழ் நாடு சட்டப் பேரவைத் தலைவர்
மாண்புமிகு புலவர் கா. கோவிந்தன், எம்.ஏ., அவர்களால்
வெளியிடப்பெற்றது.

வெளியிடுவோர் :

திருவாமூர் ஸ்ரீ அப்பர் சுவாமிகள் குருபூஜை விழாக் கழகத்தினர்

30—4—1970

41, உஸ்மான் சாலை,
தியாகராயநகர்,
சென்னை-17.

விலை ரூபாய் மூன்று

## முன்னுரை

தமிழகத்தில் தமிழ்ப் பண்பையும் சிவநெறியையும் சமய ஒழுக்கத்தையும் பாதுகாத்து வளர்த்து அருளிய ஸ்ரீ அப்பர் சுவாமிகள் என்னும் திருநாவுக்கரசர் பெருமான் திருவவதாரம் செய்த சிறப்புடைய தலமாகிய திருவாமூரில் ஆறு ஆண்டுகளாக நடைபெற்று வருவது போல், நிகழும் சாதாரண ஆண்டு சித்திரைத் திங்கள் 17-ஆம் நாள் (30—4—70) வியாழக்கிழமை சதய நட்சத்திரத்தன்று ஸ்ரீ அப்பர் சுவாமிகள் குருபூஜை விழா மிகவும் சிறப்பாக நடைபெற உள்ளது. அவ்விழாவின் சார்பிலேயே, இம்மலர் வெளியிடப் பெறுகின்றது.

இம்மலரின் கண், தமிழும் சைவ சமயக் கோட்பாடுகளும் நன்குணர்ந்து கற்ற தமிழகத்துச் சான்றோர் பலரும் அப்பரடிகளைப் பல முனை நின்று ஆராய்ந்திருக்கிறார்கள். அப்பரடிகளுக்குக் காலத்தால் முற்பட்டும் பிற்பட்டும் வாழ்ந்திருந்த அரும்பெரும் அருட்கவிஞர்களோடு அடிகளை ஒப்பிட்டு எழுதப் பெற்ற ஒப்புமையாராய்ச்சிக் கட்டுரைகள் முறைப்படத் தொகுக்கப் பெற்று இம்மலரை அணி செய்கின்றன. கால ஓட்டத்தில் கரைந்து விடாத கருத்துக் கருவூலங்களாக இம்மலரில் இடம் பெற்றுள்ள கட்டுரைகள் தமிழுலகத்திற்குப் பயன் தருதல் ஒருதலை.

இம்மலருக்கு அணியாக வாழ்த்துரை வழங்கியதுடன், அப்பர் ஆலய வளர்ச்சியில் தொடக்க முதல் பெரிதும் ஆக்கமும் ஊக்கமும் நல்கி, அருட்கொடையும் வழங்கி அருள்பாலித்து வரும் நமது தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குரு மகா சந்நிதானம் அவர்களின் பொன்னார் திருவடிகளுக்கு எமது நன்றி கலந்த பணிவார்ந்த வணக்கங்களைச் சமர்ப்பித்துக் கொள்ளுகிறோம்.

மற்றும் இம்மலருக்கு வாழ்த்துரைகள், கட்டுரைகள் அளித்துதவிய பெருமக்களுக்கும், இம்மலருக்கு விளம்பரங்கள் அளிப்பதன் மூலம், மலர் வெளியீட்டிற்கு உதவி புரிந்ததுடன், குருபூசை விழா சிறப்புற நடைபெறுவதற்கும் பெருந்துணையாகப் பொருளுதவி புரிந்த வணிக நிறுவனத்தார்களுக்கும் எங்கள் உளமார்ந்த நன்றியை உவகையுடன் தெவித்துக்கொள்ளுகிறோம்.

இம்மலரை அச்சிடும் பணியில் பெரிதும் பொறுப்பேற்று அயராது உழைத்து அரும்பணியாற்றிய மணலி தமிழ்க் கல்லூரி விரிவுரையாளரும், பொறுப்பு முதல்வரும் ஆகிய புலவர். திரு. இரா. செல்வக்கணபதி அவர்கட்கும், மிகவும் குறுகிய காலத்தில் இம்மலரைச் சிறந்த முறையில் அன்புடன் அச்சிட்டுத் தந்த டார்வின் அச்சகத்தினருக்கும் மற்றும் மலர்ப் பணிக்கு உதவிய அனைவருக்கும் எங்கள் நன்றியும் அப்பர் பெருமானின் ஆசியும் என்றும் உரியன.

திருவாமூர் ஸ்ரீ அப்பர் சுவாமிகள், குருபூஜை விழாக் கழகத்தினர்.

# காணிக்கை



திருக்கயிலாய பரம்பரை தருமையாதீனத்தின் இருபத்தைந்தாவது குருமகா சந்நிதானமாக அருளாட்சியெய்தி சைவமும்-தமிழும் தம் இரு கண்ணெனப் போற்றிப் புரந்து வருபவர்கள் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானமவர்கள்.

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்கள் இருபத்தைந்தாவது மகா சந்நிதானமாக, இருபத்தைந்து ஆண்டுகள் அருட்செங்கோல் செலுத்தி இன்று வெள்ளிவிழாக் காண்கிறார்கள். அப்பரடிகளின் திருநாளான சித்திரைச் சதய நாளில் அருட்பீடமேறிய அவர்கள் திருவாரூர், ஸ்ரீ அப்பர் ஆலய வளர்ச்சிக்கு ஆக்கம் நல்கி, ஊக்கம் விளைத்தவர்கள். ஆண்டுதோறும் அணிவிழாக் காண ஆர்வம் புதுக்கியவர்கள்.

அப்பரடிகளின் திருமுறைகளில் பேரீடுபாடு கொண்ட ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்கள் அப்பர் பெருமானைப் போலத் திருக்கயிலாயக் காட்சியினை, அதுவும் அப்பர் கயிலை கண்ட அதே ஆடி அமாவாசை நாளில் கண்டு தொழுதவர்கள்.

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்களின் அருளாட்சியின் வெள்ளி விழா மலரும் இப்புனிதத் திருநாளில் அப்பரடிகளின் அருமைகளைப் பேசுகின்ற இருபத்தைந்து கட்டுரைகளும், இருபத்தைந்து வாழ்த்துச் செய்திகளும் பொதுள உருவாக்கப் பெற்ற இவ்வழகிய மணமலரை அவர்களுக்குக் காணிக்கையாக்கி அகம் மகிழ்கிறோம்.

இன்னணம்,

திருவாரூர் ஸ்ரீ அப்பர் சுவாமிகள் குருபூஜை விழாக் கழகத்தினர்.

திருக்கயிலாய பரம்பரை
தருமையாதீன அருளாட்சியில்
வெள்ளிவிழாக் காணும்,



25-ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

உ

# ஆசிச் செய்திகள்

உ

குருபாதம்



தருமையாதீனம் தருமபுரம், மாயூரம் அஞ்சல்.

ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக
ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் 25—4—70

"ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே"

உயிர்கள் இறைவனை அடைவதற்கு மனம் மொழி மெய் என்னும் மூன்றினாலும் தொண்டு புரிதல் இன்றியமையாதது. இறைவனது திருவுருவத்தை அன்போடு தியானித்தல் மனத்தால் செய்யும் தொண்டு. அவனது அருட் செயல்களை வாயார எடுத்துச் சொல்லி வாழ்த்துதல் வாக்கால் செய்யும் தொண்டு. தலையால் வணங்கிக் கடிமாமலர் தூவிக் கைகூப்பித் தொழுது காலால் வலம் வந்து மெய்யார வீழ்ந்து வணங்குதல் காயத்தால் புரியும் தொண்டு. இன்னும் திருக்கோயிலிற் சென்று புலர்வதன் முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப் பூக்கொய்து மாலை தொடுத்துக் கொடுத்து விளக்கேற்றுதல் முதலியனவும் காயத்தாற் செய்யும் தொண்டேயாகும். இத்தொண்டுகளைச் செய்தற் பொருட்டே இறைவன் நமக்கு இவ் யாக்கையை அளித்துள்ளான்.

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவன்" என்றும்,

"வணங்கத்த லைவைத்து வார்கழல்வாய் வாழ்த்த வைத்து
இணங்கத்தன் சீரடியார் கூட்டமும் வைத்து எம்பெருமான்"

என்றும் திருமுறைகளிலும்,

"மானுடப் பிறவிதானும் வகுத்தது மனம் வாக்காயம்
ஆனிடத் தைந்தும் ஆடும் அரன்பணிக்காக அன்றோ"

என்று சாத்திரங்களிலும் சொல்லப்படுதல் அறியத்தக்கது.

இம்மூவகைத் தொண்டையும் உலகிற்குச் சிறக்கச் செய்து காட்டியவர் சமயாசாரியர் நால்வருள் மூத்தோராகிய திருநாவுக்கரசராவார். இத்தகைய திருத்தொண்டின் நெறிவாழ்வதற்காகவே இவர் அவதரித்தார் என்பதைச் சேக்கிழார்,

"திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டின் நெறிவாழ
வருஞானத் தவமுனிவர், வாகீசர்"

என்று குறிக்கின்றார்.

இன்னும் அவர், நாயனார் திருவருள் பெற்ற வரலாற்றைக் கூறுமிடத்தில்,

"மையற்றுறை ஏறி மகிழ்ந்தலர் சீர்
வாகீசர் மனத்தொடு வாய்மையுடன்
மெய்யுற்ற திருப்பணி செய்பவராய்
விரவும்சிவ சின்னம் விளங்கிடவே
எய்துற்ற தியானம் அரு உணர்வும்
ஈறின்றி எழுந்திரு வாசகமும்
கையில்திக ழும்உழ வாரமுடன்
கைக்கொண்டு கலந்து கசிந்தனரே"

என்று, அவர் முத்தொண்டும் செய்யத் தொடங்ினமையை அருளியிருக்கிறார். முத்தொண்டுகளில் கைத்தொண்டே வாகீசருக்கு அமைந்த ஒரு தனிச் சிறப்பு. அதனால் சேக்கிழார் இவரைச் சிறப்பாக, 'உழவாரப் படையாளி' என்று போற்றுகின்றார்.

திருத்தொண்டின் நெறிவாழ இந்நாயனார் அவதரித்ததற்குத் தவம் செய்தது தென் தமிழ் நாட்டில் நடுநாடு எனப்படும் திருமுனைப்பாடி நாடாகும். பின் ஆலால சுந்தரர் அவதரித்ததும் இந்நாடே.

> " மறந்தரு நெறிமாற மணிகண்டர் வாய்மைநெறி
> அறந்தரு நாவுக்கரசும் ஆலால சுந்தரரும்
> பிறந்தருள உளதானல் நம்மளவோ பேருலகில்
> சிறந்ததிரு முனைப்பாடித் திறம்பாடும் சீர்ப்பாடு "

என்று இந்நாட்டைச் சிறப்பிக்கின்றார் சேக்கிழார் பெருமான். இத்திருமுனைப் பாடி நாட்டிலும் திருவாமூரே நாயனார் அவதரிக்கத் தவம் செய்தது. அதனால் அவ்வூர் தெய்வ நெறிச் சிவம் பெருக்கும் திருவாமூராயிற்று.

இத்திருத்தலத்தில் திருநாவுக்கரசு நாயனாருக்கு நூதனமாக ஆலயம் எழுப்பித் திங்கள் திருநாள் ஆண்டுத் திருநாட்களை அன்பர் பலர் ஆர்வத்துடன் கொண்டாடி வருகின்றனர். இவ்வாண்டு அப்பர் திருநாளை முன்னிட்டு விழாமலர் ஒன்றும் வெளியிடப் பெறுகின்றது. இவை எல்லாப் பணிகளிலும் நம் ஆதீனத் திருக்கூட்டத்து ஒடுக்கம் சோமசுந்தரத் தம்பிரான் பெரிதும் பங்கு கொண்டிருப்பது மகிழ்ச்சியைத் தருகின்றது.

விழாமலர் நன்கு மலர்ந்து பயன்தரவும், விழா இனிது சிறக்கவும், அருள் நெறி போற்றும் அன்பர் பலரும் எல்லா நலன்களும் பெற்று இனிது வாழவும் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

---

## தவத்திரு குன்றக்குடி அடிகளார்

தமிழக வரலாற்றில் ஏழாம் நூற்றாண்டு ஒரு திருப்பு முனை ; தமிழ்ச் சமுதாயத்தில் பொல்லாத சாதிச் சழக்குகளும், பயனற்ற சடங்குமுறைகளும் பல்கிப் பெருகி, உள மார்ந்த சமய அனுபவம் இல்லாமல் தலை தடுமாறிய காலம். நம்முடைய சமயத்தில் ஏற்பட்ட இத் தொய்வைப் பயன்படுத்திக்கொண்டு, சமண் சமயம் கால்கொள்ள முயன்றது. இந்தப் பேராபத்தினின்றும் திருவருள் நம்முடைய சமுதாயத்தை அப்பரடிகளை இடமாகக் கொண்டு அருள் பாலித்துக் காப்பாற்றியது.

அப்பரடிகள் சிறந்த திருவருள் அனுபவம் கைவரப் பெற்றவர். இறைவனின் திருவடியை நெஞ்சகத்தே நிறுத்தியமையால் நடமாடும் திருக்கோயிலாகத் திகழ்ந்தவர். திருநெறியத் தொண்டின் காவலராகத் திகழ்ந்தவர். 'அன்பலாற் பொருளில்லை ஐயன் ஐயாறனார்க்கே' என்று எடுத்தோதியவர். 'தொண்டலால் உயிர்க்கு ஊதியமில்லை' என்று தொண்டின் நெறியுணர்த்திய தூயர். சமய நெறியில் நின்று சமுதாய மாற்றம்' கண்டவர். உலக வரலாற்றிலேயே மணிமுடி கவித்த அரசின் அதிகாரத்தை மறுத்த முதல் தலைவர். அப்பரடிகள் புகழ் தமிழகத்தின் புகழ். அப்பரடிகளின் அருள்நெறி நமது நெறி. அப்பரடிகள் நெறியில் இவ்வையகம் நடைபயிலும் பொழுது, துன்பத்திலிருந்து விடுதலை பெறும்-இன்பம் பெற்று உய்யும்.

தேசம் உய்ய வந்த திருநாவுக்கரசரை ஈன்று புரந்தந்த பெருமை திருவாமூருக்கு உண்டு. திருவாமூர் மண் ஞான பூமி; அந்தத் திருவாமூரில் திருநாவுக்கரசரின் திருப் புகழ் போற்றித் திருத்தொண்டு பரவும் நெறி வளர்ந்து வருவது கண்டு அளப்பரும் மகிழ்வெய்துகின்றனம். திருநாவுக்கரசர் வளர்த்த திருத்தொண்டு நெறி பேணி வளர்க்கும் நமது உழுவலன்பு கெழுமிய அருள்மிகு சோமசுந்தரத் தம்பிரான் அவர்களுக்கு நம் நெஞ்சுகந்த பாராட்டுக்கள் ! வாழ்த்துக்கள் !

---

## ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

மதுரையாதீனம்

இருகண்மணிகளிற் சிறந்த தம்பிரான் சுவாமிகளுக்கு, எல்லாம் வல்ல எம் பெருமானது இன்னருளால் எல்லா நலங்களும் எய்துக.

29ம் தேதி எழுதிய கடிதம் கிடைத்தது. திருவாரூர் ஸ்ரீ அப்பர் ஆலயத்தில் 30—4—70 அன்று அப்பர் குரு பூஜை விழாவும், அப்பர் தேவார அருந்தமிழ் மாநாடும் சிறப்பாக நிகழவுள்ளதை அறிந்து மகிழ்கின்றோம்.

ஸ்ரீ அப்பர் சுவாமிகள் ஆலயத்தின் நலத்தைத் திருவுளம் கொண்டு ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்களும், அவர்களது ஆணையைச் சிரமேற் கொண்டு தாங்களும் ஆற்றிவரும் தொண்டுகளை தமிழுலகம் என்றுமே மறக்க முடியாது.

குரு பூஜையும், மாநாடும் யாதொரு விக்கினமுமின்றி இனிதே நடந்தேறவும், அதில் பங்கு கொள்ளுகிற பக்தர்கள் அனைவரும் எல்லா நலங்களும் பெற்றுத் திகழவும் திருவருள் பாலிக்குமாறு எல்லாம் வல்ல எம்பெருமானைப் பிரார்த்தித்து ஆசீர்வதிக்கிறோம்.

---

ஸ்ரீலஸ்ரீ சிதம்பர சுவாமிகள், ஆதீனகர்த்தர் : திருப்போரூர்

சைவப்பயிர் தழைக்கத் திருவவதாரம் செய்தருளிய பெருந்தகை அப்பர்பெருமான். யான் எனது என்ற அகப்புறப் பற்றுக்களை அறுத்து மனிதகுலம் முன்னேற வழிகாட்டியருளிய பெருந்தகை அவர். உரிமைப் போராட்டத்தில் முனைந்து கடமை வழி விலகும் காலத்திலெல்லாம், அப்பர் பெருமானின் உழவாரத் தொண்டு நினைவு கூரப்படுமானல் உலகம் உய்தி பெறுதல் ஒருதலை. அடியார்க்கு இலக்கணமாக மிளிர்ந்தது, அருந்தமிழ் நெறி புதுக்கி ஆயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன்னே அப்பர் அவதரித்த திருவாரூரில் அவர்க்கு அணி விழா எடுப்பது சாலப் பொருத்தமானது.

இவ்விழாவினையொட்டி விழாமலர் ஒன்று வெளிவருவது குறித்து மகிழ்வெய்துகிறோம். தமிழுலகம் பெற்றுப் பயன் துய்ப்பதாக. இப்படியோர் அமைப்பை உருவாக்கி அரும்பணியாற்றி வரும் சென்னை ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகட்கு முருகப் பெருமான் திருவருள் பெருகுக.

---

PRESE SECRETARY TO THE PRESIDENT OF INDIA, RASHTRAPATI BHAVAN, NEW DELHI-4.

Dear Shri Thambiran,

The President thanks you for your letter of the 1st April, 1970, and sends his best wishes for the Success of the proposed Celebrations.

---

B. D. JATTI, (*Lieutenant Governor*) RAJ NIVAS, PONDICHERY

I am very much pleased to know that the Dharmapuram Adheenam Mutt (Madras Branch) has proposed to release a Souvenir in commemoration of the Gurupooja celebrations of Sri Thirunavukkarasa Swamigal, more popularly known as "Appar".

The lyrics of Saiva Saints are veritable sources of spiritual inspiration, thought and vision. "Appar" the foremost of the four Saiva Saints, was not merely a sage given to the exposition of spiritual ideas but also a social reformer It is therefore not an exaggeration to say that he found a niche for himself in the annals of ancient Tamil Nadu as a pioneer in the fields of social and religious reformation. No doubt, his emphasis on service would continue to inspire us to uphold the religious trations of India.

I pray God to shower His choicest blessings for the success of your endeavour.

உயர்நீதிமன்ற நடுவர் திரு. என். கிருஷ்ணசாமி ரெட்டியார், சென்னை

"இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை" என்று மக்களுக்கு ஆணித்தரமாக எடுத்துரைத்த அப்பர் பெருமானின் குரு பூஜை விழா அண்மையில் இவ்வாண்டு எவ்வாண்டும் போல் திருவாரூரில் சிறப்பாக நடக்க இருப்பதை ஒட்டி தவத்திரு சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளும் விழாக் குழுவினரும் விழா மலர் வெளியிட முனைந்திருப்பதைக் கண்டு மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். இவ்விழா மலரில் பல அறிஞர் பெருமக்களின் கட்டுரைகள், சமய மறுமலர்ச்சியையும், அப்பர் பெருமானின் அடி பற்றி வாழும் அன்பர்களின் ஆர்வத்தையும் வெளிப்படுத்தும் முறையில் அமையும் என நம்புகிறேன். மனிதனின் உரிமையையும் கடமையையும் பல ஆண்டுகளுக்குமுன் வலியுறுத்திய அப்பரின் புகழ் பல்லாண்டு வாழ்க. இந்த குரு பூஜை விழா சிறப்பாக நடக்க இறைவன் திருவருளும், ஸ்ரீலஸ்ரீ குரு மகா சந்நிதானம் அவர்களின் ஆசியும், தவத்திரு சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளின் ஆர்வமும் ஈடற்ற முயற்சியும் பெருந்துணையாக நிற்கும் என்பது நிச்சயம்.

---

உயர்நீதிமன்ற நடுவர் திரு. எஸ். மகராஜன், சென்னை

சைவ சமயப் பேருண்மைகளுக்கு விளக்கம் கொடுப்பதற்காகப் பிறந்த மாபெரும் ஞானிகளுள் ஒருவர் அப்பரடிகள். மெய்யுணர்வு பெறுவதற்கு முன் அவரும், நம்மைப் போலவே, ஆணவத்தில் அழுந்தியிருந்தவர்; "நம்மைக் காட்டிலும், நமக்கு இனியவர் உலகத்திலேயே இல்லை" என்று கருதியிருந்தவர். இறைவன் கள்ளத்தனமாக அவர் நெஞ்சில் புகுந்து, நினையாத அவர் நெஞ்சை நினைவித்தான், கல்லாதனவெல்லாம் கற்பித்தான், காணாதனவெல்லாம் காட்டினான், சொல்லாதனவெல்லாம் சொல்லி அவரை ஆட்கொண்டான். உடனே, அவருக்கு ஒரு பேருண்மை புலப்பட்டது "அடடா! என்னைக் காட்டிலும் இனியவன் எனக்கு ஒருவன் இருக்கிறான். மூச்சுருவத்தில் என்னுள் புகுந்தும் புறம்போந்தும், சதா என்னோடு விளையாடிக் கொண்டல்லவா இருக்கிறான் அவன்! அவன்தான் திரு இன்னம்பரில் இருக்கும் ஈசன்" என்று உணருகிறார். வருகிறது பாடல்,

"என்னில் ஆரும்
எமக்கினி யாரில்லை
என்னிலும் இனி,
யான் ஒருவனுளன்,
என்னுளே உயிர்ப்
பாய்ப்புறம் போந்துபுக்கு
என்னுளே நிற்கும்
இன்னம்பர் ஈசனே"

இவ்வாறு இறைவன் அவருட் புகுந்து, நின்ற பிறகு, அவர் பேரண்டத்தைப் பார்க்கும் பார்வையே மாறிவிட்டது. பிரபஞ்சம் முழுவதுமே ஆண் பெண் கோலத்தில் அர்த்தநாரி வடிவத்தில் இருப்பதை அப்பரடிகள் கண்டார். அதற்கு முன் கண்டறியாத இந்தக் காட்சியைத் திருவையாற்றிற்குப் போயிருந்தபொழுது திடீரென்று கண்டு கொண்டார். "கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்" என்று ஆனந்தமேலீட்டில், அவர் ஓலமிடுகிறார். ஆண் யானையும் பெண் யானையும் ஜோடியாகப் போவதைப் பார்த்தபோது, அம்மையப்பனின் இரண்டு திருப்பாதங்களுமே அடிமேல் அடிவைத்துப் போகும் காட்சி அவர் கண்ணுக்குப் புலப்பட்டது.

"காதல் மடப்பிடியோடும்
களிறுவருவன கண்டேன்
கண்டேன் அவர் திருப்பாதம்
கண்டறியாதன கண்டேன்" என்றார்.

சேவலும் பெட்டைக் கோழியும் கூடிக்குலாவிக்கொண்டு போவதைப் பார்த்தும், இறைவனுடைய திருப்பாதங்களின் நினைவே அவருக்கு ஏற்பட்டது.

"கோழி பெடையொடுங்கூடி
குளிர்ந்து வருவன கண்டேன்
கண்டேன் அவர் திருப்பாதம்
கண்டறியாதன கண்டேன்" என்றும்,

" வரிக்குயில் பேடையோடாடி
வைகிவருவன கண்டேன் "

" பேடை மயிலொடும் கூடிப்
பிணைந்து வருவன கண்டேன் ",

" பைங்கிளி பேடையோ்டாடிப்
பறந்துவருவன கண்டேன் ", என்றும் சொல்லி,

பிரபஞ்சம் எங்குமே, அணுவிலிருந்து பேரண்டம் வரை, சிவனும் சக்தியும் ஜோடியாக இணைந்து பிணைந்து பின்னிக் கிடந்த நிலையை, உணர்ந்து மகிழ்ந்தார் திருநாவுக்கரசர். அவருடைய அரிய அனுபவங்களை, அனுபவத்தில் தோய்ந்து எழுந்த இனிய பாடல்களை உணர்ந்து, மக்கள் பயன்பெறுவதற்கு 'அப்பர் குருபூசை விழா மலர்' வாய்ப்பளிக்குமாக என்று வாழ்த்துகிறேன்.

---

**தவத்திரு. சுந்தர சுவாமிகள் அவர்கள்** கௌமாரமடாலயம், கோவை.

அப்பர் சுவாமி அவதரித்த ஆமூரில்
ஒப்பில் தளியமைத்து ஒண்பணிகள்—தப்பின்றிச்
செய் யுமன்பர் சித்திரையிற் சேர்சதய நாளின்கண்
உய்யும் விழாவெடுத்தா ரே.

சதயவிழா ஆமூர் தனிற்சிறப்பாச் செய்யும்
இதயநலம் வாய்ந்த இயலோர்—மதகயத்தை
வென்றஅப்பர் இன்னருளால் மேவும் திருவருட்சீர்
ஒன்றலுற்று வாழ்வார் உயர்ந்து.

---

**உயர்நீதிமன்ற நடுவர். திரு. வ. சொ. சோமசுந்தரம்,** சென்னை

அலகில் கலைத்துறை தழைக்கவும், அருந்தவத்தோர் நெறி வாழவும், உலகில் பல இருள் நீங்கவும், ஒளி விளங்குகதிர்போல – மருள் நீக்கியார் அவதரித்தத் திருத்தலத்தில் திருக்கோவில் ஒன்று எழுப்பப்பெற்று, சித்திரைச் சதய நன்னாளில் – குருபூஜை விழாவும் தேவார அருந்தமிழ் மாநாடும் ஆண்டுதோறும் நடைபெற்று வருவது மிகப்பொருத்த மானது. இதற்கு ஆவன செய்து நிறைவேற்றி வருகின்ற அன்பர்களுக்குச் சைவ உலகம் என்றும் கடமைப்பட்டுள்ளது.

விழா இனிது நிறைவேறவும் மேலும் தொடர்ந்து சிறப்புடன் பல்லாண்டுகள் நடைபெற்றும் வருமாறு திருவருள் பாலிப்பதாக.

---

**மாண்புமிகு. கே. வி. சுப்பையா,** அறநிலைய அமைச்சர்

இந்து சமயப் பெரியோர்களில் அப்பரடிகளுக்குத் தனியிடம் உண்டு திடமும் திண்மையும் வாய்ந்த மனது; நாவோடு விளையாடும் தமிழ்; 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற கோட்பாடு ஆகியவற்றின் உருவமே அப்பர் பெருமான்.

சாத்திரம் பல பேசும் சழக்கர்காள் !
கோத்திரமும் குலமுங் கொண்டென் செய்வீர்

என்று சமூக ஏற்றத்தாழ்வைச் சாடிய பெருமை அவருக்கு உண்டு.

அவர் பிறந்த காலத்தின் சமூக அமைப்பு இன்றைக்கு இருப்பதில் இருந்து எவ்வளவோ வேறுபட்டதாகும். அன்றைய நிலைமையில் சாதி வேற்றுமைகளைக் கடந்து தீண்டாமையை ஒழிக்கும் கருத்துடையவராக அவர் விளங்கினர். அஞ் சாமைக்கு எடுத்துக்காட்டாக அவர் அரசனின் ஆணைக்குக் கட்டுப்பட மறுத்து,

" நாமார்க்கும் குடியல்லோம்
நமனை அஞ்சோம் ''

என்று முரசு கொட்டினார்.

முடியரசு நடந்த காலத்தில் இதுபோன்ற சொல்லம்பு வீசுவது அப்பர் போன்ற சான்றோர் அளவில்தான் முடியும்.

அத்தகைய பெருமை வாய்ந்த நாவுக்கரசருக்கு விழா எடுப்பது பாராட்டுக்குரிய தாகும். விழா இனிது நடைபெறுமாக.

---

திரு. கே. எஸ். நரசிம்மன், பி. ஏ., பி. எல்., ஐ. ஏ. எஸ்.
ஆணையாளர், அறநிலைய ஆட்சித்துறை, சென்னை-34.

சைவ சமய ஆசிரியர்கள் ஆகிய நால்வர்களுள் ஒருவர் திருநாவுக்கரசர். "திருத் தொண்டின் நெறிவாழ வரும் ஞானத் தவமுனிவர்'' என்று சேக்கிழார் பெருமான், திருநாவுக்கரசரைச் சிறப்பித்துப் போற்றியுள்ளார். இத்தகைய பெருந்தகையார் அவ தரித்தருளிய தலம், திருவதிகைக்கு அணித்தாகத் திருவாமூர் என்னும் பெயர் பெற்று விளங்குகின்றது. திருநாவுக்கரசர் அவதரித்த சிறப்புடைமையினால், இதனையும் சேக் கிழார் பெருமான் மிகவும் வியந்து புகழ்ந்து,

"சைவநெறி ஏழுலகும்
பாலிக்கும் தகைமையினால்
தெய்வநெறிச் சிவம்பெருக்கும்
திருஆமூர் திருவாமூர்''

எனச் சிறந்தெடுத்துப் பாராட்டியுள்ளார். சமய ஆசிரியர்களின் அவதாரத் தலங்களைப் பெரிதும் போற்றிப் பாதுகாக்க வேண்டுவதன் இன்றியமையாமையையும் கடமையையும் உணர்ந்து அண்மையில் அங்கே திருநாவுக்கரசர் அவதரித்த இல்லம் இருந்த இடத் திலேயே திருக்கோயில் ஒன்று எழுப்பி, அதற்கு நித்திய நைமித்திகப் பூசையும் விழாக் களும் நடத்தி வருவதற்குத் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் அவர் களின் அருளாசி பெற்று, வித்துவான் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் தக்க ஏற்பாடுகள் செய்து, சிறந்த பணியாற்றி வருகின்றார்கள்.

வழக்கம்போல் இவ்வாண்டும் அவர்களின் முயற்சியால் சித்திரைச் சதயத் திரு நாளில் அப்பர் குருபூஜை விழாவும், அப்பர் தேவார அருந்தமிழ் மாநாடும் சிறப்புற நிகழ இருப்பதும், அதனை ஒட்டி சிறப்பு மலர் ஒன்று வெளியிட இருப்பதும் அறிந்து மிகவும் மகிழ்கின்றேன்.

திருநாவுக்கரசர் நம் தமிழகத்தில் தோன்றியருளிய சான்றோர்களின் வரிசையில் ஒரு பெரும் சிறப்பிடம் பெற்றுத் திகழ்பவர், அவர் தம் அருமை பெருமைகள் அளப்பரியன.

'திருநாவுக்கரசர் திருவேகாதசமாலை'யில்,

"வாய்மைக் கவிதையிற் பல
உபரியாகப் பொருள் பரப்பிய
அலகில் ஞானக் கடல்''

என்றும், "மெய்உரு-ஞானத்திரள்-அனகன்-குற்றமற்ற பண்டிதன்-நாடற்கு அதிநிதி'' என்றும் பலவகைகளில், சைவத் திருமுறைகளைத் தொகுத்த சான்றோராகிய நம்பியாண் டார் நம்பிகள், மிகவும் புகழ்ந்து போற்றித் துதிக்கின்றார். மேலும் அவரை,

"பதிகம் ஏழ்எழுநூறு
பகரும் மாகவியோகி
பரசும் நாவரசான
பரமகாரண ஈசன்''

என்றும் குறிப்பிட்டுச் சிறப்பித்து, வணங்கி மகிழ்கிறார், நம்பியாண்டார் நம்பிகள் !

இங்ஙனம் எல்லாம், சான்றோர்கள் அனைவரும் புகழ்ந்து ஏத்தும்படி, ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர்த் தமிழகத்தில் வாழ்ந்திருந்து, அரிய பல செயல்களைச்

செய்தருளிய திருநாவுக்கரசர் என்னும் அப்பர் பெருமான், பொதுவாகத் தமிழ் மக்களும் சிறப்பாகச் சைவ சமயத்தவரும் பெரிதும் போற்றி, அவர் தம் தேவாரத் திருப்பதிகங்களை ஓதியுணர்ந்து, இறையருள் நெறியினின்று ஒழுகி, நலம்பல பெற்றுய்யக் கடமைப் பட்டுள்ளனர்.

திருவாமூர்ச் சித்திரைச் சதயக் குருபூசை விழாவும், அதனை ஒட்டி நடைபெறும் சமயக் கலைநிகழ்ச்சிகளும் பிறவும், நன்கினிது நடைபெறத் திருவாமூரிற் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள, திரிபுரசுந்தரி சமேத ஸ்ரீபசுபதீசுவரரின் திருவடிகளை இறைஞ்சுகின்றேன்.

---

## திரு. வ. ஆ. தேவசேனாதிபதி.

சென்னை

அப்பர் பெருமான் நினைவர்க விழா மலர் தருமபுர ஆதீனம் வெளியிடுவது கேட்டு மிக்க மகிழ்ச்சி. சைவ சமய குரவர்களுள் ஒருவராகிய அப்பர் பெருமான் வாழ்க்கையையும் அருள் மொழிகளையும் நினைவுபடுத்தும் வகையில் கட்டுரைகள் அமைந்திருக்குமென்று நினைக்கிறேன், கைத்திருத்தொண்டு செய்யும் கடப்பாட்டினராகவும் பூமாலைகளோடு வாடாத பாமாலைகள் புனைந்து இறைவனுக்கு அணிவித்தவராகவும் அப்பர் நமக்குக் காட்சி யளிக்கிறார். திருமறைக் காட்டில் மூடப்பட்டிருந்த கதவைத் திறக்கப் பாடிய அவர் நம் அறிவை மூடியிருக்கும் கதவையும் திறக்க உளங்கொள்ள வேண்டும் என்னும் கருத்தில் திருக்கூவப் புராணத்தில் பின்வரும் பாடல் காணப்பெறுகிறது.

‘ மருக்குலாவு மறைவனத் தோன்றிய
திருக்கபாடம் திறந்த சொல் வேந்தனை
அருட்குலாவும் அறிவினை மூடிய
இருட்க பாடம் திறக்கவும் ஏத்துவாம்’

சமய குரவர்களையும் சந்தான குரவர்களையும் நம் நினைவுக்குக் கொண்டுவரும் அரும்பணி செய்யும் தருமபுர குருமஹா சந்நிதானத்திற்கு வணக்கம்.

## திரு. மு. வரதராசனார்.

சென்னை

ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன் தமிழ்நாட்டில் வாழ்ந்த ‘உலகச் சான்றோர்’ எனப் போற்றத்தக்கவர் திருநாவுக்கரசர். பகைவர் செய்த ஒரு கொடுமையை மாற்றுவதற்கு உண்ணாநோன்பு மேற்கொண்டு வெற்றி பெற்றவர் அவர். அறிஞர்களிடையே பெரும்புகழ்பெற்றுத் தலைமை எய்தியிருந்த அவர், அத்தலைமைப் பொறுப்பை விட்டு, தமக்கை காட்டிய வழியைப் போற்றி, கையில் உழவாரம் என்னும் களைக்கட்டைத் தாங்கி ஊர் தோறும் நடந்து சென்று கோயில்களில் உள்ள புல்லும் கல்லும் செதுக்கி ஒதுக்கிக் கையால் தொண்டு செய்தார். நாடு போற்றும் சிறப்புப் பெற்றிருந்தும், மிக எளிய கோலம் உடையவராய்த் தொண்டு என்பதையே பெருஞ் செல்வமாக மதித்து விளங்கினார். அவரை ஒறுக்கவேண்டும் என்று கருதி நாட்டை ஆளும் அரசன் ஆணை பிறப்பித்து ஆட்களை அனுப்பியபோதும், அந்த ஆணையை அஞ்சாமல் மறுத்து ‘நாமார்க்கும் குடியல்லோம்’ என்று முழங்கி அஞ்சாமையின் திருவுருவமாக நின்றார். அவருடைய தேவாரப் பாடல்கள் மூவாயிரம் அவருடைய பக்திப் பெருமையை மட்டும் அல்லாமல், வாழ்க்கையின் உயர்ந்த தத்துவங்களையும் உள்ளத் தூய்மையையும் விளக்குகின்றன; கனிவு மிக்க தமிழிசைச் செல்வங்களாகவும் உள்ளன.

அத்தகைய தமிழ்ச் சான்றோரின் திருநாளைத் தருமபுர ஆதீனத்தின் சென்னை நிலையத் தவத்திரு. தம்பிரான் அவர்கள் ஆண்டுதோறும் கொண்டாடி வருதல் போற்றத் தக்கதாகும். திருநாள் கொண்டாடும் வகையில் சில புதிய முறைகளை மேற்கொண்டிருத்தல் பாராட்டுக்குரியதாகும். எண்பத்தோரு வயது வரையில் உடல் தாங்கி விளங்கிய அந்தச் சான்றோராகிய அப்பர் பெருமானின் நினைவைப் போற்றி வழிபடும் நல்ல நாளில், அவர் காட்டிய நெறியை நினைந்து உருகிப் ‘பாதயாத்திரை’ எனப் பலர் கூடிக் காலால் நடந்து தேவாரம் பாடிச் செல்லும் காட்சி கண்டு கசிந்துருகத் தக்கதாகும்.

கற்றவர்கள்மட்டும் அல்லாமல், தேவாரம் கல்லாதவர்களும் அப்பர் பெருமானைப் பற்றி அறிந்து கொள்ளுவதற்கு இத்தகைய ‘பாதயாத்திரை’ உதவுவதாகும். தென்னாற்காடு, மாவட்டத்திலுள்ள திருவாமூர் என்னும் அவர் பிறந்த ஊருக்கு அறிஞர் பலர் திரண்டு நடந்து செல்கின்றனர். இடையிடையே ஆங்காங்கே மக்கள் கூடும் இடங்களில் சொற்பொழிவுகள் நடத்தப்படுகின்றன. அவற்றின் வாயிலாக ஒருவகை விழிப்புணர்ச்சி ஏற்படுகிறது. அறிவியல் வேண்டும்; நாகரிகம் வேண்டும்; ஆனால், அறிவியல்

நாகரிக வேகத்திற்கு இரையாகி மனிதன் வாழ்தல் என்னும் கடமையையும், உய்தல் என்னும் குறிக்கோளையும் மறத்தல் கூடாது. மறந்தால், உழைத்துப் பாடுபட்டுப் பொருள்கள் சேர்ப்பதில் அலைந்து அலைந்து திரியும் ஒருவன், சமைத்து உண்டு மகிழ்வதை அறியாமல் ஏங்குவது போன்றது ஆகும், இன்றைய நாகரிக வேகம் எல்லா வாய்ப்புகளையும் தருகிறது; அமைதியாக வாழ்வதற்கு அவ்வளவாக உதவவில்லை. உடம்புக்கும் மூளைக்கும் தேவையான வசதிகளைப் பெருக்கித் தருகிறது; ஆனால் உள்ளத்திற்கும் உயிர்க்கும் தேவையான உணவைத் தராமல் பட்டினிபோட்டு வாட்டுவதாக உள்ளது. 'மனிதன் பறவைகள்போல் வானத்தில் பறக்கிறான்; மீன்கள்போல் கடலில் ஓடுகிறான்; ஆனால் மண்ணில் வாழத்தெரியாதவனாக இருக்கிறான்' என்று அறிஞர் ஒருவர் கூறியதில் உண்மை இருக்கிறது. அப்பர் பெருமானின் நல்வாழ்வும் அருள்வாக்கும் நமக்கு இவ்வகையில் வழிகாட்ட வல்லன. 'இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை' என்று பாடினார் அந்தச் சான்றோர். இன்று நம்மில் எத்தனை பேர் 'இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை' என்று மனம் தொட்டுக் கூற முடியும்? அவ்வாறு கூறி மகிழும் இன்ப வாழ்க்கை நமக்கு வேண்டும் அன்றோ? ஆகவே, அப்பர் பெருமானை நாடுவோம், போற்றுவோம், கற்போம், வழிபடுவோம்.

---

திரு. பெ. திருஞானசம்பந்தன், எம்.ஏ., எல்.டி., சென்னை

'பார்வாழத் திருவீதி பணிசெய்து பணிந்தேத்திப் பரவிச் சென்ற' நாவுக்கரசரின் பெருமை மணக்கும் 'அப்பர் மலரில்' பல இதழ்கள் பேசுகின்றன. அவரது அறிவுரையை நாம் நினைவுபடுத்திக்கொள்வதோடு அச்செந்நெறியில் நாம் நின்றொழுகவும் முயலவேண்டும்.

ஒருவர் அல்லாத நெறியில் ஊழ்வினைப்பயனால் உழன்றாரேனும் இறைவன் அவரை ஏற்று அருள் செய்வான் என்பதை அப்பரடிகள் வரலாறு நமக்கு உணர்த்துகிறது. அப்பரின் சமயமாற்றம் சமயங்களிடையே உள்ள தத்துவங்களையும் நெறிகளையும் முறைகளையும் நூல்வாயிலாகவும் அநுபவவாயிலாகவும் உணர்ந்து சீர்தூக்கி ஆராய்ந்து மெய்ப்பொருள் கண்டபின் ஏற்பட்ட மாற்றம். ஆகவே சைவசமயத்தில் அவருக்குள்ள நாட்டமும் உறைப்பும், சைவக் குலத்திலேயே பிறந்தவரின் சமயப்பற்றைக் காட்டிலும் ஒருபடி மேன்மையுற்று விளங்குவதாகத்தான் கொள்ளவேண்டும். தாம் பெற்ற நலங்களை மக்கள் பெறவேண்டும் என்ற சீரிய நோக்கத்தில் அப்பர் பல இடங்களில் மக்களைச் சிவநெறிக்கே தம்மை ஆட்படுத்திக்கொள்ளுமாறு அறைகூவி அழைக்கின்றார். நாம் ஏற்றுக்கொள்வோமா?

பிறப்பு, வித்தை, அழகு, குலம், பொருள், தொழில் இவற்றால் ஏற்படும் வேறுபாட்டிற்கு பக்தியில் இடமில்லை என்றியம்புகிறது நாரதபக்தி சூத்திரம் (72) சைவ சமயம் இதை வலியுறுத்தி வந்திருக்கின்றது. நாயன்மார்கள் வாழ்க்கையே சான்று. அப்பரிடத்தில் அப்பூதியடிகட்கு இருந்த ஈடுபாடு ஒன்று போதாதா? அப்பரும் 'எவரேனும் தாமாக விலாடத்திட்ட திருநீறுஞ் சாதனமுங்கண்டால் உள்கி உவராதே யவரவரைக் கண்டபோது உகந்தடிமைத் திறநினைத்தங் குவந்து நோக்கும்' அடியார் உள்ளத்தே எம்பெருமானைக் காணலாமே என்று கூறுகிறார்.

'இறைவனுக்கும் அடியாருக்கும் வேறுபாடில்லை' என்ற நாரதபக்தி சூத்திரத்தின் (41) கருத்தையும் மேலே உள்ள தொடர்களில் பார்க்கிறோம்.

சமயக்காழ்ப்பற்ற சமுதாயம் நிலவவேண்டும் என்று பேசப்படும் இக்காலத்திற்கேற்ற கருத்தை 'திருநின்றசெம்மை உடையவரான' ஆளுடைய அரசு அன்றே பேசி இருக்கின்றார்.

> விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயஞ்செய்து
> எரிவினாற் சொன்னாரேனும் எம்பிராற்கேற்றதாகும்
> பரிவினாற் பெரியோரேத்தும் பெருவேளூர் பற்றினானை
> மருவி நான் வாழ்த்தியுய்யும் வகையது நினைக்கின்றேனே'
>
> [4-60-9]

சைவ வேளாளரான திருநாவுக்கரசர் நாம் செய்யவேண்டிய பயிர் முறையைச் சொல்லியுள்ளார்.

மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தைவித்தி பொய்ம்மையாம் களையை வாங்கிப் பொறையெனும் நீரைப் பாய்ச்சித் தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலியிட்டு செம்மையுள் நிற்பராகிற் சிவகதி விளையுமன்றே.

(4-76-2)

இவ்வுழவு முறையை நாம் மேற்கொள்வதே நாவுக்கரசருக்கு நாம் செலுத்தும் நன்றிக்கடனாகும்.

---

திரு. நா. மகாலிங்கம், பி.எஸ்.சி., சென்னை

தேர்ந்தஉளத் திடைமிகவும் தித்தித் தூறும்
செழுந்தேனே சொல்லரசாம் தேவே மெய்ம்மை
சார்ந்துதிகழ் அப்பூதி அடிகட் கின்பம்
தந்தபெருந் தகையே எம்தந்தை யேஉள்
கூர்ந்தமதி நிறைவே என்குருவே எங்கள்
குலதெய்வமே சைவக்கொ ழுந்தே துன்பம்
தீர்ந்தபெரு நெறித்துணையே ஒப்பில்லாத
செல்வமே அப்பன்எனத் திகழ்கின் றோனே.

—இராமலிங்க சுவாமிகள்.

திருநின்ற செம்மையே செம்மையர்க்கொண்ட திருநாவுக்கரசுப் பெருமானின் திருநாளைத் திருவாமூரில் வழக்கம்போல இந்த ஆண்டும் கொண்டாடவிருப்பது நமக்குப் பெருமைதரும் அருமையான செயலாகும். அனுபவத்தில் பழுத்துத் தோய்ந்த ஞானத்தவ முனிவராகவும், அஞ்சாது வீரமுழக்கம் செய்த சமயச் சான்றோராகவும், என்கடன் பணிசெய்து கிடப்பதே என்று கூறி பணிவுடைமையும் பணியுடைமையுமே தம் வாழ்வின் அறங்களாகக் கொண்டொழுகிய அருளரசராகவும் விளங்கிய நம் பெருமானின் நன்னெறியில் நாம் ஒழுகுதல் வேண்டும்.

தமிழ் வளர்ச்சி எங்கும் பேசப்படும் இந்நாளில் தமிழையே சைவமாகக் கண்டும் கொண்டும் ஒழுகிய சமயாசாரியர்களை இந்நாளைய இளைஞர்கள் எண்ணி மகிழலாம். நாவரசரைத் தமிழ்மொழித் தலைவர் என்றே அழைப்பதேடு, பெருமான் தமிழோடிசை பாடல் மறந்தறியேன் என்று இசையையும் தமிழையும் இணைத்துப் பேசுவதும் காணலாம்.

இவ்வாறு தமிழும் சைவமும் தழைத்தினிதோங்கத் திருவவதாரம் செய்தவர் அப்பரடிகள்.

தேசம் உய்ய வந்த நம் ஆளுடை அரசை வாழ்த்தி வழிபட்டு நம் தேசம் உய்யவும், உயிரெலாம் சிறக்கவும் விழைவோமாக.

---

திரு. அ. உத்தண்டராமன் சென்னை

'ஆணிபோல நீஆற்ற வலியை காண்
ஏணி போல் இழிந்தேறியும் ஏங்கியும்
தோணியாகிய சோற்றுத்துறை யார்க்கே
பூணியாய்ப் பணிசெய் மடநெஞ்சமே'.

'ஆளாகார் ஆளானாரை அடைந்துய்யார்
மீளா ஆட்செய்து மெய்ம்மையுள் நிற்கிலார்
தோளா தசுரையோ தொழும்பர் செவி
வளாமாய்ந்து மண்ணாகிக் கழிவரே'.

சைவசமயகுரவர் நால்வருள் 'அறந்தரு நாவுக்கரசும் ஆலாலசுந்தரரும்' திருஅவதாரம் செய்தருளிய நாடு திருமுனைப்பாடி நாடு, அத்திருநாட்டில் சைவநெறி ஏழுலகும்

பாலிக்கும் தன்மையினால் தெய்வநெறிச்சிவம் பெருக்கும் திருஆமூராகிய திருவாமூரில் 'அலகில் கலைத்துறை தழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ உலகில்வரும் இருள்நீக்கி ஒளிவிளங்கு கதிர்போல' புகழனார்க்கும் மாதினியார்க்கும் திருவனைய திலகவதியாரும் மருணீக்கியாரும் திருஅவதாரம் செய்தனர். அவர்கள் அவதரித்தருளிய திருமனையில் திருக்கோயில் அமைத்து நித்தியநைமித்திக பூசைகள் திருவிழாக்கள் பெருஞ்சிறப்புடன் நடைபெற அரசினரும் தருமை ஆதீனமும் அவ்வாதீனத்தைச் சார்ந்த ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத்தம்பிரான் சுவாமிகளும் 'திருநாவுக்கரசுவளர் திருத்தொண்டின்நெறி' போற்றும் அன்பர்கள் பலரும் இடையறுப் பேரன்புடனும் அயரா ஆர்வத்துடனும் விடாமுயற்சியுடனும் உழைத்துவருவதுகண்டு தமிழ்ப்பெருமக்கள் நன்றிசெலுத்திப் பாராட்டக் கடமைப்பட்டுள்ளனர்.

'சிந்தையிடையறு அன்பும் திருமேனி தனிலசைவும்
கந்தைமிகையாம் கருத்தும்கை உழவாரப்படையும்
வந்திழிகண்ணீர் மழையும் வடிவிற் பொலிதிருநீறும்
அந்தமிலாத் திருவேடத்தரசு வந்தணைய'

ஆளுடைபிள்ளையார் தமது 'கருத்திற்பரவு மெய்க்காதற் றொண்டர் திருவேடம் நேரேதோன்றியதென்று கரங்கள்பற்றி எழுதரிய மலர்க்கையால் எடுத்திறைஞ்சி' அப்பரே என அழைத்தார். அன்று முதல் உலகுக்கும் அப்பரானார்.

அப்பர் திருவேடத்தைப் பலமுறைபோற்றிபுகழ்கின்றார்

'மார்பாரப்பொழி கண்ணீர்மழைவாரும் திருவடிவு மதுரவாக்கிற்
சேர்வாகும் திருவாயிற்றீந்தமிழின் மாலைகளும் செம்பொற்றாளே
சார்வானதிருமனமும் உழவாரத்தனிப் படையுந்தாமுமாகி'

என்பது சேக்கிழார் புகழுரை. நாவுக்கரசர் மனத்தாலும் வாக்காலும் இறைவனை வழிபட்டதோடமையாமல் உழவாரப்படையுடன் கைத்தொண்டும் செய்தமையால் திருவீழிமிழலையில் பஞ்சம்தீர்க்க இறையருளால் வாசியில்லாப்படிக்காசுபெற்றார். திருஞானசம்பந்தரோ வாசியுள்ளகாசைப் பெற்றுப்பின் இறைவனிடம் முறையிட்டு வாசியில்லாக் காசுபெற வேண்டியதாயிற்று.

'என்கடன் பணிசெய்து கிடப்பதே' என்ற திருத்தொண்டின் அடிப்படைத்தத்துவத்தை உணர்த்திய பெருந்தகையார் அப்பர்சுவாமிகள்.

'நம்மையுடையவர் கழற்கீழ் நயந்ததிருத்தொண்டாலே
இம்மையிலும் பிழைப்பதென எம்போல்வாருந் தெளியச்
செம்மை புரி திருநாவுக்கரசு'

என்று போற்றிப்புகழ்ந்து 'திருநாவுக்கரசு' என்னும் ஒருசொல்லை 'எழுதியும் கூறியும் என்றும் துன்பில்பதம் பெற்றான் ஒருநம்பி அப்பூதி என்னும் பெருந்தகையே' என்பது சிவப்பிரகாச சுவாமிகள் திருவாக்கு.

திருவாமூரில் அமைக்கப்பெற்றுள்ள திருநாவுக்கரசர் திருக்கோயில் புகழனார் மாதினியார் திருவுருவங்களுடன்

'எம்மையாரிலை யானும் உளேனலேன்
எம்மையாரும் இதுசெய வல்லரே
அம்மையா ரெனக்கென்றென் றரற்றினேற்
கம்மை யாரைத் தந்தார் ஆரூர் ஐயரே'

என்று அப்பர் பெருமான் அருளியவாறு மருணீக்கியாரை திருவதிகை வீரட்டனருக்கு ஆட்படுத்தித் திருநாவுக்கரசராக்கி உலகுக்களிக்கவே இறைவனால் தோற்றுவிக்கப் பெற்ற திலகவதியார் திருவுருவமும் அமைக்கப் பெற்றுள்ளது.

தாண்டக வேந்தராகிய திருநாவுக்கரசர் அருளிய போற்றித் திருத்தாண்டகங்கள் ஐந்து. அவற்றுள் 'கற்றவர்கள் உண்ணும் கனியேபோற்றி' எனத் தொடங்கும் திருவாரூர்த் திருத்தாண்டகம் 108 போற்றிகள்கொண்டு அருச்சனைக்குப் பொருத்தமான நிறைவுடையது. சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து வழிபாடு செய்வதற்கேற்ற சிறப்புடையது.

திருக்கோயில்கள் தொடர்புடன் ஒவ்வொரு திருவூரிலும் நாவுக்கரசர் பெயரால் வழிபாடு திருப்பணி மன்றங்கள் அமைத்து ஆலயங்கள் திருவீதிகள் முதலியவற்றைச் செம்மையாகப் பாதுகாக்கவும் திருப்பணிகள் திட்டமிட்டு முறையாகச் செய்யவும் அப்பர் விழாக் கழகத்தினரும் தமிழ்நாடு தெய்வீகப் பேரவையினரும் ஆவன செய்யவேண்டுமென மக்கள் சார்பில் விண்ணப்பித்துக் கொள்ளுகிறேன்.

திருவாமூரில் திங்கள்தோறும் சதயவிழாவும், ஆண்டுதோறும் பங்குனி உரோகிணி விழா, சித்திரைச் சதயவிழா, விழாக்களையொட்டி மாநாடுகள் கவியரங்கங்கள், பண்ணுராய்ச்சி மற்றும் கலா நிகழ்ச்சிகளும் சிறப்பு வழிபாடுகளும் தவத்திரு சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் முயற்சியால் இனிது நடைபெற்று வருவது யாவரும் அறிந்ததே. முந்திய ஆண்டுகளில் வெளியிடப்பெற்ற மலர்கள் போலவே இவ்வாண்டும் ஸ்ரீ அப்பர் சுவாமிகள் குருபூஜை விழாமலர் பல அரிய கட்டுரைகள் கவிதைகளுடன் சிறந்துவிளங்கி நாவரசர் திருத்தொண்டின் மாட்சி, சமய உணர்ச்சி, செந்தமிழ்ப்பற்று ஒழுக்கநெறி முதலிய நற்பண்புகளை உருவாக்கி மக்கள் நலம்பெறப் பெரிதும் உதவுமென்று நம்புகிறேன்

'இலமா டென்றிடர் பரியார்
இந்திரனே யொத்துறுகுறைவற்றுலும்
நிலையாதிச் செல்வமெனவே கருதுவர்,
நீள்சன்மக்கடலிடையிற்புக்
கலியார், சென்று நன்நெறியாகுங்கரை
அண்ணப் பெறுவர்கள், வண்ணத்திண்
சிலமாடந்திகழ் புகழாமூர் உறை
திருநாவுக்கரசு என்போரே'

வாழ்க திருநாவுக்கரசு வளர்திருத்தொண்டின் நெறி! வளர்க அப்பர் அறநெறி!

---

**திரு. மா. சே. சாரங்கபாணி முதலியார், சென்னை**

ஏழாவது ஆண்டாக நடைபெறவிருக்கும் ஸ்ரீ அப்பர் சுவாமிகள் குரு பூஜை விழாவினையொட்டி ஒரு மலர் வெளி வருவது குறித்து நான் மிக மிக மகிழ்கின்றேன்.

அப்பர் பெருமானது காலத்தையும் அப்போதுள்ள சூழ்நிலையையும் வரலாற்றுக் கண் கொண்டு பார்ப்பவர்க்குச் சைவ சமய நெறிக்கும் மக்களின் வளமான வாழ்க்கைக்கும் அவர் ஆற்றியுள்ள பணியின் அருமையும் சிறப்பும் தெற்றென விளங்கும். தொண்டைநாட்டிலும் பாண்டிய நாட்டிலும் மன்னனும் குடிகளனைவரும் சமண சமயத்தைத் தழுவியும் சைவத்தைப் பழித்தும் அழித்தும் மக்களின் இகபர வாழ்க்கைக்கு மிகுதியும் ஊறு விளைவித்து வந்தனர். சோழ நாட்டிலும் குடிகளிடையே சமண ஆதிக்கம் வலுப்பெற்றிருந்ததோடு சைவ வைணவ ஆலயங்கள், வழிபாட்டு முறைகள் யாவும் அறவே புறக்கணிக்கப்பட்டிருந்தன. ஆரம்பத்தில் நல்லொழுக்கத்தையே வலியுறுத்தி வந்த சமண சமயம் இறைவன் உண்மையை மறுத்ததாலும், நல்வினை தீவினைகளின் ஆதிக்கத்தை மிகைப்படுத்திக் கூறி அவற்றினின்று மீள இயலாமையையே விதியாகக் கொண்டிருந்தமையாலும் நாளடைவில் மக்களிடையே ஒழுக்கம் நிலைகுலையத் தொடங்கி சமுதாயம் மிகவும் சீர்கேடான நிலையில் இருந்தது. அச்சமயத்துள் பிரவேசித்து அதன் இலக்கியங்களையும் கோட்பாடுகளையும் நன்கு பயின்று தேர்ந்து 'தரும சேனர்' என்ற பட்டப்பெயரையும் பெற்றுத் திகழ்ந்த நாவரசப் பெருமான் இயற்றியருளிய திருப்புன்கூர் திருப்பதிகத்தில் "கையெலாம் நெய் பாயக் கழுத்தே கிட்டக் கால் நிமிர்ந்து நின்றுண்ணுங் கையர் சொன்ன, பொய்யெலாம் மெய்யென்று கருதிப் புக்குப் புள்ளுவரால கப்படா துய்யப் போந்தேன்" எனக் கூறுமாறு இருந்தது அன்றைய சூழ்நிலை. இந்நிலையினை மாற்றுவதற்கு அரும்பாடுபட்டனர் ஸ்ரீ அப்பர் சுவாமிகளும், அவர் சம காலத்தவராய ஸ்ரீ ஞான சம்பந்தப் பெருமானும். இறைவன் உளன் என்பதையும், அவனருள் கிட்டுமாயின் இருவினைகளும் மாய்ந்தொழிந்து வீட்டுப் பேறுகிட்டும் என்பதையும் இவ்விரு சமயாசாரியர்களும், பின்னர் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளும் சிவத்தலங்கள் தோறும் சென்று திருப்பதிகங்கள் பாடி இறைவனருளால் பல வகை அற்புதங்களையும் செய்வித்து மக்களது அறிவு மயக்கத்தைப் போக்கியருளினர். இவர்களது அரும்பணியால்தான் மன்னனும் குடிகளும் மீண்டும் சைவர்களாகி, ஆலயங்களும் அவற்றில் நடைபெறும் வழிபாட்டு முறைகளும் பண்டைய உன்னத நிலையினை யெய்தி திருவைந்தெழுத்தும் திருநீறும் என்றென்றும் நிலைத்து நிற்கும் பான்மையைப் பெற்றன.

இத்தகு நற்பணியினைச் செய்தருளிய நாவுக்கரசுப் பெருமானைச் சைவ உலகம் என்றும் மறக்கமுடியாது. அவர் திருவவதாரம் செய்த திருத்தலமாகிய திருவாமூரில் அவர் தோன்றிய புனித இடத்தில் ஆலயம் அமைத்து வழிபாடு செவ்வனே நடைபெறவும், தேவாரத் திருப்பதிகங்கள் நன்கு ஓதப் பெறவும், தருமை யாதீன பீடாதிபதியவர்களும் ஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளவர்களும் எடுத்து வரும் நன்முயற்சிகள் ஆஸ்திக

அன்பர்கள் நன்கறிந்தவையே. அவர்களது இடையரு ஊக்கமும் அவர்கள் முயற்சிகளுக்கு ஆஸ்திகப் பெருமக்கள் அளித்து வரும் ஆக்கமும் மேன்மேலும் பெருகுவதாக என எல்லாம் வல்ல முழு முதற் பரம்பொருளை மனமார வழுத்துகின்றேன்.

---

**திருக்குறள்வேள் திரு . ஜி. வரதராச பிள்ளை** — **திருச்சிராப்பள்ளி**

திருநாவுக்கரசர் ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த பெரியார். அன்பே உருவாய்த் திகழ்ந்தவர். அஹிம்சை முறையில் ஆழ்ந்த நம்பிக்கைக் கொண்டவர். வன்முறைகளை அஞ்சாது எதிர்த்துப் போராடிய ஒரு பெரு வீரராவார். பல்லவ சாம்ராச்சியக் கொடுமைகளை அஞ்செழுத்தின் துணைகொண்டு பணியவைத்த பெருமை திருநாவுக்கரசருக்கே உண்டு,

"நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே எந்நாளுந் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
சங்கரன் நற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடி இணையே குறுகினோமே,'

சங்கரனது அடியார் பிறர் ஒருவருக்கு அடிமையாக வேண்டியதில்லை என்று வீரகர்ஜனை செய்தார். இன்றைக்கு வெள்ளைக்கார சாம்ராஜ்யத்தை காந்தியடிகள் எதிர்த்துப் போராடியதற்குத் திருநாவுக்கரசர் வழிகாட்டியாக அல்லவோ இருந்திருக்கிறார்.

இனி, திருநாவுக்கரசர் தலயாத்திரை செய்துகொண்டு வரும்போது பழையாறை என்ற இடத்துக்கு வந்தார். அங்கே இறைவனது சிவலிங்கத் திருமேனி மண்ணால் மூடப்பட்டிருந்ததை அறிந்தார். அமணர்கள் செய்த அடாத செய்கை என்பதும் தெரிந்தது. "அடியேன் தேவரீரது திருவுருவத்தைக் கண்டு வணங்கியல்லாமல் உணவு அருந்தமாட்டேன்" என்று உண்ணாவிரதம் இருந்தார். இறைவன் இதை உணர்ந்து அடியார்க்கு அருளும்வண்ணம் அப்பகுதியை ஆண்ட சோழமன்னனுக்குக் கனவில் உணர்த்தியருளினார்.

"வண்ணங் கண்டு நானும்மை வணங்கியன்றிப் போகேனென்
றெண்ண முடிக்கும் வாகீச ரிருந்தா ரமுது செய்யாதே
அண்ண லாரு மதுவுணர்ந்தங் கரசு தம்மைப் பணிவதற்குத்
திண்ணமாக மன்னனுக்குக் கனவி லருளிச் செய்கின்றார்"

என்ற சேக்கிழார் வாக்கால் இவ்வுண்மைப் புலனாகிறது. வன்முறை மலிந்த இக்காலத்தில் திருநாவுக்கரசர் காட்டியவழி எத்துணைப் பயனுடையதாகவுள்ளது. மாதந்தோறும் ஆண்டுதோறும் விழாவெடுத்து இவரது சீரிய கொள்கைகளைப் பரப்பி வருவது மிகவும் மகத்தான செயல் என்று எல்லோராலும் பாராட்டப் பெறவேண்டும். நமது சுவாமிகள் அயராது செய்து வரும் பணி நம்மவரால் போற்றப்படுவதோடு உதவப்படவும் வேண்டும். மேன்மேலும் விழா சிறப்படைவதோடு பயனுடையதாகவும் ஆகவேண்டும் என்று எல்லாம்வல்ல இறைவனை இறைஞ்சுகின்றேன்.

---

**திரு. முத்துலிங்கா ரெட்டியார் அவர்கள்** — **கயப்பாக்கம்**

நாட்டில் ஒழுக்கக் குறைவும் தீமைகளும் பெருகும்போது அருளாளர்கள் தோன்றி நல்வழிப்படுத்துவர் என்பது சமுதாய எண்ணம். ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன் அப்பரடிகள் தலை சிறந்த சீர்திருத்தவாதியாகவும்-சமுதாயப் புரட்சியாளராயும் விளங்கினார். அவர் தொண்டால் அன்று தமிழகம் மறுமலர்ச்சியுற்றது.

இன்றைய சமுதாயச் சீர்கேடுகளைத் தகர்த்து நன்னெறி புகட்ட புதிய அருளாளர்களைத் தேடவேண்டிய கட்டாயம் இல்லை. அப்பர் பெருமானின் அருள் வாழ்வும் அவர் காட்டிய நெறியும் கால எல்லை கடந்து இன்றைய சமுதாய நோய்கட்கும் சிறந்த மாமருந்தாகப் பயன்படும் சிறப்பு மிக்கன. இவ்வுண்மையை நன்கு தெளிந்த நம் தருமையாதீன சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அப்பர் அவதரித்த திருவாமூரில் ஆண்டுதோறும் சித்திரைச் சதயத்தையொட்டி குருபூஜை விழாவைச் சிறப்புறநிகழ்த்திச் சமுதாயத்தை விழிப்படையச் செய்து வருகிறார்கள். எங்களைப் போன்றவர்களையும் இறைபணியில் ஈடுபடுத்திப் பயன்கொண்டு வருகிறார்கள். அவர்கள் தொண்டு சிறந்தோங்கவும் அப்பர் அருள் நெறி தழைக்கவும் அணி விழாப் பொலியவும் இறைவன் திருவருளைச் சிந்திக்கின்றேன்!

**திருமதி. சௌந்தரா கைலாசம்** **சென்னை**

அப்பர் ஒரு சமுதாய சிற்பி. ஆயிரத்து முன்னூறு ஆண்டுகட்கு முன் வாழ்ந்து புரட்சிக்கொடி உயர்த்திய புதுமையாளர். கவிதைத் தலைவர். அப்பர் அருளிய பாடல் களில் அழகுதமிழ் கொஞ்சம். ஆயிரமாயிரம் கருத்துக்கள் தோன்றும். அந்தப் பெருந் தகையாளர் அவதரித்த மண் இன்று பொலிவுபெற்றுத் திகழ்கிறது. அப்பர் கவிதை மணம் மூன்று நாள் அங்கே தழைகிறது. அப்பர் நெறி வெல்க! அருந்தமிழ் வாழ்க! அணி விழாக் காணும் அருட்டிரு தம்பிரான் சுவாமிகள் அடிமலர் வெல்க.

---

**நக்கீரர் கழகம்** **சென்னை**

தண்டமிழ் வல்ல அப்பரடிகளுக்கு அவர் பிறந்த மண்ணில் அணி விழாக் காண இருப்பது பாராட்டுக்குரியது. சீர்திருத்த நோக்கும்-புரட்சிமிக்க கருத்துக்களும் கொண்ட அப்பரடிகளின் பாடல்கள் கால எல்லை கடந்து கனிவூட்ட வல்லன. அவர் நினைவைச் சிறப்பிக்கு முகத்தான் வெளியிடப்பெறும் மலர் மணங்கொழித்து மலர்வதாக.

---

**திரு. சோமசுந்தரஞ் செட்டியார்** **சென்னை.**

திருவாமூரில் ஒவ்வொரு ஆண்டு சதயத்தன்றும் அதற்கு முன்னிரண்டு நாட் களிலும் திருமுறை மாநாடு, பண்ணாராய்ச்சி கவியரங்கம் பட்டிமன்றம் முதலிய பல நல்ல நிகழ்ச்சிகளும், அறிஞர் பலரது அரிய சொற்பொழிவுகளும் நடந்துவருகிறதையும் அன்பர் அறிவார்கள். ஒவ்வோர் ஆண்டிலும் ஒருமலர் வெளிவரும்.

இவ்வாண்டு கயிலைக்குருமணியவர்களின் 25 ஆவது ஆட்சி ஆண்டாக அமை வதால் இம்மலரினைக் கயிலைக் குருமணியவர்களின் "வெள்ளி விழா மலராக" வெளியிடக் கருதினர் இக்குருபூசை விழாக்கழகத்தினர். இதுவும் ஒரு பொருத்தமே. சிவமணம் கமழும் இம்மலரைக் கயிலைக்குரு மகாசந்நிதானம் அவர்களுக்கே அர்ப்பணம் செய்ய எண்ணி யதும் மிகப்பொருத்தமே.

இதற்கொரு வாழ்த்துச் செய்தி தருமாறு பணித்தனர் நம் வேலூர் இறைபணி மன்றத்தலைவர் வித்துவான் ஸ்ரீமத் சோமசுந்தரத்தம்பிரான் சுவாமிகள் அவர்கள். ஆணை யை மறுத்தற்கஞ்சி யிதனை எழுதினேன். அன்னாருக்கு என் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

திருச்சிற்றம்பலம்.

நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனைப்
பேயேன துள்ளப் பிழைபொறுக்கும் பெருமையனைச்
சீயேது மில்லாதேன் செய்பணிகள் கொண்டருளும்
தாயான ஈசற்கே சென்றூதாய் கோத்தும்பீ!''

இக்குருபூசைவிழா மிகச்சிறப்பாகவும், வெற்றிகரமாகவும் நிறைவேறுக! எனவாயார மனமார வாழ்த்துகிறேன்.

வாழ்க கயிலைக்குருமகாசந்நிதானம் அவர்கள்! வாழ்க கட்டளைத்தம்பிரான் சுவாமிகள்! வாழ்கஇவ்விழாவில் பங்குகொள்ளும் அன்பர்கள்! இதற்குப்பொருளுதவி புரிந்த மெய்யன்பர்கள் நிறைந்த செல்வத்துடனும், நீண்டஆயுளுடனும், நோயின்றியும் வாழ்க! வாழ்க சீரடியாரெல்லாம் !!

**வித்துவான். திரு. ப. வடிவேல்பிள்ளை** **சென்னை**

திருவாமூர் ஸ்ரீ அப்பர் சுவாமிகள் குருபூஜை விழாவை யொட்டி விழாமலர் ஒன்று வெளியிடவிருப்பதறிந்து மகிழ்ந்தேன். மலர் பன்னலமும் பொதுள சிறப்புற அமைந்து சைவசமய வளர்ச்சிக்குப் பயன்படவேண்டுமெனப் பெரிதும் விரும்புகிறேன்.

---

**வித்துவான் திரு. ஜி. முத்துசாமிப்பிள்ளை** **சென்னை**

அப்பரடிகளுக்கு விழா வெடுப்பதும், விழாமலர் வெளியிடுவதும் சாலப்பயன் தருவனவாகும். விழாப் பன்னலமும் பெற்றுச்சிறக்கவும், மலர் சைவ மணங் கமழவும் வேண்டுமென்று இறையருளைச் சிந்திக்கின்றேன். வாழ்க தொண்டு! வளர்க அப்பர்நெறி!

---

"ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடா தாரே
அடக்குவித்தால் ஆரொருவர் அடங்கா தாரே
ஓட்டுவித்தால் ஆரொருவர் ஓடா தாரே
உருகுவித்தால் ஆரொருவர் உருகா தாரே
பாட்டுவித்தால் ஆரொருவர் பாடா தாரே
பணிவித்தால் ஆரொருவர் பணியா தாரே
காட்டுவித்தால் ஆரொருவர் காணா தாரே
காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே"

அப்பர்—6 : 981

## திருவாமூர்
# ஸ்ரீ அப்பர் சுவாமிகள் குருபூஜை விழா மலர் 1970

## பொருளடக்கம்

அப்பர்பணி செய்யஎம்மை

ஆளாக்கி விட்டுவிட்டால்

எப்பொழுதும் இன்பநிலை

எய்தும் பராபரமே!

திருவாமூர்

# திருநாவுக்கரசு நாயனுர்

(ஸ்ரீ அப்பர் சுவாமிகள்)



“இடையறாப் பேரன்பும் மழைவாரும் இணைவிழியும் உழவாரத்தின்
படையறாத் திருக்கரமும் சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையறாப் பெருந்துறவும் வாகீசப் பெருந்தகைதன் ஞானப்பாடல்
தொடையறாச் செவ்வாயும் சிவவேடப் பொலிவழகும் துதித்து வாழ்வாம்”

—ஸ்ரீ சிவஞான சுவாமிகள்.

உ

குருபாதம்

# அப்பர் சுவாமிகள் அற்புத வரலாறு

தவத்திரு. சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள்

### சமயாசாரியர் நால்வர் துதி

பூழியர்கோன்வெப்பொழித்த புகலியர்கோன்
கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான்
அடிபோற்றி
வாழிதிருநாவலூர் வன்றொண்டர் பதம்
போற்றி
ஊழிமலி திருவாத வூரர் திருத்தாள்போற்றி

### திருநாவுக்கரசர் துதி

இடையருப் பேரன்பும் மழைவாரும்
இணைவிழியும் உழவாரத்திண்
படையருத் திருக்கரமும் சிவபெருமான்
திருவடிக்கே பதித்தநெஞ்சும்
நடையருப் பெருந்துறவும் வாகீசப்
பெருந்தகைதன் ஞானப்பாடல்
தொடையருச் செவ்வாயும் சிவவேடப்
பொலிவழகும் துதித்துவாழ்வாம்.

### அவதாரம்

சைவ சமயாசாரியர் நால்வருள் இரண்டாமவராக வைத்து எண்ணப்படுபவர் திருநாவுக்கரசர். கி.பி. 7ஆம் நூற்றுண்டின் முற்பகுதியில் நடுநாட்டில் உள்ள திருவாமூரில், சைவவேளாளர் குலத்தில், குறுக்கையர் குடியில், புகழனுர்க்கும், மாதினியார்க்கும் அருந்தவச் செல்வராய்த் திலகவதியார்க்குப் பின் தோன்றியவர்கள். மருள்நீக்கியார் என்பது இவரது பிள்ளைத் திருநாமம். இவரது இளமைப் பிராயத்திலேயே பெற்றேர் பிரானடி சேர்ந்தனர். பெற்றேரது பிரிவாலும், பெற்றேர்களால் தமக்கு மணாளனுக உறுதிசெய்யப்பட்ட கலிப்பகையார் போரில் உயிர் துறக்க நேர்ந்ததாலும் ஏற்பட்டவருத்தத்தால் தானும் உயிர்துறக்க எண்ணினுர் திலகவதியார். இஃதறிந்த மருள் நீக்கியார் தமக்கைக்கு முன்தாம் உயிர் துறக்கத் துணிந்தார். தம்பியார் உளராக வேண்டும் எனவைத்த கருணையினுலே உயிர்தாங்கி மனைத்தவம் புரிந்து வந்தார் திலகவதியார். இந்நிலையில் மருள் நீக்கியார் உயிர்க்கு உறுதி பயக்கத்தக்க சமயம் எது வென ஆராய்ந்து சமண்சமயம் சார்ந்தார். அச்சமயத்தில் 'தருமசேனர்' என்ற பட்டம் பெற்றுச் சிறப்பெய்தினுர்.

### 1. சூலை தீர்த்தாட்கொள்ளல்

தம்பியருக்காக உயிர்தாங்கித் தவம் புரியும் திலகவதியார் திருவதிகைப் பெருமானிடம் 'தம்பி சைவம் சாரவேண்டும்' என்று விண்ணப்பித்து வந்தார். அதிகைப் பெருமானும் 'அன்னவனைச் சூலை கொடுத்து ஆட்கொள்வோம்' என்று அருள்செய்தார். சிலநாளில் தருமசேனரான மருள்நீக்கியார் சூலைநோயால் துன்புற்றுர். அமண் சமய அருகரால் சூலை தீராதுபோகவே தம் தமக்கையாரிடம் சார்ந்து பணிந்தார். திலகவதியார் திருவாளன் திருநீற்றை ஐந்தெழுத்தோதிக் கொடுத்து அதிகைப் பெருமான் சந்நிதிக்கு அழைத்துச் சென்றுர். ஆண்டவனருளால் பாடும் உணர்வுபெற்ற மருள்நீக்கியார் "கூற்றுயினவாறு விலக்ககிலீர்" என்ற திருப்பதிகம் பாடிப்பரவினுர். இறையருளால் சூலை நீங்கியதோடு திருநாவுக்கரசர் என்ற பெயரும் பெற்றுர். "சூலை தீர்த்து அடியேனை ஆட்கொண்டாரே" என்பது அப்பரடிகள் அகச்சான்று.

## 2. நீற்றறை நின்மலன் அருளால் குளிர்ந்தது

இச்செய்தியுணர்ந்த அமணர்களும் அமணர் வயப்பட்ட மகேந்திரவர்மப் பல்லவ மன்னனும் இவருக்குப் பல வகையிலும் இன்னல் விளைவிக்கத் திட்டமிட்டு நாவுக்கரசரை அழைத்துவரச் செய்தனர். நாவரசர் "நாமார்க்கும் குடியல்லோம்" என்ற தாண்டகம் பாடி அவரெதிர் சென்றார். அமணர்கள் இவரை நீற்றறையில் (சுண்ணும் புக்காளவாய்) இட்டனர். அங்கு "மாசில் வீணை" என்ற திருப்பதிகம் பாடி நீற்றறையைக் குளிரச் செய்தார்.

## 3. நஞ்சும் அமுதாம் எங்கள் நாதன் அடியார்க்கு

நீற்றறையில் வேகாது பிழைத்த திருநாவுக்கரசர் 'தங்கள் சமண் சமயத்தில் கற்றிருந்த மந்திரவலிமையால்தான் நீற்றறையில் வேகாது பிழைத்தார்' என்ற துர்ப்போதனையை அரசனுக்குக் கூறினர். நஞ்சு கலந்த பால்சோற்றை நாவரசர்க்கு அருத்தினர். 'நஞ்சும் அமுதாம் எங்கள்நாதன் அடியார்க்கு' என்று நஞ்சுணவை ஏற்று உண்டு ஊனமொன்றும் இன்றி உயிர்வாழ்ந்தார் நாவரசர்.

"வஞ்சனைப் பாற்சோருக்கி வழக்கிலா அமணர்தந்த
நஞ்சமு தாக்குவித்தார் நனிபள்ளி யடிகளாரே"

என்பது அப்பர் சுவாமிகள் அகச்சான்று.

## 4. இடர்செய ஏவிய யானை பணிதல்

நஞ்சு உண்டும் உயிர்பிழைத்த நாவுக்கரசரைக் கொலைத்தொழில் வல்ல யானையை விட்டு இடரச் செய்தனர். மதயானை வருதலைக்கண்ட நாவரசர் "அஞ்சுவது யாதொன்றும் இல்லை அஞ்சவருவதும் இல்லை" என்ற உள்ள உறுதியோடு "சுண்ணவெண் சந்தனச்சாந்தும்" என்ற திருப்பதிகம் அருளினர். கொலைத் தொழில் வல்ல யானையும் நாவரசரை வலம் வந்து வணங்கித் தன்னையேவிய அமணர்களையே துன்புறுத்தியது.

"தலைவனுகிய ஈசன்தமர்களைக்
கொலைசெய் யானைதான் கொன்
றிடுகிற்குமே"

என்பது அப்பர் சுவாமிகள் அகச்சான்று.

## 5. கல்லே மிதப்பாய்க் கடலைக் கடந்தது

சமணர்கள் தாங்கள் செய்த சூழ்ச்சிகள் பலவற்ருலும் துன்புருத திருநாவுக்கரசரைக் கடைசியாகக் கல்லில் கட்டிக் கடலில் இட்டனர். அரன் ஐந்தெழுத்தை ஓதி அக்கல்லே தோணியாகக் கடலில் மிதந்துவர, திருப்பாதிரிப்புலியூருக்கு அருகில் கரையேறினர். கரையேறிய இடம் கரையேறவிட்ட குப்பம் என்ற பெயரோடு இன்றும் திகழ்கிறது.

"கல்லினேடு எனைப்பூட்டி அமண் கையர்
ஒல்லை நீர்புக நூக்கஎன் வாக்கினல்
நெல்லு நீள்வயல் நீலக்குடி அரன்
நல்ல நாமம் நவிற்றி உய்ந்தேனன்றே"

"கல்துணைப் பூட்டியோர் கடலில் பாய்ச்சினும்
நல்துணையாவது நமச்சிவாயவே."

என்பன அப்பரடிகளின் அகச்சான்றுகள்.

## 6. சூலக்குறியும் இடபக் குறியும், ஆலம் உண்டானது அருளால் பெற்றது

கடலினின்றும் கரையேறிய திருநாவுக்கரசர் தமக்குற்ற துன்பங்களைத் துடைக்க இறைவன் தந்தையும், தாயும், தமக்கையுமாய் உதவி செய்த நன்றியையுணர்ந்து போற்றுவாராய்த் திருப்பாதிரிப்புலியூர்த் திருக்கோயிலைச் சார்ந்து, "ஈன்ருளுமாய் எனக்கெந்தையுமாய் உடன்றேன்றினராய்' என்ற திருப்பதிகம் பாடிப் பரவினர். அமணர் சூழ்ச்சியும் நாவரசர் மாட்சியும் உணர்ந்த பல்லவ மன்னன் தானும் சமண சமயத்தை விட்டு சைவம் சார்ந்தான். அமண் பாழிகளையும் பள்ளிகளையும் இடித்து அக்கற்களைக் கொண்டு திருவதிகையில் 'குணபரவீச்சரம்' என்ற சிவன் கோயிலை எடுப்பித்தான். பின்னர் நாவரசர் 'சிவ தல யாத்திரை மேற்கொண்டு திருப்பெண்ணுகடம் என வழங்கும் திருத்தூங்கானை மாடம் சென்று தொழுதார். அங்குள்ள இறைவனிடத்துத் தாம் சமண் சமயம் சார்ந்ததால் ஏற்பட்ட மாசு நீங்கச் சூலக்குறியும்

இடபக்குறியும் பொறித்தருளவேண்டினர். அவ்வாறே இறையருளால் சூலக்குறியும் இடபக்குறியும் பொறிக்கப் பெற்றார்.

"பொன்னார் திருவடிக்கு ஒன்றுண்டு
விண்ணப்பம் போற்றி செய்யும்
என் ஆவி காப்பதற்கு இச்சையுண்டேல்
இருங்கூற்று அகல
மின்னாரு மூவிலைச் சூலம் என்மேற்
பொறிமேவு கொண்டல்
துன்னார் கடந்தையுள் தூங்கானை
மாடச்சுடர்க் கொழுந்தே"

என்பது அப்பர் அடிகளின் அகச்சான்று.

## 7. தில்லைக்கூத்தன் திருவடி தொழுதது

சூலக்குறியும் இடபக்குறியும் பொறிக்கப்பெற்ற திருநாவுக்கரசர் பல தலங்களையும் வணங்கிக்கொண்டு தில்லையை அடைந்து கூத்தப்பெருமான் குஞ்சிதபாதம் தொழுதார். "என்று வந்தாய் எனும் எம்பெருமான்றன் திருக்குறிப்பைப்" புலப்படுத்திப் பதிகங்கள் பல படினர். அவ்வூரை விட்டுப் புறப்படுங்கால் அத்தலத்தை உடலால் புரண்டு புரண்டு (அங்கப்பிரதக்ஷிணம்) வலம் வந்தார்.

## 8. அரசும் கன்றும் அரனடி தொழுதது

திருநாவுக்கரசர் தில்லையில் இருந்த பொழுது, சீகாழியில் உமாதேவியாரால் ஞானப்பால் உண்டு திருஞான சம்பந்தராய்த் திகழ்ந்த ஆளுடைய பிள்ளையாரின் அருள் திறம் கேட்டு அவரை வணங்க விரும்பினர். சீகாழி எல்லையை அடைந்தார். நாவரசர் வருவதறிந்த திருஞானசம்பந்தர் இவரைச் சீகாழி எல்லையில் பரிவாரங்களோடும் எதிர்வந்து வரவேற்றார், சிவவேடப் பொலிவழகோடு திகழ்ந்த நாவரசரை 'அப்பரே' என்று அழைத்தருளினர். இதுமுதல் அப்பர் என்ற பெயர் வழங்கலாயிற்று. நாவரசரும் கலைஞானக்கன்றாகிய ஞானசம்பந்தர் முன் "அடியேன்" என்று மறுமொழி கூறினர். ஞானக்கன்றும் சம்பந்தரும், நாவுக்கரசரும் தோணியப்பரைப் பதிகம் பாடிப் பரவினர்.

## 9. நல்லூர்ப் பெருமான் நற்றாள் சூட்டல்

காழிநாதன் கழலடி வணங்கிய அப்பரடிகள் பல தலங்களையும் வணங்கிக் கொண்டு திருச்சத்திமுற்றம் சென்று அங்குள்ள இறைவனிடம் தமக்குத்திருவடி அருளுமாறு வேண்டினர். பெருமானும் 'நல்லூருக்கு வருக' என்றருளி நனைந்தனைய திருவடி சூட்டியருளினர்.

"கோவாய் முடுகியடுதிறல் கூற்றம்
குமைப்பதன்முன்
பூவாரடிச் சுவடு என்மேல்
பொறித்துவை"

"இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப்
பில்கி
நனைந்தனைய திருவடி என் தலைமேல்
வைத்தார்
நல்லூர் எம்பெருமானர் நல்லவாறே"

என்பன அப்பரடிகள் அகச் சான்றுகள்.

## 10. அரசரும் அப்பூதியடிகளும்

திருவடி தீக்ஷை பெற்ற நாவரசர் பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திங்களூர் வந்தடைந்தார். அந்தணரின் மேம்பட்ட அப்பூதியடிகளார் தமது புதல்வருடன் சாலை, குளம், கிணறு, தண்ணீர்ப்பந்தல் முதலிய எல்லா அறங்களையும் திருநாவுக்கரசர் பெயராலேயே அமைத்திருந்ததைக் கண்டும் கேட்டும் காரணம் அறிவதற்காக அப்பூதியடிகளைக் காணச்சென்றார். அப்பூதியடிகளின் செந்தண்மையைக் கண்ட நாவரசர் அவரது விருப்பத்திற்கிணங்கி அமுதுகொள்ள இசைந்தார், திருவமுது படைப்பதற்கு இலை கொணரச்சென்ற மூத்த திருநாவுக்கரசு அரவம் தீண்டியதால் வாழையிலையைத் தாயிடம் சேர்ப்பித்து உயிர்நீத்தான். இறந்த பிள்ளையை மறைத்து அப்பருக்கு அமுது செய்விக்க முயன்றனர். அமுது கொள்ள எழுந்தருளிய அப்பரடிகள் மூத்த திருநாவுக்கரசு அரவந்தீண்டி இறந்ததையறிந்து அவ்வுடலைத் திருக்கோயிலின் முன் கொண்டு வரச்செய்து "ஒன்று கொலாமவர்" எனுந்திருப்பதிகம்பாடி உயிர் பெற்றெழச் செய்தார்.

## 11. அப்பர் சம்பந்தர்க்கு ஆதிரைச் சிறப்பைச் செப்பி மகிழ்ந்தார் திருப்புகலூரில்

விடம் தீர்த்த திருப்பதிகம் அருளிச் செய்த திருநாவுக்கரசர் திருவாரூர்த் தியா

கேசப் பெருமான் கழலடி தொழுது "தொண் டர்க்குத் தொண்டராம் புண்ணியம்தமக்கும் உண்டாகுமோ" என்ற கருத்தமைந்த பதிகம் முதலாகப் பல பதிகங்கள் பாடிப் பரவினர். திருவாதிரைத் திருநாளில் தியா கேசப் பெருமான் திருவுலாக்காட்சியைக் கண்டுதொழுத அப்பரடிகள் அங்கிருந்தும் திருப்புகலூர் சென்றார். அப்பொழுது திருஞானசம்பந்தர் சீகாழியினின்றும் புறப்பட்டுப் பல தலங்களையும் வணங்கித் திருப்புகலூர் அடைந்து முருகநாயனர் திருமடத்தில் எழுந்தருளியிருந்தார். அவர் திருநாவுக்கரசரின் வரவையறிந்து, அடியார் புடைசூழ எதிர்கொண்டு வரவேற்றார். ஞானசம்பந்தர் திருநாவுக்கரசர்பால் ஆரூரில் நிகழ்ந்த ஆதிரைச்சிறப்பைக் கேட்டுத் தாமும் திருவாரூர் சென்று தொழுது திரும்பினர். திரும்புங்கால் திருநாவுக்கரசர் அடியார்கள் புடைசூழ ஞானசம்பந்தரை வரவேற்று மகிழ்ந்தார்.

## 12. படிக்காசு பெற்றுப் பஞ்சம் தீர்த்தது

ஞானசம்பந்தரும் நாவுக்கரசரும் அடியார்கள் புடைசூழ, திருக்கடவூர் முதலிய பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திருவீழிமிழலை சென்றனர். அப்பொழுது மழையின்மையால் பஞ்சம் உண்டாயிற்று. அப்பஞ்சத்தால் அடியவர்கள் துன்புறு வண்ணம் கோயிலின் கிழக்குப் பீடத்தில் திருஞானசம்பந்தருக்கும் மேற்குப் பீடத்தில் திருநாவுக்கரசருக்கும் மிழலைப் பெருமான் படிக்காசு நாள்தோறும் வைத்து வந்தார் அக்காசுகொண்டு அடியவர்கட்கு இருமடங் களிலும் பறை சாற்றிச் சோறிட்டனர். உழவாரத்தொண்டு செய்த பான்மையினல் வாசியில்லாக்காசு பெற்றார் வாகீசர். ஞானப்பால் உண்டமையால் திருக்குமாரராம் பான்மைவாய்ந்த ஞானசம்பந்தர் வாசி யுள்ளகாசு பெற்றார். (வாசி-வட்டம் கொடுத்து மாற்றும் காசு.) "இருந்து நீர் தமிழோடிசைகேட்டும் இச்சையால்காசுநித்தம் நல்கினீர்" என்ற சுந்தரர் வாக்காலும்,

"பாடலங்காரப் பரிசில் காசருளிப் பழுத்த
செந்தமிழ்மலர் சூடி
நீடலங்காரத்து எம்பெருமக்கள்நெஞ்சினுள்
நிறைந்து நின்றானை"

என்ற திருவிசைப்பாவாலும் இந்நிகழ்ச்சியை நன்கு தெளியலாம்.

## 13. திருமறைக் காட்டில்கதவு திறந்தது

பஞ்சம் நீக்கிய இரு பெருமக்களும் வேதாரணியம் என வழங்கும் திருமறைக் காட்டிற்குச் சென்று திருக்கோயிலை வலம் வந்து வாயிலை அடைந்தனர். கதவு அடைக்கப்பட்டிருப்பதை வினவினர். 'முற் காலத்தில் வேதங்கள் வழிபட்டுத் திருக்காப் பிட்டுச் சென்றன. அது முதல் பக்கத்திலே வாயில் அமைத்து அன்பர்கள் வழிபட்டு வருகின்றனர்' என்பதை அங்குள்ளோரால் அறிந்து நேரே கும்பிட வேண்டும் என்ற விருப்புடையோர் ஆயினர். திருஞான சம்பந்தர் நாவுக்கரசரைப் பார்த்து 'திருக் கதவம் திறக்குமாறு பாடியருளுக' என்றார். அதற்கிணங்க அப்பர் சுவாமிகள் "பண்ணின் நேர்மொழியாள்" என்று தொடங்கும் திருப்பதிகத்தில் பத்துப் பாடல்கள் பாடியும் கதவு திறவாமையால்பதினோராவது பாடலில் "இரக்கம் ஒன்றிலீர்" என்று பாடி வணங்கிய அளவில் மறைக்கதவம் திறக்கப் பெற்றது. இருவரும் நிலமுறப் பணிந்தனர் திருநாவுக்கரசரது விருப்பத்திற்கு இணங்கத் திருஞானசம்பந்தர் அடைக்கப் பாடினர். அன்று முதல் திறக்கவும் அடைக்கவுமாக இருந்து வருகிறது கதவு.

## 14. திருவாய்மூரில் சிவனுருக்கண்டது

திருநாவுக்கரசர் தாம் அரிதின் முயன்று திறக்கப் பாடியருளியதையும், ஞானசம்பந்தர் ஒரு பாடலில் அடைக்கப் பாடியருளிய எளிமையினையும் எண்ணிப் பெருமான் திருவுள்ளக்கிடக்கையைஉணராது 'அயர்ந்தேன்' என்ற கவலை உடையவராய் அறிதுயில் கொண்டார். அப்பொழுது வெண்ணீறணிந்த கோலத்தோடு இறைவன் எழுந்தருளி 'நாம் திருவாய்மூரில் இருப்போம், அங்கு எம்மைத் தொடர்ந்துவா' என்றருளி மறைந்தனர். துயிலுணர்ந்த நாவரசர்,

"எங்கே யென்னை இருந்திடம் தேடிக்
கொண்டு
அங்கே வந்தடை யாளம் அருளினார்
தெங்கே தோன்றும் திருவாய்மூர்
செல்வனார்
அங்கேவா வென்று போனார்அதென்
கொலோ"

என்ற பாடலை முதலாக்கொண்ட பதிகம் பாடிக் கனவில் தோன்றிய வடிவத்தோடு இறைவன் வழி காட்டச் சென்ற இவருக்கு ஒரு பொற்கோயிலைக் காட்டி மறைந் தருளினர் இறைவன். ஞானசம்பந்தர் நாவரசர் திருவாய்மூர் செல்கின்றார் என்ப தையறிந்து அங்கு சென்றார்.

"திறக்கப்பாடிய என்னினும் செந்தமிழ் உறைப்புப்பாடியடைப்பித்தார் உந்நின்றார்"

என்று நாவரசர் பாடிய அளவில் திருஞான சம்பந்தருக்கு இறைவன் காட்சிகொடுத் தருளினர். கண்டு தரிசித்த ஞானசம்பந்தர் நாவுக்கரசருக்கும் காட்டினர். திரு நாவுக்கரசர் கண்டுமகிழ்ந்து "பாட அடியார் பரவக்கண்டேன்" என்ற திருத்தாண்டகம் பாடிப் பரவி இருவரும் திருமறைக்காடு சேர்ந்தனர்.

## 15. பழையாறைவடதளிப்பரமனைக் காண்டல்

மங்கையர்க்கரசியார் குலச்சிறையார் இருவரது வேண்டுகோட்கிணங்கித் திரு ஞானசம்பந்தர் பாண்டிய நாட்டிற்கு எழுந் தருளினர். திருநாவுக்கரசர் திருமறைக் காட்டினின்றும் பல தலங்களையும் தரிசித் துக்கொண்டு பழையாறையையடைந்து வடதளியென்னும் கோயிலை நோக்கித் தொழுதார். அக் கோயிலிலுள்ள சிவலிங்க மூர்த்தியை மறைத்துச் சமணர்கள் அருக தேவனை வைத்துத் தொழுதுவந்தனர். இஃது அறிந்து அப்பமூர்த்திகள் சிவலிங்க மூர்த் தியை வழிபட்டே உணவு கொள்வேன் என்று விரதமிருந்தார். அடியவர் கருத் தறிந்து முடிக்கும் ஆண்டவன் சோழ மன்னன் கனவில் தோன்றித் தான் இருக் கும்இடத்தை அடையாளங்களுடன் சுட்டி ஆலயம் அமைக்க ஆணையிட்டருளினர். அவ்வண்ணமே சோழமன்னன் அமணர் மறைத்து வைத்த சிவனுருவைக் கண்டு ஆலயம் அமைத்து வழிபட்டான். அப்பரடி களும் சென்று வழிபட்டுத்

"தலையெல்லாம் பறிக்குஞ் சமண் கையருள்
நிலையினல் மறைத்தால் மறைக்
கொண்ணுமோ"

எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடிச் சிலநாள் தங்கிப் பணிபுரிந்தார்.

## 16. திருப்பைஞ்ஞீலியருகில் பொதி சோறு பெறுதல்

திருப்பழையாறை வடதளியினின்றும் பலதலங்களையும் வணங்கிக் கொண்டு திருப்பைஞ்ஞீலிக்கு எழுந்தருளினர். அப் பொழுது பசியும் நீர்வேட்கையும் வருத்தி யது. உடல் தளர்ந்தாலும் மனம் தளரா வாகீசர் வரும் வழியில் பைஞ்ஞீலி இறைவர் சோலையும், குளமும் தோற்றுவித்துத் தாம் ஒரு அந்தணர் கோலத்தில் பொதிசோறு சுமந்து சென்று நாவரசருக்கு அளித்து அருந்தச் செய்தார். உணவு அருந்திக் களைப்புநீங்கிய நாவரசரை அந்தணர் வடிவு கொண்ட இறைவன் பைஞ்ஞீலிக்கு அழைத்துச் சென்று மறைந்தருளினர். அவ் வதிசயம் கண்டஅப்பரடிகள் பதிகம் பாடித் துதித்தார்.

## 17. திருவையாற்றில் கயிலைக் காட்சி

பைஞ்ஞீலிப் பரமனைப் பரவிய நாவரசர் நடுநாட்டுத் தலங்களையும் தொண்டை நாட்டுத் தலங்களையும் தரிசித்து திருக் கயிலை யாத்திரையை மேற் கொண்டார். இமயமலைப் பகுதியில் கரடுமுரடான பாதை களில் நடந்தும் ஊர்ந்தும் நகர்ந்தும் உடலுறுப்புக்களெல்லாம் தேய்ந்து சோர்ந் தார். இந்நிலையில் கயிலைப்பெருமான் முனிவர் வேடம்தாங்கி நாவரசர் முன் தோன்றி "மனிதரால் அடையத்தக்கதன்று திருக்கயிலை" என்று அறிவித்தார். அது கேட்ட அரசர் "ஆளும் நாயகன் கயிலையில் இருக்கை கண்டல்லால் மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்" என்று உரைத்தார். அவரது மனத்திண்மை கண்ட பெருமான் மறைந்து, ஓங்கும்நாவினுக்கரசனே எழுந்திரு, என்று அசரீரி அருளினர். அது கேட்டு ஊறுநீங்கிய உடலுடன் எழுந்த நாவரசர் கயிலைக்காட்சி வேண்டிப் பணிந்தார். இறைவன் 'அருகில் உள்ள இத்தடாகத்தில் மூழ்கித் திருவையாற்றை யடைந்து அங்கு நம் திருக்கயிலைக்காட்சியைக்காண்பாயாக' என்று அருளினர். அவ்வாறே அருகில்உள்ள தடாகத்தில் மூழ்கி ஐயாற்றில் உள்ள திருக் குளத்தில் எழுந்து திருக்கயிலையிலுள்ள காட்சியைக் கண்டு "மாதர்ப் பிறைக் கண்ணியானை" என்ற திருப்பதிகம் பாடிப் பரவினர்.

## 18 திருப்பூந்துருத்தியில் திருமடம் அமைத்தல்

கயிலைக் காட்சி கண்ட திருநாவுக்கரசர் திருமழபாடி முதலிய தலங்களை வணங்கி, திருப்பூந்துருத்தியையடைந்துஇறைவனைத் தொழுதார். அங்குப் பலநாள் தங்கிப் பணி புரிய விரும்பியதால் திங்களும் ஞாயிறும் தோயும் திருமடம் ஒன்று அமைத்தார். உழவாரப்பணி புரிந்ததோடு திருவங்கமாலை முதலிய பல தொகைத் திருப்பதிகங்களையும் அருளிச்செய்தார். இந்நிலையில்பாண்டிநாடு சென்று சிவநெறி பரப்பிய திருஞானசம்பந்தர் சோழநாட்டிற்கு வந்து திருநாவுக்கரசர் திருப்பூந்துருத்தியில் எழுந்தருளியிருப்பதைக் கேள்வியுற்றுத் திருப்பூந்துருத்திக்கு எழுந்தருளினர். அஃதறிந்த திருநாவுக்கரசர் ஞானசம்பந்தரை நேரேகண்டு கும்பிட வேண்டுமென்ற விருப்பினராய் அடியவர் எவரும் அறியா வண்ணம் ஞானசம்பந்தர் எழுந்தருளியபல்லக்கைச் சுமந்து வந்தார். திருப்பூந்துருத்திக்குஅருகில் வந்த ஞானசம்பந்தர் 'அப்பர் எங்குற்றார்' என வினவ' உம்முடைய அடியேன் உமது திருவடிகளைத்தாங்கும்பெருவாழ்வுவந்து எய்தப் பெற்று இங்குற்றேன்' என்றார் அப்பர். அது கேட்ட பிள்ளையாரும் சிவிகையினின்றும் இறங்க ஒருவரை ஒருவர் வணங்கி மகிழ்ந்து சிலநாள் அத்தலத்து எழுந்தருளியிருந்தனர்.

## 19. அரம்பையர் வலையில் அகப்படாதிருத்தல்

திருநாவுக்கரசர் பாண்டி நாட்டுத்தலங்களைத் தரிசித்து சோழநாடு மீண்டு திருப்புகலூரையடைந்து உழவாரப்பணி செய்து கொண்டு அங்கேயே தங்கியிருந்தார்' அப்பொழுது க்ஷேத்திரக்கோவைத் திருத்தாண்டகம் முதலிய பல பதிகங்கள் பாடினார். புகலூரிறைவன் திருக்கோயில் முற்றத்தில் உழவாரப்பணி செய்யும்பொழுது இறையருளால் பொன்னும் நவமணிகளும்தோன்றின. அவற்றையெல்லாம் கல்லோடும்புல்லோடும் தூக்கி எறிந்தார். இவரது நடையருப்பெருந்துறவை இறைவன் நாட்டிற்கு எடுத்துக் காட்டத் தேவ அரம்பையர்களை இவர் முன்னர்த் தோற்றுவித்தார். அவர்களது ஆடல் பாடல்களாலும் இவரது உள்ளம் மாறுபடவில்லை. மாறுபடா மாண்பைப் "பொய்மாயப் பெருங்கடலில்" என்று தொடங்கும் திருத்தாண்டகப் பதிகத்தால் அருளியுள்ளார்.

## 20. திருப்புகலூரில் சிவன்தாள் சேர்தல்

பக்தியின் வடிவுகொண்ட திருநாவுக்கரசர் மெய்யருளையடையுங்காலம் அணித்தாகவிருப்பதையறிந்து ஆண்டவனது புகலாகிய, அடைக்கலப் பொருளாகியதன்னைப் புகலூர்ப்பெருமான் சேவடிக்கீழ் இருத்துவார் என்ற கருத்துடன் பல திருப்பதிகங்கள் பாடி, முடிவாக "எண்ணுகேன் என்சொல்லி எண்ணுகேனே" என்று தொடங்கும் திருத்தாண்டகத்தை அருளிச்செய்து அதில் 'புண்ணியா வுன்னடிக்கே போதுகின்றேன்; பூம்புகலூர் மேவிய புண்ணியனே" என்று புகன்று ஒரு சித்திரைச் சதய நன்னாளில் திருவடி நீழலில் இரண்டறக் கலந்தார்.

### சமயாசாரியர் குருபூசை நாட்கள்

சித்திரைச் சதயம் அப்பர் சிறந்த
வைகாசி மூலம்
அத்தரைப் பணிசம்பந்தர் ஆனிமா
மகத்தில் அந்த
முத்தமிழ் வாதவூரர் முதியநல் ஆடி
தன்னில்
சுத்தமாம் சோதி நாளில் சுந்தரர்
கயிலை சேர்ந்தார்.

### சந்தானாசாரியர் குருபூசை நாட்கள்

சித்திரை யத்தம் உமாபதி ஆவணித்
திங்கள் தனில்
உத்திரம் சீர்கொள் மறைஞான
சம்பந்தர் ஓதுகன்னிச்
சுத்தமெய்ப் பூரம் அருணந்தி ஐப்பசிச்
சோதிதன்னில்
வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி
மேவினரே.

### நால்வர் வயது

அப்பருக் கெண்பத்தொன் றருள் வாத
வூரருக்குச்
செப்பிய நாலெட்டில் தெய்வீகம்–இப்
புவியில்
சுந்தரர்க்கு மூவாறு தொன்ஞான
சம்பந்தர்க்கு
அந்தம் பதினா றறி.

# அப்பர் தேவாரத்தில் விநாயகர்

புலவர் இரா. செல்வக்கணபதி, சென்னை

**கல்லார்கட் பட்ட திரு:**

செறிந்து வளர்ந்து நின்றது அந்தக் காடு. கதிரவனின் ஒளிவெள்ளம் அதன் ஊடே புகமுயன்று தளர்ச்சியுற்றது. அமைதிகொண்ட அக்காட்டிடையே கடுந்தவம் இயற்றி நிற்கிருள் ஓர் இளம் பெண். அவள் ஓர் அரக்கர் குலக் கொழுந்து. வசிட்டர் மரபில் வந்தவர் மரகத முனிவர். அவர் பால் அருள்பெற விரும்புகிருள் விபுதை என்ற பெயர் கொண்ட அந்நங்கை. தவமேற்கொண்ட முனிவர் ஒருநாள் கண்விழிக்கிருர். அவர் பார்வையில் காதல் மடப் பிடியொன்று களிற்ருெடு மருவிநிற்கும் காட்சி படுகிறது. முனிவர் காமக் குறிப்பில் ஆழ்கிருர். அவர் குறிப்புணர்கிருள் விபுதை. முனிவர் அருகில் நெருங்குகிருள். காம வயப்பட்ட முனிவர் விபுதையைப் பெண்யானையாக்கி, தானேர் ஆண்யானை வடிவால் அவளொடு கூடிக் கலக்கிருர். இக் கூட்டக் கலப்பில் யானை முகத்துடன் கயாசுரன் தோன்றி, சிவபெருமானை நோக்கிக் கடுந்தவம் இயற்றுகிருன். பெருமான் அருளால் பெருவரம் பெற்று மதங்கபுரத்தில் அரசாள்கிருன் கயாசுரன். 'கல்லார் கட் பட்ட திரு' வென்ன அவன் தவங்கள் தேவர்களை வருத்தப் பயன் படுகிறது.

**கணபதி தோற்றம் :**

தேவர்கள் சிவபெருமானைப் பரவுகின்றனர். பெருமான் உமையைப் 'பிடியதன் உரு' கொளச்செய்கிருர். 'கரியது வடிவு' தான் கொள்கிருர். இக் கூட்டக்கலப்பில், 'வழிபடும் அவர் இடர் கடி கணபதி' தோன்றுகின்ருர். தோன்றி, தன் கொம்பினை ஏவி கயாசுரனை அழிக்கிருர், தேவர்கள் மகிழ்கின்றனர். கயாசுரன் பெருச்சாளி வாகனமாய் விநாயகரைத் தாங்குகிருன்.

இவை கந்தபுராணம். விரிக்கும் கதை.[1] இந்த விரிந்த கதைக்கு அடியிட்டவர் அப்பர் பெருமான். விநாயகக் கடவுள் தோற்றத்திற்கு அவர் கூறும் காரணம் இப்படி அமைகிறது.[2] அடியார்களும், மறைவல்லாரும் எதிர் கொள்ளத் திருவீழிமிழலை எய்திய ஆளுடை அரசர் திருவீழிமிழலையானைப் பணிந்து பாடுகிருர் "போலும்-போலும்" என முடிவடையும் தொடர்களால் இறைவன் இயல்பை எடுத்தோதி வியக்கும் அரசர் விநாயகன் தோற்றத்தை விளங்க வரைகிருர்

[3] "கைவேழ முகத்தவனைப்
படைத்தார் போலும்
கயாசுரனை அவனுற்கொல்
வித்தார் போலும்"

என்றெடுத்து, தேவர் குலம் வாழ, அரக்கர் திறம் மாள வந்த விநாயகர் தோற்றத்தை விளைத்த பெருமானை வியந்து சிறக்கிருர்.

**முதற்குறிப்பு:**

விநாயகர் வழிபாடு தமிழர்க்குத் தொன்மையானது. தமிழ் மண்ணில் அவ்வழிபாடு வந்த வகைபற்றிய கருத்து வேற்று

1. கந்தபுராணம்–கயமுகன் உற்பத்திப்படலம்.
2. திருநாவுக்கரசர் புராணம்–253.
3. ஆருந் திருமுறை–533.

மைகள் எத்தனையோ உண்டு. சங்க இலக்கியம் எனப் பேசப் பெறும் தொகையும் பாட்டும் விநாயகர் வழிபாட்டை விளக்கவில்லை. முருகனும்—உருத்திரனும், பலராமனும்—திருமாலும் அங்கே திகழ்ந்து நிற்கிறார்கள். விநாயகர் விளங்கித் தோன்றவில்லை. சங்க இலக்கியத்திற்குப் பிற்பட்ட கீழ்க்கணக்குநூல்களுள் தொன்மையான வற்றுள்ளுஞ்சரி, சிலகாப்பியங்களுள்ளும் சரி, விநாயகரைக் காணோம். கல்லாடத்தில் விநாயகர் குறிப்புண்டு. தற்கால ஆய்வால் கல்லாடம் தேவாரத்திற்குக் காலத்தால் பிற்பட்டது என நிறுவப்பட்டது. இக்கருத்து உண்மையானால் விநாயகரைப்பற்றிய முதற் குறிப்புக்களைத் தருவன மூவர் தேவாரங்களே என்பது வலிமை பெறும்.

## மூவர் நெறி:

மூவர் தேவாரத்துள்ளும் விநாயகர் பற்றிய குறியீடுகள் மிகச்சிலவே. திருஞான சம்பந்தப் பிள்ளையார் [4] இரண்டிடங்களிலும், சுந்தரமூர்த்திகள் [5] ஓர் இடத்திலும் விநாயகரைப் பற்றிக் குறித்தருளினர். சம்பந்தர் தேவாரம் விநாயகர் வந்த வரலாறு கூறி, அவர் தோற்றம் விளக்குகிறது. சுந்தரர் தேவாரம் கேலி பேசுகிறது. அப்பரடிகள் மட்டுமே விநாயகர் பற்றிய பல குறிப்புக்களை ஆங்காங்கே விளக்கிச் செல்கிறார். ஐந்து திருப்பாடல்களுள் அவர் ஐங்கரனின் திறம் பேசுகிறார். அவற்றுள்ளும் நான்கு திருப்பாடல்கள் தாண்டகத்துள் அமைகின்றன.

கண்ணுதற் பெருமானையன்றிச் சிறு தெய்வம் எவற்றையும் பாடுதல் செய்யா மதுகையுடையவர்கள் தேவார மூவர்- அப்பரடிகள் தேவாரத்துள் விநாயகர் பற்றிய குறிப்புக்கள் யாவும் சிவபெருமானின் பேரருளை வியக்கும் முகத்தான் அமைந்தனவே -யன்றி, விநாயகருக்குரிய தோத்திரங்கள் எவையுமில்லை. பிற தெய்வங்கள் பற்றிய குறிப்புக்களும் இந்த அடிப்படையில் மட்டுமே அமையக் காண்கிறோம். உமையம்மையார்க்குக்கூடத் தனியே வாழ்த்துரைக்காத வன்மையினைத் தேவார மூவரிடம் காண முடிகிறது.

## அடிகள் காட்டும் ஐங்கரன்:

ஐந்து கரத்தினனாய அப் பெருமானுக்கு அப்பரடிகள் வழங்கும் பெயர்கள் பல. [6]'கணபதி' [7]'விநாயகன், [8]'விக்கினவிநாயகன், [9] கை வேழமுகத்தவன், [10] தண்கடமா முகத்தினன் என ஐந்து திருநாமங்களைக் குறிப்பித்தருளுகிறார். இவற்றுள் 'கணபதி' என்ற திருநாமம் மட்டும் ஏனை இரு தேவார ஆசிரியர்களாலும் அங்ஙனமே எடுத்தாளப் பெறக் காண்கிறோம். அப்பரடிகள் இங்ஙனம் பல திருநாமங்களைச் சுட்டுவதோடு மட்டும் அமையாது, விநாயகரது தோற்றம், அருள் தன்மை போன்ற சில குறிப்புக்களையும் இணைத்துப் பேசிச் செல்கிறார்.

## கணபதி என்னும் களிறு:

அமணர்கள் வஞ்சனையுணர மாட்டாத பல்லவ வேந்தன், சைவம் மீண்ட அப்பர் பெருமானுக்கு இழைத்த தீமைகள் எண்ணில. பல்லவன் ஏவலில் தன்னை இடற ஏவப்பெற்ற பட்டத்து யானைக்கு அஞ்சாத திண்மையராய் அப்பரடிகள் அருளிய பதிகம் [11] 'சுண்ணவெண் சந்தனச்சாந்தும்' என்று தொடங்கும் அற்புதப் பதிகமாகும். இப்பதிகத்தேதான் விநாயகரைப் பற்றிய முதற் குறிப்பினை அப்பரடிகள் அருள்கிறார். கடகளிற்றினையும் கண்டஞ்சா உள்ள உறுதிக்குக் காரணங்களைக் காட்டி வரும் அடிகள் விநாயகனின் விளக்கத்தைக்குறிக்

---

4. முதல் திருமுறை—வலிவலம் : இரண்டாம் திருமுறை-சீகாழி
5. ஏழாந் திருமுறை-ஒணகாந்தன்தளி.
6. நாலாந்திருமுறை—திருவதிகை வீரட்டானம்
7. ஆறந்திருமுறை—திருவாய்மூர்.
8. ,, —திருப்புறம்பயம்.
9. ,, —திருவீழிமிழலை.
10. ,, —திருவேகம்பம்.
11. நாலாந் திருமுறை—திருவதிகை வீரட்டானம்

கிறார். கணபதி என்னும் களிற்றையும், இரு சுடரையும், கயிலாய மலையையும் கெடிலத்தையும் உடைய வீரட்டானத்துப் பெருமானின் தமர் யாம் என்ற பெருமித உணர்வைப். பேசிச் சிறக்கிறார்' கணபதி என்னும் களிற்றையுடைய பெருமான் என சிவபெருமானைக் குறிப்பித் தருளுதலாலே அப்பரடிகள் ஓர் சிறப்பினை உணர்த்த விரும்பியிருத்தல் திண்ணமாகிறது, கணபதி என்னும் களிறு என்று மட்டும் குறியாது,

> "பலபல காமத்த ராகிப் பதைத்தெழு
> வார் மனத் துள்ளே
> கலமலக் கிட்டுத் திரியும் கணபதி
> யென்னும் களிறு"

என அக் களிற்றின் இயல்பினையும் உடன் விளக்கிப் போகிறார். இக்கருத்தினையே, 'தனதடி வழிபடு மவரிடர் கடி கணபதி' என ஞானப்பிள்ளையார் குறிப்பிக்கக் காண்கிறோம். வேண்டுவார்க்கு வேண்டுவன வற்றை எல்லாம் ஒன்றொடு ஒன்று கலந்து, பெற்றமுறையன்றிப் பிறழ்ந்து பயன் தரும் பேரருளாளனாக விநாயகரைக் குறித்தருளும் சிறப்பு அப்பரடிகளின் அப்போதைய மனநிலையை மதிப்பிட உதவுதலைக் காண்கிறோம். தடைகளைத் தகர்த்து அருள் பாலிக்கும் விநாயகரையும் உடைய திருவதிகை வீரட்டத்து இறைவனின் தமர்யாம் என்ற குறிப்பில் விநாயகனது அருளிப் பாட்டையும் சிவபெருமானை வணங்குதல் ஒன்றிலேயே பெறுதல் கூடுமென எண்ணும் அப்பரடிகளின் கருத்து விளங்கித் தோன்றக் காண்கிறோம். அத்தொடரால் 'கணபதி' என அவ்விறைவன் திருநாமமும், 'களிறு' என வடிவமும் குறிப்பிக்கப் பெறும் சிறப்பையும் அறிய முடிகிறது.

### வரலாற்றுப் போக்கில்....

இங்கே குறிப்பிடப் பெற்ற விநாயகர் பற்றிய குறிப்பைப் பற்றி வேறொன்றையும் எண்ணிப் பார்த்தல் வேண்டத்தக்கதாகும். அப்பரடிகள் சமணம் விட்டு சைவத்துக்கு மாறியவுடன், பல்லவ மன்னன் இழைத்த தீமைகள் பலவற்றுள் யானையை ஏவியதும் ஒன்று. அக்காலை எழுந்த திருப்பதிகமே 'சுண்ணவெண் சந்தனச் சாந்தும்' என்ற திருப்பதிகம் என்பது பெரியபுராணத்தால் நன்கு விளக்க முறுதல் கண்கூடு. எனவே, அப்பரடிகள் சைவம் சார்ந்த ஆரம்பகாலத்தில் அருளப் பெற்றது இத்திருப் பதிகம் என்பது உறுதியாகிறது. இத் திருப்பதிகத்துள் விநாயகர் பற்றிய குறிப்பிருத்தலை மேலே கண்டோம்.

பெரியபுராணத் துணைக்கொண்டும், பிற சான்றுகளாலும் நுண்ணிதின் ஆராய்ந்த தற்கால வரலாற்றாசிரியர்கள்[12] பலரும் அப்பரடிகள் சமணம் விட்டு சைவம் சார்ந்தது கி.பி. 630-க்கு ஒன்றிரண்டாண்டு முன் பின்னாதல் வேண்டுமென வரையறுக்கின்றனர். எனின், திருஞானசம்பந்தர் திருவவதாரஞ் செய்த காலமோ கி.பி. 638 ஆம்ஆண்டை ஒட்டியதாதல் வரலாற்று ராய்ச்சியால் உறுதிப்படுகிறது. இவ்விரு முடிவும் உறுதி செய்யப்படுமானால் திருஞானசம்பந்தரின்[13] "பிடியதன் உரு" என்று தொடங்கும் விநாயகர் பற்றிய குறிப்பினைத்தரும் தேவாரம் எழுந்ததற்கு ஏறத்தாழ பதினைந்தாண்டுகட்கு முன்னரே அப்பரடிகளின் 'சுண்ணவெண் சந்தனச் சாந்தும்' என்று தொடங்கும் விநாயகர் பற்றிய குறிப்புடைய பதிகம் எழுந்ததாதல் உறுதிப்படும். படவே, விநாயகரைப்பற்றிய முதற்குறிப்பினைக் குறிப்பித்தருளிய பெருமை அப்பரடிகட்கே உரியதாதல் பெறப்படும். தொகுப்புமுறையால் இத்திருப்பதிகம் நான்காம் திருமுறையதாயினும், கால ஆய்வால் தமிழிலக்கியத்தினுள்ளேயே விநாயகர் பற்றிய முதற்குறிப்பினைத்தருவதான பெருமையைப் பெறுகிறது. நாலாந் திருமுறையுள் இத்திருப்பாட்டு ஒன்றே விநாயகர் குறிப்புடையது.

### ஒரு சிற்றாராய்ச்சி :

ஐந்தாம் திருமுறையில் விநாயகர் பற்றிய குறிப்புக்கள் ஏதுமில்லை.எனினும், சிலர் திருப்பேரெயில் குறுந்தொகையுள் அமைந்துள்ள

> [14] "முன்னை யார்மயி லூர்தி முருகவேள்
> தன்னை யாரெனின் தானோர் தலைமகன்
> என்னை யாளு மிறையவ னெம்பிரான்
> பின்னை யாரவர் பேரெயி லாளரே."

---

12. தஞ்சை சீனிவாசம்பிள்ளை - தமிழ் வரலாறு: பாகம், I
    க. வெள்ளைவாரணம் - பன்னிரு திருமுறை வரலாறு: பாகம் I
13. முதல் திருமுறை- வலிவலம்.
14. ஐந்தாந் திருமுறை- பேரெயில்.

என்ற திருப்பாடலை எடுத்துக்காட்டி, இதன் கண் வரும் முன்னையார், என்ற சொல் விநாயகரைக் குறிப்பித்த தென்கின்றனர் இரண்டாவது வரியில் 'தம்' எனப்பன்மை பேசாது 'தன்' என ஒருமை பேசியமை கொண்டே அங்கு முருகனைப்பற்றிய குறிப்பு மட்டுமே யுண்டு என்பது பெறப்படும். மேலும் 'முன்னையார்' என்பது நான்காம் வரியில் உள்ள 'பின்னையார், என்பதனெடு கருத்து வகையால் இணைந்து, பேரெயில் இறைவன் 'முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப்பழம் பொருளாகவும், பின்னைப் புதுமைக்கும் பெயர்த்துமப்பெற்றிய'னுகவும் திகழும் பெருமான் எனவே சுட்டிநின்றது எனக் கொள்வதே ஏற்புடைக் கருத்தாகும். கொண்டு கூட்டிப் பொருள் காணுதற்கும் இங்ஙனம் இயைத்தலே இணக்கமாவதை நுண்ணிதின் உணர்தல் கூடும்.

### விக்கின விநாயகன்:

இனி ஆருந்திருமுறையில் அப்பரடிகள் திருப்புறம்பய இறைவனைப் போற்றிசைக்கும் அடியார் கூட்டத்துள் ஒருவராக விநாயகரை 'விக்கினவிநாயகன்' எனப் பொதுப்படக் குறித்தமையான், தம்மை வழிபடுவார்க்கு இடையூற்றைப் போக்குதலும், வழிபடாதார்க்கு இடையூற்றையாக்குதலும் உடையன் என்ற கருத்துப் பெறப் படுதலை அறிய முடிகிறது. பிற்காலத்து எழுந்த விநாயகர் பற்றிய கதைகள் பலவும் இவ்விருவகைப் பொருளையும் விளக்க முயல்வதை அறிய முடிகிறது.

### வேழ முகத்தவன்:

திருவீழிமிழலைத் திருத்தாண்டகத்துள் கைவேழமுகத்தவன், எனத் துதிக்கையொடு கூடிய திருமுகத்தினன் என விநாயகர் வடிவுரைத்த செய்தியையும், கயமுகா அசுரனை விநாயகரைப் படைத்து அழிப்பித்த செய்தியையும் முன்னரே விளங்கக் கண்டோம்.

இனித் திருவேகம்பத் தாண்டகத்துள் 'தண்கடமா முகத்தினுர்க்குத் தாதை காண்' எனக்குறிப்பித்துச் செல்லும் அப்பரடிகள் மதநீரொழுகும் விநாயகர் திருமுகச் செவ்வியுரைத்து, அவர் சிவபெருமான் மகனுர் என்ற கருத்தை ஊன்றிச் செல்வதைக் காணமுடிகிறது.

### எங்கும் விநாயகர்:

இறுதியாக வாய்மூரடிகளைத் தாம் கண்ட அனுபவம் உரைக்க வந்த அடிகள் 'மெல்லியலும் விநாயகனும் தோன்றக்கண்டேன்' என உமையோடு விநாயகரின் ஒருங்கிணைந்த காட்சியைச் சுட்டி உமை மைந்தனுக அவரை உலகுக்குணர்த்துகின்றுர். இங்ஙனமாக விநாயகர் பற்றிய பல்வேறு குறிப்புக்களை அப்பர் தேவாரத்தில் காண முடிகிறது. இத்தகு கருத்துக்களை ஒன்று படுத்தி நோக்குதல் பல சமய உண்மைகளை நெறிநின்று காணுதற்குப் பயன் படுதல் கூடும். விநாயகர் பற்றிய அடிப்படைக் குறிப்புக்களை அப்பரடிகள் முதன் முதல் வழங்க இன்றுே, விநாயகர் பற்றிய குறிப்பில்லாத சைவ-சமய இலக்கியங்களே இல்லை என்ற நிலைமைக்கு வளர்ந்து விட்டிருப்பதைக் காணமுடிகிறது.

---

## இதிகாசத்துள் அப்பர் தோத்திரம்

### சிவரகசியம் :

''கதிரு லாவிய சபைதொறுங் காலொன்று தூக்கி
யதிர வீசிநின் ருடிய தாண்டவத் தவர்க்கே
மதுர மாத்திருத் தாண்டகச் செந்தமிழ் வகுத்த
சதுர ளுவினுக் கரையன்றன் சரணமே சரணம்''

# கல்லெழுத்துக்களில் திருநாவுக்கரசர்

திரு கே. எம். வேங்கடராமையா, எம்.ஏ., எம்.ஓ.எல்., திருப்பனந்தாள்

## முன்னுரை

சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் சுந்தரரும் திருநெறிய மெய்ஞ்ஞானத் தமிழ் பாடிச் சைவம் பரப்பியவராவர். இம் மூவரும் பல்லவப் பேரரசு நிகழ்ந்தகாலத்தில் திகழ்ந்தவர். சுந்தரர் தம் நாளிலும் தமக்குமுன்னும் இருந்த அடியார்களைத் திருத் தொண்டத் தொகையால் துதித்தார். அந்நாள் முதல் பெரிய புராணம் பாடப் பெற்றது வரையிலும், அதற்குப் பின்னும் செந்தமிழ் நாட்டுச் சான்றோர் அளவிலாத பெருமை யுடைய அடியார்களை அமயம் வாய்ப்புழி யெல்லாம் போற்றியுள்ளனர் என்று கல்லெழுத்துக்களால் அறிய வருகின்றது. திருநாவுக்கரசரைப் பற்றிக் கல் வெட்டுக்களினின்று அறியப் படுவனவற்றுள் சில காண்போம்.

## பெயர்

திருநாவுக்கரையர் என்றும், வாசீகர் என்றும் இவர் குறிக்கப் பெறுகிறார். தஞ்சைப் பெரிய கோயில் கட்டப் பெற்றதும் முதல் ஸ்ரீகாரியம் ஆராய்கின்ற அலுவலனாகத் திகழ்ந்தவன் பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்த வேளான். இவன் தஞ்சைப் பெரிய கோயிலில் எழுந்தருளுவித்த பிரதிமங்களுள் ஒன்று திருநாவுக்கரையர் பிரதிமம்.[1] தஞ்சைப் பெரிய கோயிலில் முதல் இராசராசனது 29-ம் ஆட்சியாண்டில் (கி. பி. 1014-ல்) "உடையார் ஸ்ரீராஜராஜீச்வர முடையார்க்குத் திருப்பதியம் விண்ணப்பம் செய்ய உடையார் ஸ்ரீராஜராஜ தேவர் குடுத்தபிடாரர்கள் நாற்பத்தெண்மர்" என்று ஒரு கல்வெட்டிலுள்ளது.[2] இந்நாற்பத் தெண்மருள் 8 பேர் திருநாவுக்கரையர் பெயரைப் பூண்டிருந்தனர் என்பது அக் கல்வெட்டால் அறியப்படுவதுள் ஒன்று.

முதற் குலோத்துங்கன் காலத்திலும், அவன்மகன் விக்கிரம சோழன் காலத்திலும் படைத்தலைவனாகத் திகழ்ந்தவன் மணவில் கூத்தன் காலிங்கராயன் எனப் பெறுவான். இவன் தில்லையிலும் திருவதிகையிலும் செய்த சிவப்பணிகள் அளப்பில. அவற்றைத் தில்லையம் பதியில் கல்லெழுத்தாக அமைந்துள்ள 36 வெண்பாக்களாலும், திருவதிகை வீரட்டானத்தில் சிலாசாசனம் செய்யப் பெற்றுள்ள 25 வெண்பாக்களாலும் அறியலாம். இவன் திருவதிகையில் திருநாவுக்கரசர்க்குத் திருக்கோயில் கட்டினான்.

"ஈசன் அதிகையில்வா கீசன் எழுந்தருள
மாசில் பெருங்கோயில் வந்தமைத்தான்"

என்பது திருவதிகைச் சாசனத் தமிழ்க் கவியாகும். இதில் திருநாவுக்கரசர் வாகீசர் எனப் பெற்றமை காண்க.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருஞான சம்பந்தரைச் சீகாழியில் முதன் முதல் சந்தித்தபொழுது வணங்கத் திருஞான சம்பந்தர் "அப்பரே" என்றழைத்தருளியதாகப் பெரியபுராணம் பகரும். எம்மண்டலமும் கொண்டருளிய ஸ்ரீகுலசேகர தேவர்க்கு யாண்டு 18 வதில் அளித்த பில்லமங்கலம் ஆகமசீலிசுவரர் கோயில் கல்வெட்டில் கையெழுத்திட்டமகேசுவரர்களில் ஒருவர்பெயர் "அப்பர்" என்பது என்று அறிய வருகிறது.[3]

1. S. I. I., Vol. II, Part II, No. 38.
2. S. I. I., Vol. II, Part III, No. 65.
3. புதுக்கோட்டைச் சாசனங்கள், எண் 397.

இரண்டாம் குலோத்துங்கனுகிய அநபாயன் சைவசமயகுரவர் மூவரிடத்தும் மிக்க பற்றுடையவன். அவர்தம்படிவங்களைத் திருவாரூர் திருமூலட்டானமுடையார் கோயிலில் எழுந்தருள் வித்தான். தனது ஏழாவது ஆட்சியாண்டில் ஆளுடைய நம்பிக்கும், பரவை நாச்சியார்க்கும் அர்ச்சனு போகமாக அநபாயநல்லூர் என்ற மருகல் நாட்டுத் திருவாதிரைமங்கலம் என்ற ஊரை அளித்தான். ஆளுடைய பிள்ளையார்க்கும் திருநாவுக்கரசு தேவர்க்கும் வேண்டும் அர்ச்சனைகளுக்குமாக 12 ஆவது ஆட்சியாண்டில் மருகல் நாட்டுக் கங்கை கொண்ட சோழ நல்லூரான சிவபாத சேகர நல்லூரை அளித்தான்.[4] இத்தமிழ்க் கல்வெட்டோடு தொடர்ந்த [5] வடமொழிக் கல்வெட்டில் தேவாரமூவர் ''ப்ரஹ்ம புரீச (சம்பந்தர்) வாகதிபதி (திருநாவுக்கரசர்) ஸ்வஸ்வாமி மித்ர'' (சுந்தரர்) என்று குறிக்கப் பெற்றுள்ளனர். இதனுல் திருநாவுக்கரசர் வாகீசர் (வாகதிபதி) என்று வழங்கப் பெற்ருர் என்றும் அறியப்பெறும்.

மேர்படி கல்வெட்டில் சுந்தரர் ஆளுடைய நம்பி என்றும், சம்பந்தர் ஆளுடைய பிள்ளை என்றும் கூறப் பெற்றதினின்று திருநாவுக்கரசர் ஆளுடைய அரசு என்று கூறப் பெற்றிருத்தல் கூடும் என்று ஊகித்தறியலாம்.

தாராசுரத்து இராச ராசேச் சுரத்து இறையகப் புறச் சுவரில் கண்ட சிற்பக் கீழ்க் கல்லெழுத்துக்களில் ''திருநாவுக்கரசாண்டார் கதை'' என்று எழுதப் பெற்றுள்ளது. இறைவன் திருவடி சூட்டும் நிலையில் அச்சிற்பம் அமைந்துள்ளது. திருப்பனந்தாள் செஞ்சடையப்பர் கோயிலில் உள்ள திருத்தொண்டத் தொகைச் சிற்பங்களில் திருநாவுக்கரசர் உழவாரப் படையுடன் இருத்தல் கவனித்தற்குரியது.

திருவீழிமிழலையில் திருநாவுக்கரசு தேவர் திருமடம் என்று ஒருமடம் இருந்ததாக [6] ஒருகல்லெழுத்து நுவல்கிறது. அதில் திருமடத்துக்குரிய நிலங்களின் பெயர் கூறப் பெற்றுள்ளது.[7] இன்னெருசாசனம் மாகேசுவரருக்கு உணவளித்தற் பொருட்டு ஷ திருமடத்துக்கு நிலமளித்த செய்தியைக் கூறுகிறது.

## சொற்றுணை

திருநாவுக்கரசர் கல்லிற் பிணிக்கப் பெற்றுக் கடலிற் பாய்ச்சப் பெற்ற பொழுது பாடப் பெற்றது ''சொற்றுணை வேதியன்'' என்ற பதிகமாகும். ''மதுரையும் ஈழமுங் கொண்ட கோப்பரகேசரி பன்மற்குயாண்டு 41ஆவது... திருவாமாத்தூருடைய மகாதேவற்கு.... தேவன் சொற்றுணை அகமுடையான் செட்டங்கை வைத்த திரு நொந்தா விளக்கு'' [8] என்ற திருவாமாத்தூர்க் கல்வெட்டிலும், ''விக்கிரம சோழ தேவர்க்கு யாண்டு மூன்ருவது... வாகூருடையான் சொற்றுணை கங்கை சடைக்கரந்தானிடை நாங்கள் கொண்ட காசாவது'' [9] என்ற திருச்செந்துறைக் கல்வெட்டிலும் ''சொற்றுணை'' என்பது மக்கட் பெயராயமைந்திருத்தலைக் காணலாம்.

## கங்கை சடைக்கரந்தான்

மேற்கண்ட திருச்செந்துறைக் கல்வெட்டில் கண்ட வாகூருடையான் சொற்றுணை என்பானுக்குக் கங்கைசடைக்கரந்தான் என்றும் பெயரிருத்தலைக் காணலாம். ஷ திருச்செந்துறைக் கல்வெட்டின் இறுதியில் பிற்கண்ட வெண்பா உள்ளது :—

" உண்ணலாம் நெய்யொடுசோ
றுவாதே யெப்பொழுதும்
பண்ணெலாம் பாடியிருக்கலாம்—
மண்ணெலாம்
அகன்மாட நீடூர்கூர் கங்கை சடைக்
கரந்தான்
பொன்மாடத்தெப்பொழுதும் புக்கு.''

''கங்கைசடைக்கரந்தான்'' என்ற பெயர் திருநாவுக்கரசருடைய '' வங்கமலிகடல் '' என்ற தேவாரத்து ''கங்கைசடைக்கரந்தாய் அக்கள்ளத்தை மெள்ள உமை நங்கை

4. 485 of Vol. VII ; 269 of 1901.
5. 397 of Vol. IV.
6. 402 of 1908.
7. 583 of 1908.
8. S. I. I., 734 of Vol. VIII, 418 of 1903.
9. S. I. I., 606 of VIII, 297 of 1903.

யறியிற் பொல்லாது கண்டாய்'' என்ற பகுதியை நினைவூட்டும்.

## சிலந்தியைச் சோழனுக்கினுன்

பண்டொருகால் ஒரு சிலந்தி திருவானைக்கா எம்பெருமாற்குக் கூடுகட்டி வழிபட்டு வந்தது. அப்பெருமானை ஒரு யானையும் வழிபட்டு வரலாயிற்று. சிலந்தி கட்டும் கூட்டை 'அநுசிதம்' என்று கருதிய யானை அக்கூட்டை அழிக்கலாயிற்று. யானை தன் கூட்டினை அழித்தலைப் பொருத சிலந்தி யானையின் துதிக்கையிற் புக, யானை உயிர் நீத்தது; சிலந்தியின் உயிரும் பிரிந்தது. எனினும், சிலந்தி மறுபிறவியில் அரசனுயிற்று. அவ்வரசனேகோச்செங்கட்சோழன். இங்ஙனம், சிலந்தி சோழனுனமையைத் திருநாவுக்கரசர்,

''சிலந்தியும் ஆனைக் காவில் திருநிழற் பந்தர் செய்து
உலந்தவண் இறந்த போதே கோச் செங்க ணுனு மாகக்
கலந்தநீர்க் காவி ரிசூழ் சோணுட்டுச் சோழர் தங்கள்
குலந்தனில் பிறப்பித் திட்டார் குறுக்கைவீ ரட்ட ஞரே''

என்று திருக்குறுக்கை வீரட்டானப் பதிகத்துப் பாடியுள்ளார். சிலந்தியைச் சோழனுக்கிய அருட்செயலை வியந்து போற்றினர், அந்நாட் பெருமக்கள்; இறைவனைச் சிலந்தியைச் சோழனுக்கினுன் என்று வாயார வாழ்த்தினர்; திருவானைக்காவில் ஒரு தோப்புக்குச் சிலந்தியைச் சோழனுக்கினுன் திருத்தோப்பு என்றும் பெரிட்டனர். இது ''தேர் போல்'' என்று தொடங்கும் குலசேகர பாண்டியனது திருவானைக்காக் கல்வெட்டில் காணப்பெறுகிறது [10]. அத்தோப்பு ஒரு நிலத்துக்கு எல்லை கூறுங்கால் கூறப்பெற்றது. அக்கல்வெட்டுப் பகுதி வருமாறு:

''இவர்க்கு விற்றுக்குடுத்த நிலமாவது! உள்ளூர் திருப்புடை புதுவிளாகத்துச் சிலந்தியைச் சோழனுக்கினுன் திருத் தோப்புக்கு நீர் பாய்கிற வாய்க்காலுக்கு மேற்கு.''

## நல்ல நாமம் உடையான்

மேற்படி கல்வெட்டில் கையெழுத்து இட்டவர்களில் ஒருவர் நல்ல நாமம் உடையான் என்ற பெயருடையவர். நல்ல நாமம் உடையான் என்பது சிவபெருமானைக் குறிக்கும். சிவபெருமானுடைய திருநாமங்களில் ஒன்று திருவைந்தெழுத்தாகும். ''திருநாமம் அஞ்செழுத்தும் செப்பாராகில்'', ''எந்தையார் திருநாமம் நமச்சிவாய'' என்ற அப்பர் வாக்கே'' இதனை வலியுறுத்தும். இத்திருப்பெயரையே நல்ல நாமம் என்று அப்பர் பின்வரும் பாடலில் கூறியுள்ளார்:

''கல்லி னேடெனைப் பூட்டி யமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்கவென் வாக்கினுல்
நெல்லு நீள்வயல் நீலக் குடியரன்
நல்ல நாமம் நவிற்றியுய்ந் தேனன்றே.''

## நஞ்சமுது செய்தான்

திருநாவுக்கரசர்க்கு சமணர்கள் நஞ்சு கலந்தபாற்சோறூட்டினர். நஞ்சும் அமுதாயிற்று நாதனடியாராகிய திருநாவுக்கரசருக்கு.

''துஞ்சிருள் காலை மாலை தொடர்ச்சியை மறந்திராதே
அஞ்செழுத் தோதினுளும் அரனடிக் கன்ப தாகும்
வஞ்சனைப் பாற்சோருக்கி வழக்கிலா அமணர் தந்த
நஞ்சமு தாக்கு வித்தார் நனிபள்ளி யடிகளாரே''

என்பது இதற்கு அகச்சான்று. இச்செய்தியை நினைப்பிப்பதுபோல் ஒருவர் பெயர் நஞ்சமுது செய்தான் என்பதாகும் என்று சிதம்பரத்திலுள்ள குலசேகரதேவர் கல்வெட்டொன்று [11] கூறுகிறது. அவரது முழுப்பெயர்: 'பெரும்பற்றப்புலியூர் மூலப் பருஷையாரில் வாச்சியன் திருவலஞ்சுழி யுடையான் நஞ்சமுது செய்தான்' என்பதாம்.

## தோன்ருத்துணை

கல்லையே தெப்பமாகக்கொண்டு கரையேறிய திருநாவுக்கரசர் திருப்பாதிரிப் புலி

10. S. I. I. Vol. IV, 25 of 1891.
11. S. I. I., 229 of Vol. IV, 124 of 1888.

யூரில் பாடுங்கால் இறைவன் தனக்குத் தோன்றாத் துணையாயிருந்தமையைப் பின் வருமாறு கூறியுள்ளார்:—

ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாயுடன் தோன்றினராய்
மூன்றா யுலகம் படைத்துகந்தா னென் மனத் துள்ளிருக்க
ஏன்றான் இமையவர்க் கன்பன் திருப்பா திரிப்புலியூர்த்
தோன்றாத் துணையா யிருந்தனன் தன்னடி யோங்களுக்கே.

இவ்வரிய செயலை நினைவு கூரும் வகையில் இந்நாட்டுத் தமிழ்ப்பெரு மக்கள் திருப்பாதிரிப்புலியூரிறைவனைத் தோன்றாத் துணையாண்டார் என்று கூறினர். கோயிலைத் தோன்றாத் துணையாண்டார் கோயில் என்றும் தோன்றாத் துணையாருடையார் கோயில் என்றும் கூற லாயினர். இதனைப் பின்வரும் கல்வெட்டுத்தொடர்களால் அறியலாகும்.

“விக்கிரம சோழ தேவர்க்கு யாண்டு ஏழாவது ராஜராஜ வளநாட்டுப் பட்டான் பாக்கை நாட்டுத் திருப்பாதிரிப்புலியூர்த் தோன்றாத் துணையாண்டார் கோயில்[12]

“விக்கிரம சோழதேவர்க்கு யாண்டு ஆறாவது ராஜராஜ வளநாட்டுப் பட்டான் பாக்கை நாட்டுத் திருப்பாதிரிப் புலியூரான பரநிருப பராக்கிரமச் சதுர்வேதி மங்கலத்துத் தோன்றாத்துணை ஆளுடையார் கோயில் [13]

“வீரமே துணையாகவும்” என்று தொடங்கும் வீரராஜேந்திர சோழனது 5ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டினின்று திருப்பாதிரிப் புலியூர்க் கோயிலில் இருந்த சிவப்பிராமணன் ஒருவன் பெயர் தோன்றாத் துணைப் பட்டன் என்பது என்றறிய வருகின்றது. [14] இதனால் தோன்றாத்துணை என்பது மக்கட் பெயராயமைந்ததும் அறியலாயிற்று.

## தேனாருங் கொன்றையன்

மூன்றும் இராசராச சோழனுடைய பதினாறுவதின் எதிரா மாண்டுக் கல்வெட்டு ஒன்று திருவானைக்காவிலுள்ளது[14-A]. இக்கல்வெட்டில்கையெழுத்து இட்டவர்களுள் ஒருவர் தேனாருங்கொன்றையன் என்ற பெயருடையவராவர். இப்பெயர் திருநாவுக்கரசர் திருவானைக்காவில் அருளிய திருத்தாண்டகத்தில் காணப்படுகிறது.

ஊனாகி உயிராகி அதனுள் நின்ற
உணர்வாகி பிறவனைத்தும் நீயாய் நின்றாய்
நானேதும் அறியாமே என்னுள் வந்து
நல்லனவும் தீயனவும் காட்டா நின்றாய்
தேனாருங் கொன்றையனே நின்றியூராய்
திருவானைக் காவிலுறை சிவனேஞானம்
ஆனாயுன் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்ல கண்டம் கொண்டடியேன் என் செய் கேனே

## என்னானைக் கன்று

போசள மன்னன் வீரராமனது திருவானைக்கா சாசனத்தில் [15] திருவானைக்காவுடைய நாயனாரைப்பூசிக்கும் திருவெள்ளறைக்காச்யபன் என்னானைக்கன்று பட்டன்” என்று ஒருவன் குறிக்கப் பெறுகிறான். திருநாவுக்கரசர் திருவானைக்காவில் பாடிய திருத்தாண்டகத்தில் இறைவனை என்னானைக் கன்று என்று குறிப்பிட்டார். இதுவே திருவெள்ளறைக் காச்யமனுக்குரிய பெயராயிற்று. அத்திருத்தாண்டகம் பின்வருமாறு:

முன்னானைத் தோல்போர்த்த மூர்த்தி தன்னை
மூவாத சிந்தையே மனமே வாக்கே
தன்னானை யாப்பண்ணி ஏறி னானைச்
சார்தற் கரியானைத் தாதை தன்னை
என்னானைக் கன்றினை யென் ஈசன் தன்னை
எறிநீர்த் திரையுகளுங் காவி ரிசூழ்
தென்னானைக் காவானைத் தேனைப் பாலைச்
செழுநீர்த் திரளைச்சென் றாடினேனே.

## செம்பொற்சோதி

‘திருவையா றகலாத செம்பொற் சோதி’ என்பது திருநாவுக்கரசர் தேவார அடி.

---

12. S. I. I., 746 of Vol. VIII, 122 of 1902.
13. S. I. I., 741 of Vol. VIII, 117 of 1092.
14. S. I. I., Vol. VIII, 133 of 1902.
14 (a). 23 of 1891 ; 424 of Vol. IV.
15. 26 of 1891 ; 427 of Vol. IV.

முதலாம் இராசராசன் தஞ்சைப் பெரிய கோயிலில் நியமித்த நாற்பத்தெண்மர் பிடாரர்களில் ஒருவர் பெயர். "திருவெணு வல் செம்பொற்சோதியான தக்ஷிணமேரு விடங்கப் பிச்சனுன ஞானசிவன்" என்ப தாகும். "பூமாது புணர" என்ற விக்ரம சோழதேவரது திருநெய்த்தானக் கல்வெட் டில்[16] செம்பொற்சோதி உய்ய வந்தான் என்பது ஒருவர் பெயராகக் காணப்பெறு கிறது.

### காக்கு நாயகன்

"மூக்கு வாய்செவி கண்ணுுட லாகி
வந்(து)
ஆக்கு மைவர்தம் ஆப்பை யவிழ்த்தருள்
நோக்கு வானமை நோய்வினை வாராமே
காக்கு நாயகன் கச்சியே கம்பனே"

என்பது திருநாவுக்கரசர் திருக்கச்சி யேகம் பத்திற் பாடிய திருக்குறுந்தொகையாகும். திருப்பாலைத்துறை ஆதிகேசுவரர் கோயி லுக்கு அருகில் ஒரு திருமடம் இருந்தது. அதற்குப் பெயர் காக்கு நாயகன் திருமடம் என்பதாகும். என்று ஒரு கல்வெட்டு நுவல் கிறது[17] இது திருக்கச்சி யேகம்பத்துத் திருக்குறுந்தொகைச் சொற்றொடரின் அடிப் படையில் அமைந்ததேயாகும்.

### திறக்கப்பாடுவார்

திருநாவுக்கரசர் திருமறைக் காட்டில் "பண்ணினேர் மொழியாள்" என்ற பதிகம்பாடி மறைக்கதவினைத் திறந்தருளினர். திருவாய் மூர்க்குத் தொடரச் செல்லுங்கால்,

"திறக்கப் பாடிய என்னினும் செந்தமிழ்
உறைப்புப் பாடி அடைப்பித்தார் உந்
நின்றுர்"

என்ற திருக்குறுந்தொகையில் திருநாவுக்கரசர் தம்மைத் திறக்கப்பாடியவர் என்று குறித்துக் கொண்டார். திருவொற்றியூரில் ஒருகல் வெட்டில் இத்தொடர் காணப்படுகின்றது. ராஜநாராயணச் சம்புவராயர் தமது 7-ம் ஆட்சியாண்டில்[18] சில நிலங்களையும் மனை களையும் திருவொற்றியூர்க் கோயிலுக்குக் கொடுத்தார். படம்பக்க நாயக விளாகம் என்பது திறக்கப்பாடுவார் மனைக்குக்கிழக்கில் உள்ளது என்று அக்கல்லெழுத்துக் கூறு கிறது.

புதுக்கோட்டை-குளத்தூர்த் தாலுகா-தென்னங்குடி-தருமபுரீசுவரர் கோயிலில் கண்ட வீரசுந்தர பாண்டியதேவரது கல் வெட்டில்[19] "திருவாசல் திறந்தான் காலாலே திருவாசலிலே அளப்போமாகவும் என்று காணப்படுகிறது. திருவாசல் திறந்தான் என்பது இங்கு ஒரு மரக்காலுக்குப் பெய ராகக் காணப்படுகிறது. இச்சொற்றொடரும் "கலைகொள் வேத வனப்பதி தன்னிலே கதவுதானும் கடுகத்" திறந்த அப்பரது அற் புதத்தைக் குறிப்பதாகவே கொள்ளலாம்

### தவப்பெருந்தேவு செய்தார்.

"குவப்பெருந் தடக்கை வேடன்
கொடுஞ்சிலை இறைச்சிப் பாரம்
துவர்ப்பெருஞ் செருப்பால் நீக்கித்
தூயவாய்க் கலசம் ஆட்ட
உவப்பெருங் குருதி சோர
ஒருகணை இடந்தங் கப்பத்
தவப்பெருந் தேவு செய்தார்
சாய்க்காடு மேவி னுரே"

என்பதுதிருச்சாய்க்காட்டில் திருநாவுக்கரசர் பாடிய திருநேரிசை இதில் கண்ணப்பரை இறைவன் ஆண்டுகொண்டருளிய செய்தி கூறப்பட்டுள்ளது. இப்பாடலிற்கண்ட தவப் பெருந்தேவு செய்தார் என்பது சகரயாண்டு 1242க்குரிய திருக்காளத்திக் கல்வெட்டில் ஒருவர் பெயராகக் காணப்பெறுகிறது. திருக்காளத்தி திருமணிக் கெங்கையுடைய நாயனர் கோயிலில் திருமணிக் கங்கைச் சீயன் என்ற அதிகாரி அவ்வூரிலுள்ள சில நிலங்களின் உரிமைகளை மாற்றியமைக்கிருர். அச்சாசனத்தில்[20] பலரும் கையொப்பமிடு

---

16. 587 of Vol. IV; 30 of 1895.
17. 582 of 1908.
18. 203 of 1912; S. I. T. I. No. 523.
19. புதுக்கோட்டைச் சாசனங்கள்—469.
20. 198 of 1903.

கிறார்கள். அவர்களுள் ஒருவர் திருக் காளத்தியாண்டார் தவப்பெருந்தேவு செய்தார் என்பவராவர். இதே நாளில் இன்னொரு அறக்கட்டளை பிறப்பிக்கப் பெறுகின்றது. திருக்காளத்தி திருமணிக்கெங்கையுடைய நாயனார் கோயில் வடக்குத் திருவீதி தெற் கடையப்பாதியில் தவப்பெருந்தேவு செய்தார்க் குரிய நிலம் திருநாமத்துக் காணியாகக் கொடுக்கப்பட்டது[21]

## குளிச்செழுந்த நாயனார்

திருநாவுக்கரசர் கைலையில் எம்பெருமானைத் தரிசிக்கச் சென்றவர். அதுகூடாமை யின், ஆங்கொருகுளத்தில் மூழ்கித் திருவை யாற்றில் ஒருகுளத்தில் எழுந்தார். இதனைச் சேக்கிழார் சுவாமிகள் பின்வரும் பாடலில் கூறியுள்ளார்.

"ஆதி தேவர்தம் திருவட் பெருமையார் அறிந்தார்
போத மாதவர் பனிமலர்ப் பொய்கையில் மூழ்கி
மாதொர் பாகனார் மகிழும் ஐயாற்றிலோர் வாவி
மீது தோன்றிவந் தெழுந்தனர் உலகெலாம் வியப்ப"

திருப்புகலூரில் ஒரு கல்வெட்டில்[22] "குளிச் செழுந்த நாயனார்" என்று காணப் பெறுகிறது. இதுமேலே கூறியவாறு திரு நாவுக்கரசரைக் குறிப்பதாகவே கொள்ள லாம்.

## திருநாவுக்கரசு குகை

குகை என்பது முனிவர் இருப்பிடம். தேவாரமூவர் பெயரால் தமிழ் நாடெங்கும் பலகுகைகள் இருந்தமையைக் கல்லெழுத் துக்கள் கூறுகின்றன. திருக்குறுக்கையி லுள்ளமூன்றாங்குலோத்துங்க சோழனுடைய 29-ம் ஆட்சியாண்டு (கி. பி. 1201)க்குரிய கல்லெழுத்து[23] திருநாவுக்கரசு குகை என்ற ஒரு குகையைப்பற்றிக் கூறுகிறது. இக்குகை கட்டுவதற்கும், இக்குகைக்குவரும் அபூர்வி களுக்கும், திருவைகாசித் திருநாளுக்கும் வரும் மகேசுவரர்களுக்கும் உணவு அளிக் கவும் நெல் தானம் செய்யப்பெற்றது. திருத் தாண்டகம் ஓதுவது குறித்தும் இக்கல் லெழுத்து அறிவிக்கிறது.

## முடிப்புரை

திருநாவுக்கரசர்க்குப் படிவங்கள் அமைத்தமையும் நிபந்தங்கள் அமைத்த மையும் சில சாசனங்கள் கூறுகின்றன. அச்சிடப் பெறாத கல்வெட்டுக்கள் அச்சிட டப்பெறின் இன்னும் எத்தனையோ செய்தி கள் வெளிப்படும். அந்நாளைய மக்கள் திருமெய்ஞ்ஞானத் திருநெறித்தமிழாகிய தேவாரத்தை எங்ஙனமெல்லாம் வாழ்க் கையில் கடைப்பிடித்தொழுகினர் என்பதும் நன்கு விளக்கம்பெறும்.

**'ஆழிமிசைக் கன்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி !'**



---

21. 199 of 1903.
22. 86 of 1927-28.
23. 219 of 1917.

# அப்பர் தேவாரத்தில் செவ்வேள்

மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர், அண்ணுமலை நகர்

## சிறு தெய்வம் சிந்தியாச் செல்வர்

திருநாவுக்கரசு சுவாமிகள் சிறந்த சிவானு பவச் செல்வர். தாம் பெற்ற அனுபவத் தைத் தமிழகம் என்றும் பெறவேண்டும் என்றதிருவருளுள்ளம்படைத்தவர். தொண் டின் வாயிலாகத்தான் சமுதாயம் சமய நிலே யில் வளர இயலும் என்பதை வாழ்ந்து காட்டியவர். கள்ளமில்லா உள்ளத்துறவி ஞலேயே நாட்டை வாழ்விக்க இயலும் என் பதை நடந்து காட்டியவர். கீழேநின்று மலேயை அண்ணுந்துபார்த்து அதன் உய ரத்தையும் பரப்பையும் வளத்தையும் அழ கையும் அறிவது போலப் புறச்சமயநெறி சென்று அகச் சமயத்தை ஆராய்ந்து அதன் ஈடேற்றம் இல்லாத தனிப் பெருந் தன் மையை உலகிற்கு உள்ளவாறு உணர்த்திய வர். அன்பு நெறியும் தொண்டு நெறியும் இணந்த நிலேயே இறையொளி பெறத் தக்கது என்பதை எடுத்துக் காட்டியவர். சிவன்கழலேயன்றிச் சிறு தெய்வங்களே மறந்தும் சிந்தியாத மனத்தையுடையவர். சிவத்தோடு ஒன்றிநின்று ஐந்தொழிலாற் றும் அருட்சத்தியைக்கூட சிவத்தோடு சேர்த்தே சிந்திப்பவர். அத்தகைய அப்பரடி கள் செவ்வேளேப் போற்றும் முறைமை களேத் திருமுறைகளிலிருந்து சேர்த்து எண் ணுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

## அப்பர் வாக்கில் அறுமுகப்பண்ணவன்

இவருடைய மூன்று திருமுறைகளிலும் அறுமுகப் பெருமான் சற்றேறக்குறைய நாற்பத்திரண்டு இடங்களில் எழுந்தருளி யிருக்கின்ருர். மூத்த பிள்ளேயாராகிய கணபதிகூட ஏழு இடங்களிலே மட்டும் எழுந்தருளியிருக்க இளேய பிள்ளேயாராகிய செவ்வேட் குமரனேப் பல இடங்களில் போற்றியதற்கு ஏற்ற காரணம் இருக்கத் தான் வேண்டும். அது, அப்பர்பெருமா னுக்கு அறுமுகக் கடவுளிடத்துள்ள ஈடு பாடேயாகும். ஆதலால் அதனையறிந்துய்ய அவருடன் கடம்பூருக்குப் போவோம்.

அப்பர் பெருமான் கடம்பூரில் கரக்கோயி லில் கைகூப்பித் தொழுது திருப்பதிகத் தைச் சிவபெருமான் திருச்செவிக்கு ஏற்பிக் கின்ருர். அதிலே ஒன்பதாவது திருப்பாடல்

நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்அடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே

என்பது இதிலே எத்தனை வகையர்க ஆண் டான் அடிமைகளின் கடமைகளும் குண நலங்களும் குறிக்கப்பெற்றிருந்தாலும் ஆண் டானே அறிவிக்கும் பகுதியாகிய நங்கடம் பனைப் பெற்றவள் பங்கினன் என்பதிலே உள்ளந்தோய்ந்த உறவும் ஏனைய எண்ண இன்பங்களும் அலே பாய்கின்றன. "உல கினைப் பயந்தும் பவன் பிரம்மசாரியாகும் பான்மொழிக்கன்னியாகும்" என்ற இலக் கணத்தின் விலகாவண்ணம் உயிர்களனைத் தையும் பெற்றும் பெருத தன்மையிலே விளங்கும் பெருமாட்டி உண்மையிலேயே மகப்பெற்ற மகராசியாகிருள். அவளே இடப் பாகத்துக்கொண்டு என்றும் பிரியாது விளங்குபவர் கடம்பூர் நாதர் என்பார் கடம் பனைப் பெற்றவள் பங்கினன் என்கின்ருர். அதில் எத்துணை உறவும் உள்ளத்தோய்வும் தொனிக்கிறது.

இவ்வண்ணமே மறைக் காட்டிற்குப் போகின்ற போதும் நமக்குச் சிவபெரு மானைக் காட்டும் உபகாரத்தைப் புரிகின்ற ஞானசாரியராகிய அப்பர் பெருமான்' நம் செந்தில்மேய வள்ளிமணுளற்குத் தாதை

கண்டாய்' எனக் காட்டுகிறார் இதிலும் நம் வள்ளிமணாளன், அவன்மேய நஞ்செந்தில் என உரிமை தோன்றக்கூறும் அழகு உள்ளத்தையுருக்குவது. இத்தகைய ஈடுபாட்டைக் கணபதியைக் கூறும்போது காண்கின்றோம் இல்லை. நிற்க.

அடுத்து அப்பர் சுவாமிகளோடு குடந்தைக் கீழ்க்கோட்டம் போவோம். அங்கு குடந்தைக் கீழ்க்கோட்டத்து எம் கூத்தனாரை எமக்கு அறிவிக்கின்றவர்கள் கூரிலங்கு வேற்குமரன் தாதை போலும் என்கின்றார். வீரமகனை வெற்றிமகனை பெற்ற தந்தைக்கு இருக்கின்ற மிடுக்கும் எடுப்பும் கீழ்க் கோட்டக் கூத்தனாரிடை விளங்கக் கண்ட சுவாமிகள் குமரனைப் பாராட்டி அவன் கையிலங்குவேலையும் பாராட்டி அத்தகைய வீரமகனுக்குத் தந்தை என்கின்றார்.

வீரத்தின் விளைவு வெற்றி, வெற்றிச் சின்னம் கொடி, கொடியிலும் வெற்றோவியம் தீட்டிய கொடியாக இராமல், வீறடங்கிய மாற்றான் மாற்றுருவம் கொண்டு தாமேதங்கியிருக்கும் கொடியாயின் அது தனித்ததோர் சிறப்புடையது. அதனை விளக்கி இன்னம்பர்த் தலத்திலே இறைவன் முன் நின்று 'கோழிக்கொடியோன் தன் தாதைபோலும்' என்றருளுவதையும் கேட்கிறோம்.

அங்ஙனமே திருவீழிமிழலைக்கு எழுந்தருளும்போது குமரனையும் மகனாக உடையார்போலும் என்கின்றார்கள். முன்பெல்லாம் கூரிலங்கு வேற்குமரன், கோழிக்கொடியோன் என முருகனுடைய வீரத்தையும் வெற்றியையும் விளக்கி அவ்விரண்டையும் உடைய முருகப்பெருமானுக்குத் தாதை போலும் என ஒப்பில்போலி கொடுத்து உயர்த்துப் பாராட்டிய பெருமான்; இங்கு குமரனையும் மகனாக உடையர்போலும் என்கின்றார். இதிலே அவர் திருவுள்ளத்திடை உம்மையின் பொருளாக உயர்வு தோன்றி நிற்பதைத்தான் நாம் எண்ண முடியும். பெம்மான் முருகன் பிறவான் இறவான் ஆகையாலே பிறக்காத குமரனைப்பெறாத மகனாகப் பெற்றுத்தான் தந்தையாகிச் சிவபெருமான் உயர்ந்தார் என ஈண்டும் ஒப்பில் போலியாக உணரவைக்கின்ற அழகு அன்புள்ளத்திற்கு அளிக்கும் விருந்தாகும்.

இவ்வண்ணம் மகன் தந்தை முறையில் வைத்து மகிழ்ந்த அப்பர் பெருமான் உண்மை ஞானங் கைவரப்பெற்ற ஆன்மா அரன்றனை யருச்சித்து அதன் பயனாக அனுபவ ஞானத்தையடையும் ஆதலால், முருகனையும் அணுபக்கத்தில் அமைத்து அடியவராக்கி அவர் வழிபாடு செய்கின்றார் என்பதை உணர்த்தும் பகுதிகளைப் பாருங்கள் அவை;

"சரவணத்தான் கைதொழுது சாரும் அடி"
"குமரன் வணங்கும் கழற் பூரணன்"

என்பன. இதில் குமரனாகிய நிறைவுடையவனே வணங்கும் நிறைவுடைமை சிவபரம் பொருள் ஒன்றற்கே என்றும் உரிமையானது என்பது விளங்கி நிற்றல் காண்க.

மேலும் சரவணத்தான் என முருகனுடைய தோற்றச்சிறப்பும், அறுமுகன், பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை எனத் திருவுருவச் சிறப்பும் 'கடம்பமர் காளை, செந்தில்மேய....மணாளன்' எனத் திருத்தலச் சிறப்பும், குமரன் முருகவேள் செல்வக்குமரவேள் எனத் திருமேனியின் அழகுச் சிறப்பும், கோழிக்கொடியோன் சமரசூரபன்மாவைத் தடிந்தவேற் குமரன் என வெற்றிச் சிறப்பும் கூறப்படுவதோடன்றி, கைதொழுது சாரும் அடிவணங்கும் கழல் எனச் சிவபெருமானை முருகன் வழிபடுதற் சிறப்பும் வகுக்கப்படுகின்றன.

## போற்றுவோம்! புகழ்வோம்!

இங்ஙனம், அப்பர் சுவாமிகள் முருகவேளைச் சம்பு பக்கமாக எண்ணியும், வழிபட்டுய்ந்தார் என அணுபக்கமாகப் பாராட்டியும் செல்லும் அழகைப் பார்க்கிறோம். ஆயிரம் ஆண்டுகளுக்கு இப்பால் ஞானவுருவத் தந்தையாகிய அப்பரடிகளை அவரருளிய நூலாகிய திருமுறை வழிநின்று சிந்திக்கின்ற எமக்கே இத்தகைய கருவூலங் கிடைக்குமானால் அவருடன் அவர் காலத்தில் சென்ற அடியார்கட்கு எத்தகைய இன்பம் எளிதில் கிடைத்திருக்குமோ!

சிவ வழிபாட்டோடு சத்தி வழிபாடு, சிவசந்தான வழிபாடு குரு வழிபாடு இவற்றையும் எண்ண வைக்கின்ற அப்பரருட்டிறத்தை வியப்போம்; போற்றுவோம்; புகழ்வோம்; வேறு என்ன செய்ய இயலும்?

# அப்பர் தேவாரத்தில் அம்மை

மகாவித்துவான் திரு. சி. அருணைவடிவேல் முதலியார், தருமபுரம்.

உலகம் 'அறிவுடையதும் அறிவில்லதும்' என இருவகைத்து. அவற்றை முறையே 'சேதனப் பிரபஞ்சம்,' 'அசேதனப் பிரபஞ்சம்' என்று சாத்திரங்கள் கூறும். அறிவில்லாத உலகம் முற்றிலும் அறிவுடையுலகத்திற்கே பயன் படுதல் கண்கூடு. ஆகவே, அறிவுடை உலகம் இல்லையேல், அறிவிலுலகம் ஏதும் பயனின்றிக் கிடப்பதாம். 'அறிவுடை உலகம்' எனப்படுவன உயிர்களே.

உயிர்கள் பலவும் ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் ஈருக அறுவகைப் படுத்துக் கூறப்படும். அவற்றுள் யாதோர் உயிராயினும் அது தனது தோற்றத்திற்குக் காரணமாக ஓர் அம்மையையும், அப்பனையும் உடையதே. ஓரறிவுயிராகிய தாவரங்களும் இதற்கு விலக்கல்ல. இனி ஓர் உயிர்க்கு அம்மையும் அப்பனுமாய் நிற்பனவும் உயிர்களே யாதலின், அவையும் தமது தோற்றத்திற்கு முதலாக அம்மை அப்பரை உடையன வாதல் திண்ணம். இவ்வாறு முன் முன் வரலாற்றை நினைத்துப் பார்க்கும்பொழுது 'முதல் அம்மை அப்பர் எவ்வாறு தோன்றினுர்' என்னும் வினு எழுகின்றது. அதற்கு, முதல் அம்மை அப்பர் தமக்கு ஓர் அம்மை அப்பர் இல்லாமல் இயற்கையிலே அம்மை அப்பராய் இருந்தனர்' என்பதைத் தவிர வேறு விடை இல்லை. இஃது உலகில் எங்கும் இல்லாததோர் அதிசய நிலை.

இனி அவ் வம்மை யப்பர்பால் மற்ருேர் அதிசய நிலையும் உண்டு; அஃதாவது. உலகில் காணப்படும் அம்மையப்பர் பலரும் முன்னர் வேறுபட்ட இருவராய்த் தொடர்பின்றி இருந்து பின் ஓரளவில் ஒருவர் போலக் கலந்து அம்மை அப்பராகின்றனர்; உலகம் அனைத்திற்கும் முன்னே உள்ள அம்மையப்பரோ அவ்வாறின்றி, முதற்கண் ஒருவராய் இருந்து பின் ஓரளவில் இருவர் போலத் தோன்றி அம்மை அப்பராகின் றனர். இஃது எத்துணை அதிசயமான நிலை! இதனை ஞானசம்பந்தர்,

> "ஒருரு வாயினை ; மானங் காரத்து
> ஈரியல் பாய், ஒரு விண்முதல் பூதலம்
> ஒன்றிய இருசுடர் உம்பர்கள் பிறவும்
> படைத்தளித் தழிப்ப மும் மூர்த்திக
> ளாயினை..."

என்று பாடுகின்ருர். இவ் வம்மை யப்பர் இருவரும் உண்மையில் இருவரல்லர்; ஒருவரே என்பதனை ஒருபாதி ஆணும் ஒரு பாதி பெண்ணுமாய் நிற்கின்ற அவர்களது திருவுருவே தெரிவிக்கும். இத்திருவுருவினை,

> "ஒருமை பெண்மை யுடையன்"

என்று ஞானசம்பந்தரும்,

> "ஒருடம் பிருவ ராகி"

என்று நாவுக்கரசரும்

> "பாவை ஓர்கூறு தாங்கிய குழகர்"

என்று சுந்தரரும்,

> "குவளைக் கண்ணி கூறன் காண்க"

என்று மாணிக்கவாசகரும் வியந்தருளிச் செய்தனர். ஒருடம்பு இருவராய் நிற்கும் இவ் வதிசய நிலைதானே, 'இதுவே உலகனைத் திற்கும் முகதற்பொருள்' என்பதனை நன் குணர்த்தும் என்பதுபற்றி 'அம்மையப்பரே உலகுக் கம்மையப்பர் என்றறிக' என நினைப் பிக்கின்றது திருக்களிற்றுப்படியார் சிவ ஞான சித்தியும், 'இதுவே உலகத் தோற்றத் திற்கு முதலாய திருவுரு' என்பதனை,

> முதல் உருப் பாதி மாதர் ஆவதும் உணரார்"

எனக் கூறுகின்றது. இவ்வம்மையப்பரே தம் மக்களாய அறிவுடை உலகத்தையும்,

அதற்கு உதவியாக அறிவில்லாத உலகத்தையும் தோற்றுவித்தனர் என்க.

ஓர் உடம்பே இருவராய் நிற்றல் முதற் பொருள் ஒன்றே சிவம், சக்தி, என இரு கூருய் இயைந்து நிற்றலையும், இருகூற்றுள் ஆண்கூறு ஆள்வதாகிய சிவத்தையும் பெண்கூறு ஆளப்படுவதாகிய சத்தியையும் குறிப்பனவாம். இன்னும் ஆண்மை வன்மையையும் பெண்மைமென்மையையும் குறிக்கும் ஆதலின், அம்மை அருளின் வடிவாம் என்பது தெளிவாகும். மைந்தர்க்குத் தந்தையிடத்து அன்பேயன்றி அச்சமும் நிகழும். தாயிடத்து அன்பே உளதாகும். பிள்ளைமைப் பருவமும், பால் கொடுத்தமையும் காரணமாக ஞானசம்பந்தர்க்குஅம்மையிடத்து அன்பு மிகுதல் இயல்பு. திருமேனி தனில் அசைவு தோன்ற முதிர்ந்த அப்பர் பெருமானுக்கு அம்மையிடத்து அன்பு மிகுதல் வியப்பைத் தருவதாம். அம்மையோடு உடனுய அப்பன் வடிவத்தை அவர் பாராட்டிப் பாடும் பாடல் இது.

புதுவிரி பொன்செய் ஓலை ஒருகாதுஓர் காது
சுரிசங்கம் நின்று புரள
விதிவிதி வேத கீதம் ஒருபாடும் ஓத
ஒருபாடு மெல்ல நகுமால்
மதுவிரி கொன்றை துன்று சடைபாகம் மாதர்
குழல்பாக மாக வருவர்
இது இவர் வண்ண வண்ணம் இவள் வண்ண வண்ணம்
எழில்வண்ண வண்ணம் இயல்பே.

'உருவம், அருவம், உருவருவம் எனப்பட்ட உலகப் பொருள்களுள் யாதொன்றும் அன்மையால் காட்சிக்கும் கருத்திற்கும் எட்டாத வனுகிய இறைவனை தனது அருள்காரணமாகக்காட்சி வழங்குமிடத்து அம்மையோடு உடனுய் நிற்பவனுகவே காட்சி தருகின்ருன் என்பதை அப்பர் அருளிச் செய்யும் முறை அழகிது.

விரிகதிர் ஞாயிறல்லர்; மதியல்லர்; வேத
விதியல்லர்; விண்ணும் நிலனும்
திரிதரு வாயுவல்லர் செறுதீயும் அல்லர்;
தெளிநீரும் அல்லர்! தெரியில்
அரிதரு கண்ணி யானை ஒருபாக மாக
அருள்கா ரணத்தில் வருவார்;
எரியர வார மார்பர் இமையாரு மல்லர்,
இமைப்பாரு மல்லர் இவரே
''உமையலாது உருவம் இல்லை''

என்றதும் காண்க''

இவ்வாறு அம்மை தன் அருள் வடிவத்தில் அப்பர் ஈடுபட்டுப் பாடும் இடங்கள் பல. அவற்றுள் அஞ்செழுத்தை உணர்வு நிலையில் வைத்துக்கணிப்பவரது உள்ளத்தில் வேற்றுமையின்றி விளங்கும்பொழுதும் இறைவன் அம்மையோடு கூடியே விளங்குகின்ருன் என்பதை விளக்கும் பகுதி குறிப்பிடத்தக்கது.

ஏதும் ஒன்றும் அறிவில ராயினும்
ஓதி அஞ்செழுத் தும்உணர் வார்கட்குப்
பேத மின்றி அவரவ ருள்ளத்தே
மாதுந் தாமும் மகிழ்வர்மாற் பேறரே.

இனி, ஐயனே, அரனே என்று அரற்றினுல் உய்யலாம் என அறிவுறுத்துகின்ற அப்பர் அம்மை பக்கம் சார்ந்து அப்பனை நகையாடிக்கூறும் இடங்களும் காணத்தக்கன.

சிவபெருமான் ஓர் அம்பாலே மூன்று கோட்டைகள் ஒருங்கே வெந்தொழியுமாறு அழித்த மாவீரன் என்று அனைவரும் புகழ்கின்றனர்; ஆயினும் உண்மையில் முப்புரத்தை அழித்தவள் எங்கள் அம்மையே! போர்க்காலத்தில்மேருமலையாகிய மாவில்லை முதலில் தாங்கிப் பகைவர் முன்னே சென்று நின்றது அவள் திருக்கரந்தான்! சிவபெருமானது கை, பின்பு நாண் பூட்டி அம்பு எய்கின்றேன் என்று சொல்லி இருக்குமிடம் தெரியாமல் பின் வாங்கியது! இதனை அவன் எதிரில் நின்று அவனையே வினவுவேன் என்று துணிந்து வினவும் அப்பர் பாடல் பின்வருவது.

கற்ருர் கடல்பயில் நாகைக்கா ரோணத்தெம்
கண்ணுதலே
விற்ருங் கியகரம் வேல்நெடுங் கண்ணி
வியன்கரம்; மேல்
நற்ருள் நெடுஞ்சிலை நாண்வலித் தகரம்
நின்கரமே
செற்ருர் புரஞ்செற்ற சேவகம் என்னைகொல்
செப்புமினே.

இன்னும், ஒருவனுக்கு ஒருத்தியே என்ற முறை தவறிச் சிவபெருமான் கங்கையைக் காமுற்றுத் தனது கரவொழுக்கம் வெளிப் படாதவாறு அவளைச் சடையில் மறைத்து வைத்திருக்கின்றான். இக் கரவொழுக்கம் மெல்ல மெல்ல என்றாயினும் ஒருநாள் வெளிப்பட்டே தீரும். அப்பொழுது அற வடிவாகிய எங்கள் தலைவி அறிந்தாளாயின் தலைவனுக்கு யாது விளையுமோ; அதனால் யானே அதுபற்றி அவனுக்கு முன்னறிவிப் புச் செய்வேன் என்று பரிந்து அப்பர் இறை வனை நோக்கிக் கூறுகின்றார்.

"வங்க மலிகடல் நாகைக்கா ரோணத்
தெம் வானவனே
எங்கள் பெருமான் ஓர் விண்ணப்பம்
உண்டு
அது கேட்டருள் நீ
கங்கை சடையுட் கரந்தாய் அக் கள்ளத்தை
மெள்ள உமை
நங்கை அறியிற் பொல்லாது கண்டாய்
எங்கள் நாயகனே."

அம்மையைப் பற்றி பாடும் அப்பர் பெரு மானது இன்னோரன்ன அருள் மொழிகளில் திளைத்து அருளுக்கு உரியராதல் நமக்கு இன்றியமையாக் கடனாகும்.



## சாத்திரங்களுள் அப்பர் தோத்திரங்கள்

சைவ சமய நெறி :

"பரித்தரிப்பாம் பாசம் பரமசிவன் பாதந்
தரித்துயர்ந்த வாகீசர்தாள்"

பரமத திமிர பானு :

"தரித்திடுவா வெம்முட் சிவனடிதன் னுச்சி
பரித்தசொல் வேந்தன் பதம்"

சங்கற்ப நிராகரணம் :

"வாக்கியலி னாலே மறைவனத்து வன்கதவை
நீக்கினன்று ணீங்காதென் நெஞ்சு"

# அப்பர் தேவாரத்தில் சிவபெருமான்

வித்துவான் திருமதி. சிவ. மீனுட்சிசுந்தர சிவை. சென்னே.

ஓதுவித் தாய்முன் அறவுரை காட்டி
அமணரொடே
காதுவித் தாய்கட்ட நோய்பிணி
தீர்த்தாய் கலந்தருளிப்
போதுவித் தாய்நின் பணிபிழைக்
கிற்புளி யம்வளாரால்
மோதுவிப் பாய்உகப் பாய்முனி
வாய்கச்சி யேகம்பனே.

இத்திருப்பாட்டு அப்பர் பெருமானின் வாழ்க்கையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளே எல்லாம் அப்படியே சித்தரித்துக் காட்டுகின்றது.

'ஓதுவித்தாய்' என்பது உண்மை உணர்ந்தார்க்கெல்லாம், ஆருயிரின் செயல் அனேத்தும் அவ்வவ் உயிர்களுக்கு முன்னிற்பார் துணையால் நிகழ்ந்தன என்பதைப் புலப்படுத்தும். அத்துணையாளர்கள் உள்நின்று துணே செய்யும் உண்மையை உணர்ந்த ஒருவர் அது திருவருளால் நிகழ்ந்ததென உணர்ந்து தெளிவடைவார். அதுபோல், அப்பர் பெருமானும் உலகியற் கல்வியும், அறமுறைக் கல்வியும்தான் கற்றுக்கொண்டதற்குத் தோன்ருத் துணையாக நின்றருளியது சிவபெருமான் என்றே துணிந்து இதில் அருளுகின்றனர். தன்னுடைய வாழ்க்கை நிகழ்ச்சியில் நிகழ்ந்தன அனேத்தும் அவர்தம் திருவருளே என்று தெளிந்து நம்மனேர்க்குத் தெரிவிக்கின்றனர்.

உலகியல் கல்வி கற்றபின்னர் தேசநெறி நிலேயாமை கண்டு, அறங்கள் பல செய்யும் உணர்வினேயும் ஆண்டவன் அளித்தருளினர். அதனுல், காவளர்த்தும் குளந்தொட்டும் கடப்பாடு வழுவாமல் மேவினர்க்கு நிதியளித்தும், நாவலர்க்கு வேண்டியன நல்கியும், நல்லறங்கள் பல புரிந்தார். பிறப்பிலேயே சைவச் செந்நெறியில் தோன்றும் பேறுபெற்றும், அக்காலத்து பைங்கூழுக்குக் களேகள்போல்தோன்றி மிக்கோங்கி நின்ற அமணர் தம் அறவுரைகளேக் கேட்டு மருண்டு, அந்நெறியே மேல்நெறி எனக்கொண்டு அதில் புகும்படியாகச் செய்தருளியதும் சிவபெருமான் திருவருளே என்கிருர்.

அதனுடைய காரணம், ஒருசமய உண்மையை நூலுணர்வினுல் ஒருவன் எடுத்துக் கூறுவதிலும், நுண்ணுணர்வாகிய நுகர் உணர்வினுல் கூறும் உண்மை எல்லாராலும் எளிதாகவும், இனிதாகவும் ஏற்று கைக்கொள்ளப்பட்டுக் கடைபிடித்து ஒழுகப் பெருந்துணே யாகும் என்பதேயாம். அதனுல், அதுவும் திருவருட் செயலே என்று அருளுகின்றனர். இவ்வுண்மையினே காஞ்சி புராணத்தில் மாதவச் சிவஞான முனிவர்

'இன்னகர் நோக்குந் தோறும் இமையவர்
தங்கள் நாட்டை
நன்னர்என் றிருந்த தம்மைத் தாங்களே
நாணி வைவர்
முன்னெரு சமயம் தன்னேப் பொருளென
முற்றி நின்று
பின்னர்வான் சைவம் எய்தப் பெறின்
அவர் பேசு மாபோல்''

என்னும் செய்யுள் குறிப்பால் விளக்கி அருளுகின்றனர்.

ஞானசம்பந்தப் பெருமான் சமணசமய உண்மைகளே நூலுணர்வால் உணர்த்துவதோடு. அப்பர் பெருமானின் நுண்ணுணர்வு உலகிடைப் பரவி இருந்ததால், மக்கள் எளிதாக ஏற்றுக்கொள்வதற்கு வாய்ப்புடைத்தாயிற்று. அவ்வுண்மை திருமறைக் காட்டில் ஞானசம்பந்தப் பெருமான் எழுந்தருள உன்னும்போது அப்பர் பெருமான் "பிள்ளாய் அந்த அமண்கையர் வஞ்சனேக்

கோர் அவதியில்லை'' என்று மொழிந்தருளின மையால் விளங்கும்.

மருத்துவன் ஏனையார்க்கும், ஏனையார் பிள்ளைகட்கும் நோய் ஏற்படின் அந்நோயினை மருந்து கொடுத்தே தீர்ப்பான். அதுபோல் தன் பிள்ளைகட்கு ஏற்படும் நோயையும் மருந்து கொடுத்தே தீர்த்தல் வேண்டும். அப்பர் பெருமான் முன் செய்த தவற்றினால் ஏற்பட்ட நோயைத் தீர்ப்பதற்கு அமணரோடே அவர் தம் அறவுரையை மேலென்று கருதி சேருப்படியாக ஆண்டவனே செய்தருளினார் என்று உணர்ந்து 'அறவுரைக் காட்டி அமணரோடே காதுவித்தாய்' என்றருளுகின்றனர். ஏற்பட்ட சூலைநோய் கொல்லாது, குடரோடு துடக்கி முடக்கியிடும்படியான பெருந்துன்பம் விளைவித்ததை, 'காதுவித்தாய்' என்றருளுகின்றனர்.

அமணர்களுடைய கொள்கைகள் எல்லா உயிரும்உய்யவேண்டும் என்னும்உண்மைக் கருத்துக்கு மாறுகத் தங்கள் நெறியை விரிவடையச் செய்வதும், தாங்கள் கொண்ட பொருந்தாக் கொள்கைகளை, பொருந்திய கொள்கைகளென்று கைக் கொள்ளச் செய்வதும், அதற்கு மாறுபட்டாரை எவ்வகையான துன்பம் உறும்படி செய்தாலும் அது குற்றமில்லை என்பதுமாய் இருந்தன. இதனை சேக்கிழார்பெருமான், ''கொல்லாமை மறைந்துறையும் அமண் சமயம் குறுகினர்'' என்றருளுவதால் அறியலாம்.

''வலியின் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்து மேய்ந் தற்று''

என்பது அந்நாளில் அமண் செய்த சூட்சித்திறனாகும்.

அவ்வுண்மை, எவ்வகை அறமும் புரியாது. சமயம் மாறிவிட்டார் என்பதற்காக அவ்வமணர்கள் அறமுறை நீங்கி அரசனையும் தன் வயப்படுத்தி, அவன் வாயிலாக அப்பர் பெருமானுக்கு இழைத்த கொலைத் துன்பங்கள் கொண்டே வெளிப்படும். எச்சமயத்தார் கேட்பினும் உள்ளம் வருந்தி, காணக்கண் கூசும் படியான மாணற்ற செய்கை என்பது வரலாற்றால் அறியலாம். சமண சமயத்தார்க்கு அவை நன்மைபோல் காணப்படினும், பலகோர்க்கு அவை கனவிலும் நினைக்க ஒண்ணு தன்மையதென்பது தெளிவு. ஆயினும், அதன் வாயிலாக ஆண்டவன் சைவசமய உண்மையை வெளிப்படுத்துவதால் அதுவும் நன்மையே ஆயிற்று.

உலகத்தில் நோய் வருவதற்கு வாயில்கள் காலமும், இடமும், செய்கை மாறுபாடும் ஆகும். அந்த நோயை ஆய்ந்து பார்க்கிறவர்கள் நோய்க்குக் காரணம் இது மூன்றுமே என்று தெளிந்து கொள்கின்றனர். இம்மூன்றிலும் தவறின்றி இருந்தால் நோய் வராது. வந்ததற்குக் காரணம் உன்னுடைய தவறேயாம் என்று மருந்து கொடுத்து நீக்காமல் துன்பத்தில் அழுந்தச் செய்வதில்லை. அதுபோல் அமணரோடு சேர்ந்து, ஏற்பட்ட கொலைத் துன்பத்திற்கும் கொடிதாகிய சூலை நோயை, திருவெண்ணீறு, திருவைந்தெழுத்து திருப்பதிகச் செழும் பாடலால் நீக்கியருளினன். அது 'கட்டநோய்பிணி தீர்த்தாய்' என்றதால் விளங்கும்.

மருத்துவன் மகன் காலம், இடம் முதலியவற்றால் நோய்ப்பட்டாலும் தந்தையின் இல்லத்தே தங்குவதன்றி வேறெங்கும் தங்குவதற்கில்லை. அதுபோல், அப்பர் பெருமான் நோயுற்ற காலத்தும் அந்நோயை அருளால் போக்கிய காலத்தும் ஆண்டவன் கலந்தருளியேஉள்ளான்என்பதைக்'கலந்தருளிப் போதுவித்தாய்' என்றருளினர். பின் பசை மலத்தால் இறைபணி பிழைப்பின் முறையுடன் திருத்தி ஆட்கொள்ளவேண்டும் என விண்ணப்பிப்பார், ''நின் பணி பிழைக்கிற் புளியம் விளாரால் மோதுவிப்பாய்'' என்றருளினர். மருத்துவன் நோய்க்கு மருந்து கொடுப்பதும், வேந்தன் குற்றத்திற்கு ஒறுத்தல் புரிவதும் நன்மைக்குக் காரணமாதலால், நன்மையாம் எனக்கொண்டு மோதுவிப்பாய் என்றருளினர். அவ்வுண்மையை ''கூவிப் பணி கொள்ளாது ஒறுத்தால் ஒன்றும் போதுமே'' என்று மணிவாசகப் பெருந்தகையாரும் அருள்வாராயினர். முனிவு நன்மையின் பாலதாய் முடியின் அது உவப்பினை ஒத்ததேயாம். ''தந்தை தாய்'' எனத் தொடங்கும் சித்தியார் (2-16) பாட்டில் ''இந்த நீர் முறைமையன்றோ ஈசனர் முனிவு மென்றும்'' என்பதாலும் இதனை அறியலாம்.

"முழுத்தழல் மேனித்தவளப் பொடியன்
கனகக்குன்றத்
தெழிற்பெருஞ் சோதியை யெங்கள்
பிரானை இகழ்திர் கண்டீர்
தொழப்படும் தேவர் தொழப்படுவானைத்
தொழுதபின்னைத்
தொழப்படும் தேவர்தம் மால்தொழு
விக்குந் தன் தொண்டரையே"

இத்திருப்பாட்டில் சிவபெருமானின் விழுமிய முழுமுதல் தன்மையினை விளக்க முற எடுத்தோதியருளினதைக் காணலாம். சிவபெருமான் திருமேனி முழுத்தழல் மேனி யென்று அருளப்பட்டது. முழுமை. குறை விலாநிறைவு. பிறிதொன்றற்குக்கொடுத்தும் குறைவிலா நிறைவாய் இருப்பதை முழுமை என்று சொல்வது வழக்காறு. சிவபெருமான் ஒளிப் பொருள்களாகக் காணப்படும் ஞாயிறு, திங்கள், தீ மூன்றற்கும் ஒளி கொடுத்துக்கொண்டு தன் இயற்கை ஒளி யில் குறைவில்லாது நின்று அருளுகின் றனன். அது முழுத்தழல் என்பதற்கு முற்றும் பொருந்தும். அதுவுமன்றி தழல்ஒளி இரு ளைப்போக்கிப் பொருளைக் காட்டுவதுமட்டும் அன்றி, உண்ணப்படும் பொருளை, பக்குவப் படுத்துவதற்கும் துணை நிற்பதால் ஞாயிறு, திங்கள் இரண்டிலும் சிறப்புடைத்தாகும். அதுபோல், ஆண்டவன்திருவருள் உணர்வு ஆருயிரின் உறை, உணர்வோடு கூடிக் கலந்து நிறைவுணர்வாக்கும் நீர்மையினுல் அவ்வுயிரை முழுமையாக்கும் உணர்வு தழ லென உரைப்பதுமாகும். நெருப்புள்ள இடத்தில் நீறு பூப்பதுபோன்று, உலக நிலை யாமையை உணர்த்தி, உய்விப்பது திரு வெண்ணீறே ஆதலால், தவளப் பொடியன் என்றருளினர்.

பருமை நுண்மையாவதும், நுண்மை பருமையாவதும், மாயாகாரியப் பொருள் களுக்கு காரணகாரியத் தொடர்பால் ஏற் படும் இயல்பேயாம். பருமை நுண்மையாய நிலையைக் கண்ட ஒருவன் அப்பருமையின் கண் பற்றுவிட்டு அதனை நுண்மையாக்கிய பொருள் எதுவென்று உணர்ந்து அதன்கண் பற்றுக்கொள்ளுவன். அம்மட்டுமன்றி நுண் மையாக்கிய அப்பொருளே பருமையாக்கும் திறனும் உடையதென்று உணர்ந்து கொள் வன். அதனுல் திருவெண்ணீறணிந்து காட்டும் தழல் வண்ணன் சிவபெருமான் என்பதனை விளங்கிக் கொள்வன். ஆதலின் சிவபெருமானைத் தவளப் பொடியன் என் றழைத்தார். நிறத்தோடும் செய்கையோடும் ஒத்து தழல் உருவகங் கொள்ளப்பட்டாலும், அணையும் தன்மையில் நிறம் மட்டுமன்றி, செய்கையும், குளிர்ந்த இன்பமுடைய தன்மையுடையதென்பதைக் காட்ட கனகக் குன்றத்தெழிற் பெருஞ்சோதியென்ருர். அடிமையானவர்கள் உரிமைகாட்ட, எங்கள் பிரான் என்றருளினர்.

யார்க்கும் இயற்கையாலன்றி, செயற்கை யாகிய ஒப்பனை முதலியவற்ருல் அழகு உண் டாக்கப்படின் அவ்வழகால் அவர்கள் உயர்ந் துள்ளார்கள் என்னும் உண்மை கருதப் பட்டு, அவர்களைவிட அவ்வழகுப் பொருள் களுக்கே மிகுதியும் பெருமை உண்டாகும். சிவபெருமான் ஒருவனே அழகுக்கு மாறுபட் டதாய் அச்சம் தருவதாய், உண்மையறியா தார் வெறுப்புக் கொள்வதற்கேதுவாய் உள்ள சில பொருள்களை அணிந்துள்ளான். அதனைக் கண்டு உண்மை உணராது யாரே னும் இகழ்வாராயின், அவ்விகழ்வு அப்பெரு மானைச்சாராது. இகழ்ந்தாரின் அறிவுக்குறை வினையே காட்டும். அதுபோல், உயிரினங் களில் உயர்ந்ததாகத் தவப் பேற்ருல் தேவ ரெனப்பட்டு வாழும் சில தேவர்களை மக்கள் இயற்கைத் தெய்வமே என்று கருதி வழி பட்டு சிவபெருமானை இகழ்கின்றர். அது ஒவ்வாது.

உப்போடு கூடிய கடல்நீரை மழைநீர் போல் அத்துணை விரும்பாது நீக்கினும், மழைக்கு அடிப்படை-நிலைக்களம் அதுவே என்றுணர்வார், அக்கடலினை மழையினும் பெரிதாகவே போற்றுவர். காரணம் மழை நீரைத் தந்ததும் அக்கடல் நீரே என்பதாம். அதுபோல்,உயிரினம் தேவர்களைத்தொழுது, அத்தேவர் வழியாகக் கருதிய பயன் கை கூடப்பெறின், மழை நீரைத் தந்த கடல் போலஅப்பயனை இத்தேவர்களின் வழியாகத் தந்தருளியதும் சிவபெருமான் என்பதே துணிபு. அம்மட்டுமன்றி நீக்கப்பட்ட உப்பு அளவில் குறைவாயினும், இனிமை பயப் பதில் மிக்குத் தோன்றுவது. 'உப்பில்லாப் பண்டம் குப்பையில்' என்பதால் விளங்கும். ஒருபுடை யொப்பாக மழைநீர் நடப்பாற்றல் எனப்படும். திரோதானசத்தியாகவும், உப்பு வனப்பாற்றல் எனப்படும். பரா சத்தியாக

வும் சொள்ளுதல் வேண்டும். உப்புக்கு இனிமை யென்னும் பெயர் உண்டென் பதனை,

"ஊடிப் பெருகுவங் கொல்லோ நுதல் வெயர்ப்பக்
கூடலிற் றோன்றிய உப்பு" (குறள்)

இக்குறளால் அறியலாம்.

அவ்வுப்பு அளவோடிருக்குங் காலத்து தன் பெயரைக் காட்டாது சுவைப் பொருளின் சுவையினையே மிகுத்துக் காட்டுகிறது. அது குறையுமானல் சப்பென்றிருக்கிறதென்று சொல்லுவோம். கூடுதலானல் கரிக்கிறது என்று சொல்லுவோம். அளவாய் இருப்பின் உப்பின் பேர் வாராது; சுவையின் பெயரே வரக் காண்கிறோம். அதுபோல் சிறுதெய்வநாட்டம் உடையார் எல்லாம் சிவபெருமானைவிட்டு நீங்காது ஒட்டி வாழினும் அச் சிவபெருமானினது இன்மை போன்று சிறப்புப் பயனின்றி பிறப்புப் பயனையே அடைவர். அளவோடு இருக்கும் நிலை போன்று சிவபெருமானை முழுமுதலாகக் கொண்டு வழிபட்டும், உலகப்பற்று நீங்காது தீவினை ஒழித்து நல்வினைக்காளாய், நற்பெயருடன் வாழ்ந்து பிறப்பினை யெய்துவர்.

இறைபணியில் நிற்பார், பிறப்பெய்தாது சிறப்பினை யெய்துவர். உப்பு கடுத்திருந்தாலும் அதனை ஒரு மருந்தென்று உட்கொள்பவர் போன்று சிவபெருமானல் ஏற்படும் துன்பங்களையெல்லாம்.

"சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடுந் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு."

என்பதனை ஒத்து, ஏற்று வருந்தாது நோயைப்போக்கவேண்டுவதன்றி, அடியில் சேர்க்கவேண்டும் என்றும் உடன் கேட்டுப் பெற்றுக் கொள்வர். உப்பே சில நோய்கட்கு மருந்தாக அமைவதையும் காண்கின்றோம். ஆகையினல், இறைபணி நிற்பார் மாட்டு சிவபெருமான் மிக்குத் தோன்றி அருளுவன். அதனலன்றோ அப்பர் பெருமான் "நாமார்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம், நடலையில்லோம், ஏமாப்போம் பிணியறியோம், பணிவோமல்லோம் இன்பமே யெந்நாளும் துன்பமில்லை" என்றருளினர்.

அச்சிவபெருமான் உங்களால் தொழப்படும். சிறுதேவர்களும் தொழப்படுபவனய் வீற்றிருக்கின்றான். அதனல், தேவர்தம்மால் தொழப்படும் என்று அடை கொடுத்தருளினர். அச்சிவனைத் தொழும் அத்தேவர்களும் உய்யவேண்டுமானல் அச்சிவபெருமானின் அடியவர்களைத் தொழுதல் வேண்டும். அக் குறிப்பு "தேவர் தம்மால் தொழுவிக்குந் தன் தொண்டனுரையே என்றருளினர். வள்ளுவரை அவர் அருளிய நூலின் பொருட்டே தொழுவார்கள். அந்நூலினை வேண்டாது வள்ளுவரை மட்டும் தொழுதால் அடையும் பயன் ஏதும் இன்ரும். அதுபோல் சிவபெருமானை அடைவிக்கும் நூல் போன்றிருப்பது, அடியார் ஒழுக்கமும், அவர்கள் அருளிய அருள் நூல்களுமேயாம். அதனல், அடியாரை, "தொழுவிப்பதால் அடியார் அடையும் பயனில் அத்தேவர் கலந்து கொள்வதற்கு இடனுண்டாகும் என்று தொழுவிக்கும் தன் தொண்டரையே" என்றார்.

இது "வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான்" என்பதால் அறியலாம். பாழ்த்த பிறப்பு அறுத்திடுவதற்கு வழிகாட்டுவதுசிவபெருமானின் எண் குணங்கள்போல் அமைந்துள்ள நால்வரருளிய முதல் திருமுறை எட்டேயாம்" அதனல் அவர்கள் அருளிய திருமுறைகளும், அத்திருமுறைகளால் பெறப்படும் திருவூர்களும், அவர்கள் தோன்றிய நளிய தொன்மைத்தமிழ் வழங்கும் நன்மை மிக்கத் தென்னடும் சிறப்புடைத்தாகும். இவ்வுண்மை

"புவனியிற்போய் பிறவாமையினல்" என்னும்
திருவாசகப் பாட்டால் அறியலாம்.

"கந்தமலர்க் கொன்றையணி சடையான் தன்னைக் கதிர்
விடுமர்மணி பிறங்கு கனகச்சோதி....
பந்தமறுத்தாளாக்கிப் பணிகொண்
டாங்கே பன்னியநூல்"

"தமிழ்மாலை பாடுவித்தென்............
கண்டேனே."

இத்திருப்பாட்டில் சிவபெருமான் அப்பர் பெருமானை ஆட்கொண்டருளிப் பணித்த பான்மையினை விளக்கியருளுகின்றனர். தமிழ்மாலை பாடுவித்து என்பதனை நடுநிலையாக்கி மேலும் கீழும் கொண்டு கூட்டிப்புகழ் விளங்க வைத்ததோடு தமிழ்மாலை உய்விக்கும் என்பதனையும் விளக்கியருளியுள்ளார்.

உரைதளர்ந்து உடலார் நடுங்காமுனம்;
.............................................
பணிவாரொடுவிரவுமின் விரவாரை விடு
மினே.

என்னும் இத்திருப்பாட்டால் சிவனடியார்கள் யாரோடு கூடவேண்டும் என்றும் எவரோடு கூடலாகதென்றும் அருளுகின்றனர். பணிவாரொடு விரவுமின் என்றும், விரவாதாரை விட்டு விடுமின் என்று அருளுகின்றனர். இவ்வுண்மை

"மருவுக மாசற்றார்கேண்மை யொன்றீத்தும்
ஒருவுக வொப்பிலார் நட்பு"

என்னும் குறளால் அறியலாம்.

"நினையாரை நீங்கு நினைப்பாரை மேவு"
என்பது பட்டினத்தார் வாக்கு.



## சேக்கிழாரடிகள் குறிக்கும் திருநாவுக்கரசரின் திருநாமங்களுள் குறிப்பிடத்தக்க சில

1. திருநாவுக்கரசு
2. வாகீசர்
3. மருணீக்கியார்
4. அப்பர்
5. தமிழ் வேந்தர்
6. தமிழிறை
7. பெரியோர்
8. பெருந்தவத் தொண்டர்
9. ஞான அரசு
10. உழவாரப் படையாளி
11. தமிழாளியார்
12. அடித்தொண்டர்
13. கோதில்மொழிக் கொற்றவர்
14. உடைய அரசு
15. போதமாதவர்
16. ஆண்ட அரசு



# அப்பர் தேவாரத்தில் மக்கள்

திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம் திருச்சிராப்பள்ளி.

திருநாவுக்கரசர் தேவாரத்தில் சிவபெருமானைப்பற்றி முன்னிலையிலும் படர்க்கையிலுமாகப் பாடப்பெற்ற பாடல்களே மிகுதியாக உள்ளன. எனினும், முத்தி நெறியறியாத மூர்க்கரொடு முயல்பவர்கட்குப் பத்தி நெறியறிவித்தும், அவர் தம் பழவினைகள் பாறும் வண்ணம் சித்தமலம் அறுவித்தும் அவர் தமைச் சிவமாக்குதற்காகவே அவதாரம் செய்தருளிய பெருமான் ஆதலால், நம் அப்பர் பெருமான் உலகமக்கள் அனைவரையும் உற்றவராகிய அடியார்களையும் விளித்து அவர்தமக்கு அறவுரையாகப் பாடியருளிய பாடல்களும் அவரது தேனனைய தேவாரத்தே விரவிக்கிடக்கின்றன. அவற்றுள் ஒரு சில பாடல்களை ஈண்டுக் காண்பாம்.

## நாட்டுப் பொய்

பொய்யிலே தனிப்பட்டவர் பேசும் பொய் வேறு; ஒரு நாட்டின் மக்கள் அனைவருமே பேசுகின்ற பொய் வேறு. இதனை. 'நாட்டுப் பொய்' என்று கூறுவர் அப்பர். குறிப்பாகப் பழைய காலத்தில் திண்ணைப் பேச்சுக்களில் தினந்தோறும் அடிபடும் ஊர் வம்பு, உண்மையற்ற வதந்திகள், ஊரார் மீது பழி முதலியவற்றைத்தான் நாட்டுப் பொய் என்பர் அப்பர். இவற்றைத்தான், ஆண்டாள் பிராட்டி "தீக்குறளை சென்றோதோம்" என்னும் அடியால் குறிப்பிடுகிறார். இன்றைய இந்திய வாழ்க்கையில் இந் நாட்டுப் பொய்க்கு இருப்பிடம் நமது செய்தித்தாள்கள் தான். கோடிக்கணக்கான மக்கள் கூடிக்களித்துப் படித்துத், தர்க்கித்து, ரசித்துத் தம் ஆன்மாக்களை மாசுபடுத்தித் திரிவதற்கு ஏதுவாகிய செய்தித்தாள் பொய்யைத் தான், இந்நாட்டுப் பொய் குறிக்கும். இன்று வெளிவரும் செய்தி நாளை மறுக்கப்படும் வரை பொய்யாகவே உலவுகிறதல்லவா? இதனைக் கண்டித்து இடிக்கிறார் அப்பர் பெருமான்.

"மாட்டைத் தேடி மகிழ்ந்துளீர் நும்முளே
நாட்டுப் பொய்யெலாம் பேசிடும் நாணிலீர்,
கூட்டைவிட்டுயிர் போவதன் முன்னமே
காட்டுப் பள்ளியுளான் கழல் சேர்மினே"

என்கிறார்.

## ஏ! பாவ காரிகளே!

சிவபிரானின் உண்மையையும் உயரிய தன்மையையும் அளந்தறிய விரும்பி, ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் சோதிக்க முயலும் சிற்றறிவுச் சழக்கர்களைக் கண்டு ஏளனம் செய்து இடித்துரைக்கிறார் அடிகள்

"கூவலாமை குரை கடல் ஆமையைக்
கூவலோ டொக்குமோ கடல் என்றல் போல்
பாவ காரிகள் பார்ப்பரி தென்பரால்
தேவ தேவன் சிவன்பெருந் தன்மையே."

என் தெய்வம் உன் தெய்வம் என்று பெருவழக்கிட்டுப் பிணக்குற்றுத் தத்தம் மதங்களே அமைவதாகச் சாற்றி மலைந்திடும் ஏழைகளைப் பார்த்து, எல்லாக் கடவுளும் சிவத்தில் அடக்கம் என்று பாடுகிறார்.

"வாது செய்து மயங்கு மனத்தராய்
ஏது சொல்லுவீர் ஆகிலும் ஏழைகாள்
யாதோர் தேவர் எனப்படுவார்க் கெலாம்
மாதே வன்னலால் தேவர்மற் றில்லையே".

## நிலையாமை

திருவள்ளுவர் கூறிய

"நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ் உலகு"

என்னும் குறட்பாக் கருத்தை யொட்டிப் பொதுமக்களுக்கு அறிவு கொளுத்துகிருர் அப்பர் அடிகள்.

"இன்றுளார் நாளையில்லை எனும்
பொருள்
ஒன்று மோரா துழிதரும் ஊமர் காள்
அன்று வானவர்க் காக விடமுண்ட
கண்ட ஞர்காட்டுப் பள்ளிகண் டுய்ம்
மினே."

## கனி உண்ண வல்லிரே ?

இறைவனது 'புகழ்ப் பழ வாணிக'ராகிய எங்கள் அப்பர் பிரான் ஒரு விதப் புதுப் பழ வாணிகராகவும் காட்சியளிக்கிருர். அப்பர் விற்கும்...இல்லை, இலவசமாக வழங்கும் அருங்கனி ஏசற்றவர்க்குத்தான் இனிய சுவைக் கனியாகும். ஏனையோரோ, சிவசிவ என்கிலர் தீவினையாளர். மக்களைக் கூவி யழைத்துக் கொடுக்கிருர் சிவக்கனியை.

"மனிதார்கள் இங்கே வம்மொன்று
சொல்லுகேன்
கனிதந் தாற்கனி உண்ணவும்.
வல்லிரே?
புனிதன் பொற்கழல் ஈசன் எனும்கனி
இனிது சாலவும் ஏசற்றவர் கட்கே!

## உய்மின்கள்

அடியார்க்கும் பொதுமக்களுக்கும் வேருெரு வேண்டுகோளும் விடுக்கின்ருர்.

"வேம்பினைப் பேசி விடக்கினை யோம்பி
வினை பெருக்கித்
தூம்பினைத் தூர்த்தங்கோர் சுற்றம் துணை
யென்றிருந்திர் தொண்டீர்
ஆம்பலம் பூம் பொய்கை யாரூரமர்ந்
தான் அடிநிழற் கீழ்
சாம்பலைப் பூசிச் சலமின்றித் தொண்டு
பட்டுய்ம் மினே.

## ஒன்றியிருமின்

தில்லைச் சிற்றம்பலவர் அருள் நடம் புரியும் கால் அவரது பாவனை நம்மை யெல்லாம் "நீ எப்போது இங்கே வந்தாய் ?" என்று கேட்கின்றதுபோல் உள்ளதாம். அவ்வளவு பரிவுடன் நம்மைப் பார்த்து விசாரிக்கும் பரமனை ஓரிடத்தில் அமைதியாக இருந்து தியானம் செய்வதால் நமக்குள்ள் ஊனம் போய் ஞானம் வரும் என்கிருர் அப்பர்.

ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்
கூனமில்லை
கன்றிய காலனைக் காலாற் கடிந்தான்
அடியவற் காய்ச்
சென்று தொழுமின்கள் தில்லை யுட்
சிற்றம்பலத்து நட்டம்
என்று வந்தா யென்னும் எம் பெருமான்
தன் திருக்குறிப்பே!"

## பிறவியும் வேண்டுவதோ?

இவ்வாறு தில்லைக் கூத்தரையும் அவர் தம் தூக்கிய திருவடியாகிய குஞ்சிதபாதத்தையும் ஒரு முறை நாம் காணப் பெறுவோமேயானுல் அதற்கப்புறம் இவ்வுடம்பும் மிகை, இப்பிறவியால் பெறக்கூடிய பேரின்பம் பிறிதொன்றில்லை என்கிருர் திருநாவுக்கரசர்." See Naples and die" என்ருெர் ஆங்கிலப் பழமொழி உண்டு. நேப்பிள்ஸ் நகரைப் பார்த்தபின் இறந்துவிடு என்பது அது. அதாவது அதன்பின் நம் கண் கொண்டு மற்றினிக் காண்பதென்ன என்று கூறுவது போலும்.

" குனித்த புருவமும் கொவ்வைச் செவ்
வாயுட் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம் போல்
மேனியிற் பால் வெண்ணீரும்
இனித்த முடைய தோர் எடுத்த பொற்
பாதமும் காணப் பெற்ருல்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே
இம்மாநிலத்தே."

'வேண்டுவதே' என்பதின் ஏகாரத்தை ஓகாரமாக்கி எதிர்மறைப்பொருள் கொண்டால் இந்த உரை பொருந்தும். அஃதன்றி ஏகாரத்திற்குத் தெளிவுப் பொருள் கொள்ளின், எடுத்த பொற் பாதம் காணும் வாய்ப்புக் கிட்டுமானுல் அதற்காகவாவது இம்மனிதப் பிறவியை யாம் பெற்று வைத்திருக்க வேண்டும் என்ற பொருளை அது கொடுக்கும்.

## பொறியிலீர்

இறைவன் திருவருளால் எண்ணிறந்த சான்றுகள் எங்ஙனும் நிறைந்து நிற்கினும்

அவற்றைக்கண்டும் கூட பொறியிலீர்களே உமக்கு ஏன் கடவுள் உண்மை புலனுக வில்லை என்று கடாவுகிருர் அப்பர்.

''குறிக ளும்அடை யாளமும் கோயிலும்
நெறிக ளும்அவர் நின்ற தோர்
நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும்
பொறியி லீர்மனம் என்கொல்
புகாததே?''

## எற்றுக்கோ முனிவு?

எண்பது வயதுக் கிழவரானுலும் இறை யருளில் திளைத்திருந்த அப்பர் பெருமான் அச்சம் என்பதே அறியாதவர். அத்துடன் அவர் நமக்கும் அச்சம் அகற்றும் தாரக மந்திரம் உபதேசித்தருளுகிருர். எக்காலத் திற்கும் எல்லாமக்களுக்கும் பொருந்தும் பொதுவான பாடல் இது.

"நாமார்க்கும் குடியல்லோம்
நமனையஞ்சோம்
நரகத்தில்இடர்ப்படோம்
நடலையில்லோம்
ஏமாப்போம், பிணியறியோம் பணிவோம்
அல்லோம்,
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை
தாமார்க்கும் குடியல்லாத் தன்மையான
சங்கரன் நற்சங்கவெண் குழையோர்
கோமாற்கே நாமென்றும் மீளா [காதில்
ஆளாய்க் கொய்மலர்ச்சே வடி
யிணையே குறுகி னேமே.''

"கற்றுக் கொள்வன வாயுள நாவுள
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடை யானுனள்
நாமுளோம்
எற்றுக்கோ நமனுல் முனிவுண்பதே?''

இப்பாடலைக் காலஞ்சென்ற தமிழ்முனிவர் திரு. வி. க. அவர்கள் அடிக்கடிப் பாடி ஆன்மசக்தி பெறுவதை யான் கண்டும் கேட்டும் உள்ளேன்.

## எது பக்தி ?

"மனத்துக்கள் மாசிலன் ஆதல்
அனைத்துஅறன்
ஆகுல நீர பிற.''

என்ற குறட்பாவிலே உள்ள 'அறன்' என்பதற்குப் பதிலாக அரன், என்னும் சொல்லைப் பெய்து கொண்டால் இக்குறள் இன்னும் உயரியதொரு பொருளுடைத்தாம். இதன் விளக்கமே பெரிய புராணத்தில் வரும் பூசலார் நாயனுர் கதை.

இக்கருத்தினைத்தான் நாவுக்கரசர் பாவ நாசத் திருக்குறுந்தொகை என்னும் ஒரு பதிகம் முழுவதிலுமே வெகு அழகாக விளக்கியுள்ளார்.

1. கங்கையாடிலென் காவிரி யாடிலென்
கொங்கு தண்குமரித்துறை யாடிலென்
ஓங்கு மாகடல் ஓதநீர் ஆடிலென்
எங்கும் ஈசன் எனுதவர்க்கில்லையே.

2. வேதம் ஓதிலென் வேள்விகள் செய்
யிலென்
நீதி நூல்பல நித்தம் பயிற்றிலென்
ஓதி யங்கமோர் ஆறும் உணரிலென்
ஈசனையுள்கு வார்க்கன்றி இல்லையே.

3. காலை சென்று கலந்துநீர் மூழ்கிலென்
வேலை தோறும் விதிவழி நிற்கிலென்
ஆலைவேள்வி அடைந்தது வேட்கிலென்
ஏல ஈசன்என் பார்க்கன்றி இல்லையே

4. கான நாடு கலந்து திரியிலென்
ஈன மின்றி இருந்தவம் செய்யிலென்
ஊனை யுண்டல் ஒழிந்துவான் நோக்கி
லென்
ஞானன் என்பவர்க் கன்றி நன்கு
இல்லையே

5. நன்றுநோற்கிலென் பட்டினியாகி
லென்
குன்ற மேறி இருந்தவம் செய்யிலென்
சென்று நீரிற் குளித்துத் திரியிலென்
என்றும் ஈசன் என்பார்க்கன்றி
இல்லையே.

## சாத்திரம் கோத்திரம் எற்றுக்கு

எப்போதுமே சாத்திரமும் கோத்திரமும் பேசி ''அவர் தேவர் இவர் தேவர்'' என்று இரண்டாட்டுகின்ற சாதிப் பித்தர்களைப் பார்த்து ஏளனம் செய்து அவர்கட்குப் போதிக்கின்ருர், அப்பர் பெருமான்.

"சாத்திரம் பல பேசும் சழக்கர் காள்
கோத்திரமும் குலமும் கொண் டென்
செய்வீர்
பாத்திரம் சிவம் என்று பணிதிரேல்
மாத்திரைக்குள் அருளும் மாற் பேரரே."

# அப்பர் தேவாரத்தில் அடியவர்கள்

புலவர் திரு. சொ. சிங்காரவேலன், எம் ஏ., டிப். லிங், மாயூரம்.

## அடியவர் நினைவு

இறைவன் திருவடியில் தம் சிந்தைஒன்று பட்டு விளங்குபவர்கள் அடியார்கள். தம் சிந்தையினைக் குவித்துப் பரம்பொருள் நினைவில் நிலைத்து நிற்கும் அவ்வடியார் பலரை அப்பரடிகள் தம் தேவாரப் பதிகங்களிற் குறித்துள்ளார். திருச்செங்காட்டங்குடிக்கு அடிகள் எழுந்தருளி வழிபட்டபோது, அப்பூதி அடிகளைப் பற்றிக் குறித்துள்ளார். நல்லூர் வழிபாட்டில் அமர்நீதியார் நினைவு அடிகட்கு வருகிறது. குறுக்கை வீரட்டத்தில் கண்ணப்பர், சாக்கியர், கணம்புல்லர், சண்டீசர் நினைவுகள் அடிகட்கு எழுகின்றன. கோச்செங்கட்சோழர் திருப்பணி நினைவு அங்கு அவர்க்கு வழிபாட்டு நிலையில் எழுந்துள்ளது. திருவாவடுதுறை போந்து அடிகள் வழிபட்டபோது கழுமலவூரராம் திருஞானசம்பந்தர் நினைவு திருவருட் குறிப்பால் எழுகின்றது. இவ்வாறே நமிநந்தியடிகள் நீரால் விளக்கிட்ட செய்தி அப்பரடிகளாற் சில பதிகங்களில் நினைவு கூரப்பட்டுள்ளது. இவை தனியே குறிக்கத்தக்க நல்லடியார்கள் பற்றிய குறிப்புக்களாக உள்ளவை.[1]

## நடை முறை உலக உணர்வு

பொது நிலையில் நின்று தம் கால அடியார் அன்பு வழிபாட்டையும் அடிகள் சுட்டிக் காட்டாமல் இல்லை. அடிகள் ஆண்டவன் அருளில் திளைத்து நின்ற நல்லடியாரே எனினும், சிறந்த தமிழ்க் கவிஞர், ''தமிழ் மொழித் தலைவர்'' என்று சேக்கிழார் பாடும் அளவிற்குச் சிறந்த இயற்புலவர்[2]. தாண்டகம்என்ற புதிய யாப்பு வகையைத் தமிழிற்குத் தந்த தனிப்பெருங் கவிஞர். அவரது சிந்தனை இறைவன் திருவடிகளில் ஒன்றியிருந்ததேனும், நடைமுறை உலகை அவர் நோக்கியும் பல குறிப்புக்களை நல்கியுள்ளார். சிறந்த கவிஞர் இயல்பே, அது போன்று மெய்யாக உலகைக் கூர்ந்து நோக்கிப் பாடல் புனைவது என்று கூறுவர். தம் காலத்து இருந்த கோயில் வகைகள்[3] அடியவர் வழிபாட்டு நிலைகள் ஆகியவற்றை அடிகள் தம் திருப்பதிகங்களிற் சுட்டியுள்ளார்.

## பொது நிலைக் குறிப்புக்கள்

அடியார்களது அன்புச் செயல்களைப் பத்து வகையாகக் கண்டிருக்கின்றனர் அடிகள். அதனாலேயே பத்துக்கொலாம் அடியார் செய்கை தானே' என்று அடிகள் பாடக் காணுகின்றோம்.[4] 'பத்து உடையீர் ஈசன் பழவடியீர்' என்ற மணிவாசகர் திருவாக்கும் இங்கு நம் சிந்தனையில் எழுகின்றது.[5] இந்தப் பத்து எது? கண்ணீர் அரும்

1. திருநாவுக்கரசர் தேவாரப்பதிகங்கள்=மூன்றாவது பதிப்பு— சைவசித்தாந்த மகாசமாசம்—1941, 4—12—10, 4—97—7, 4—49—7, 4—49—6, 4—49—9, 4—49—3, 4—56—1, 4—102—2, 4—102—4.
2. திருத்தொண்டர் புராணம் —மூன்றாவதுபதிப்பு—சைவ சித்தாந்த மகாசமாசம் 1950—பா.2501.
3. திருநாவுக்கரசர் தேவாரப் பதிகங்கள் —முன்பதிப்பே:
   தூங்கானை மாடம்—4—109—1-10, கரக்கோயில், 5—19—1—10
   பூங்கோயில் 4—19—5, இளங்கோயில்:— 5—11—1.
   ''தோற்றும் கோயிலும் தோன்றிய கோயிலும்
   வேற்றுக் கோயில் பலவுள''
4. முன்பதிப்பே— 4—18—10
5. திருவாசகம்— திருவெம்பாவை— பா. 3

பல் முதலிய மெய்ப்பாட்டு நிகழ்ச்சி நிலைகள் என்பாரும், பற்று (அன்பு) என்பதே பத்து என நின்றது என்பாரும் உண்டு. எதுவாயினும் அடியவரிடம் காணப்பட்ட அன்பு நிலையை இவ்வாறு அடிகள் குறித்தார் என்று கொள்ளலாம். அடியார்கள் இறைவன் திருப்புகழைப் பேசி வழிபாடு செய்வதும் அக்கால வழக்கு. இறைவனது திருப்புகழைப் பேசும்போது, அன்புடைமை காரணமாக மிகுதியாகப் புகழ்ந்தேத்தியும், இரு பொருள் தோன்றக் குற்றப்படப் பேசியும் கூட அடியவர் வணங்கி வாழ்த்துவதை அடிகள் கண்டிருக்கக் கூடும். அதன் காரணமாகவே,

> ''குணங்கள் சொல்லியும் குற்றங்கள்
> பேசியும்
> வணங்கி வாழ்த்துவர் அன்புடையா
> ரெலாம்''

என்று அடிகள் பாடுகின்றனர் என்று கொள்ளலாம் [6]

## அடியவர் ஆற்றிய வழிபாட்டு வகைகள்

அடியவர் பலர் செய்த சரியை வழிபாட்டையும் அடிகள் உரைக்கின்றனர். ''பெரும் புலர் காலை மூழ்கிப் பித்தர்க்குப் பத்தராகி, அரும்பொடு மலர்கள் கொண்டு ஆங்கு ஆர்வத்தை உள்ளே வைத்து ,விரும்பி நல் விளக்குத் தூபம் விதியினால்'' இடுகின்ற வழிபாடு [7] ''ஆப்பி நீரோடு அலகு கைக் கொண்டு'' பூப்பெய் கூடை புனைந்து சுமந்து, இயற்றும் வழிபாடு[8] பற்றிய குறிப்புக்கள் அனைத்தும் இவ்வகையிற் கொள்ளத்தக்கனவாகும்.

## தொண்டு நிலைகளும் பயன்களும்

இனி, அடியார்கள் செய்த தொண்டு நிலைகள் பலவற்றையும் நாவுக்கரசர் நவின்றுள்ளார் (1) நீரால் விளக்கிடுதல், (2) மெழுக்கிடுதல், (3) மலர் தொடுத்தல், (4) விளக்கிடுதல் (5) பாமாலை பாடுதல் ஆகியவை அவை. இவற்றால் விளையும் பயன்களையும் அடிகளே நவின்றுள்ளார். இவை கூறப்பட்டுள்ள இயல்பினை நோக்கினால் அக்கால அடியவர் சீரியல்புகளைக் கூர்ந்து நோக்கியே அடிகள் கூறியுள்ளனர் என்று கொள்ளுதல் வேண்டும். அவ்வருந்திருப் பாடல் வருமாறு.[9]

> ''விளக்கினார் பெற்ற இன்பம் மெழுக்
> கினாற் பதிற்றியாகும்
> துளக்கினன் மலர்தொடுத்தால்
> தூயவிண் ணேறலாகும்
> விளக்கிட்டார் பேறுசொல்லின் மெய்ந்
> நெறி ஞானமாகும்
> அளப்பில கீதஞ்சொன்னார்க் கடிகள்
> தாம் அருளுமாறே''

இதனுள் 'திருவிளக்கிடுந் திருப்பணிஞானத்தைத் தரும்' என்றும், 'பாக்கள் பாடி வழிபடுவார்க்குப் பேரருள் கிட்டும்' என்றும் அடிகள் கூறும் குறிப்புக்கள் இக்கால அன்புலகம் கூர்ந்து பின்பற்றத்தக்க குறிப்புக்களாம்.

கண்டி யணிந்து, நெற்றியில் பொட்டு இட்டு, மெய்யெலாம் நீறுபூசி, இறைவனுக்குரிய நறுமலர்களை மரங்களில் ஏறிப் பறித்து, தூநீராடி வழிபாடு செய்யும் அக்கால அடியவர் நிலையை அடிகள் தரும் அமுதவாக்கில் ஆங்காங்குக் காணலாகும்[10] இந்தக் குறிப்புக்களுடன் அடிகளார் தம் மேலிட்டுக் கூறும் குறிப்புக்கள் பலவும் இணைத்துக் கொள்ளத்தக்கன. காட்டாக.

> ''சலம்பூவொடு தூப மறந்தறியேன்
> தமிழோடிசை பாடல் மறந்தறியேன்.

என்பது போன்றவை (இதனுள், [11] ''சலம்பூவொடு தூவமறந்தறியேன்'' என்றே இருக்கற்பாலது என்றும், பூவும் நீரும் தூவி வழிபடுதலை அடிகளும், அடிகள் கால சமயத் தலைவராகிய திருஞான சம்பந்தரும் தம் திருப்பதிகங்களில் எண்ணற்ற இடங்களிற் கூறியுள்ளமை ஒப்பிட்டுணரத் தக்கதென்

---

6. முன்பதிப்பே— 5—14—6
7. முன்பதிப்பே— 4—31—4
8. முன்பதிப்பே— 5—95—3
9. முன்மதிப்பே— 4—77—3
10. முன்பதிப்பே— 5—95—2,10,6, பாடல்கள்.
11. முன்பதிப்பே— 4—1—6,

றும், காஞ்சித் தொண்டை மண்டல ஆதீனத்தலைவர் அருட்டிரு அடிகளார் கருதுவர்.)

இவ்வாறே அகத்தே பூசை இயற்றி வழி படும் திருத்தொண்டர் நிலையையும் அடிகள் குறித்துள்ளார்.[12] அத்தகைய தொண்டர் திருக் கூட்டத்திற்குத் தொண்டு செய்வது 'புண்ணியம்' என்றும் அது தமக்கு உண் டாவதென்றுகொலோ என்றும் அடிகளார் ஏசற்று நிற்பதும் அடிகளார் அமுதப்பாக்க ளினின்றும் அறியப் பெறுவதாகும்.[13]

## நாயன்மார் குறிப்புக்கள்

அப்பூதி அடிகளது வேள்விச் சிறப்பை மட்டுமே அடிகள் குறித்துள்ளார். 'அஞ்சிப் போய்க்கலிமெலிய அழலோம்பும் அப்பூதி' என்பது அது, அமர்நீதி நாயனரது கோவணத் தொண்டு புகழப்பெற்றுள்ளது. கணம்புல்லரது தொண்டும் பொதுநெறியிற் புகழப்பெற்றுள்ளது. கண்ணப்பர் தம் கண்ணை அப்பிய செய்தியும், சண்டீசர் திருத்தொண்டும் ஓவியம்போல் அழகிய திருப்பாடல்களில் தீட்டப் பெற்றுள்ளன.

> "காப்பதோர் வில்லும் அம்பும் கையதோர் இறைச்சிப்பாரம்
> தோற்பெருஞ் செருப்புத்தொட்டுத் தூயவாய்க் கலசம் ஆட்டித்
> தீப்பெருங் கண்கள் செய்யக் குருதிநீர் ஒழுகத் தன் கண்
> கோப்பதும் பற்றிக் கொண்டார் குறுகை வீரட்டனுரே"

> "தழைத்ததோர் ஆத்தியின் கீழ்த் தாபர மணலாற் கூப்பி
> அழைத்தங்கே ஆவின் பாலைக் கறந்து கொண்டாட்டக்கண்டு
> பிழைத்ததன் தாதைதாளைப் பெருங் கொடு மழுவால் வீசக்
> குழைத்ததோர் அமுதமீந்தார் குறுக்கை வீரட்டனுரே"

பாடல்கள் அல்லது கவிதைகளைப் பேசும் ஓவியங்கள், (speaking pictures) என்றும், ஓவியங்களைப் "பேசாப் பாட்டுக்கள் (dumb poetry) என்றும், தற்காலத் திறனாய் வாளர் கூறுவது இங்கு நினைக்கத் தக்கது. ஆம்; அடிகளாரது மேற்காட்டிய இருபாடல் கள் "பேசும் ஓவியங்களாக" நின்று அவர்க்கு மிகு பழங்காலத்து வாழ்ந்த அவ் விரு பெருந்தொண்டர்களது அன்பின் நிலையை விளக்குகின்றன. நமிநந்தியடி களது விளக்குத் தொண்டும். சாக்கியரது பூத்தொண்டும், இவ்வாறே பொதுவாக அடி களாராற் புகலப் பெற்றுள்ளமை அடிகளார் திருவாக்கிற் காணலாம்.

நமிநந்தியடிகள் தண்ணீர் விளக்கெரித்த திருத்தொண்டினைத் திருவாரூரில் வெளிப் படை, குறிப்பு ஆகிய இருவகையிலும் அடிகள் நவின்றுள்ளார்; அத்துடன் 'தொண்டர்க்கு ஆணிப் பொன்' என்றும் சிறப்பித்துள்ளனர்.

> ஆரூர் நறுமலர் நாதன் அடித்தொண்டன் நம்பிநந்தி
> நீரால் திருவிளக் கிட்டமை நீணுட றியு மன்றே"

> "நந்திபணி கொண்டருளும் நம்பன் தன்னை"

இவ்வாக்கிலிருந்து, 'நம்பி நந்தி' என்பதே சரியான திருப்பெயர் என்பதும், அதுவே அவ்வடியார்க்கு அப்பரடிகள் காலத்தே வழங்கியது என்பதும் அறியலாகும். நம்பி நந்தி என்பது நாளடைவில் 'நமி நந்தி' என்று மாறியதாகக் கருத இவ்வாக்குத் துணை செய்கின்றது. அமர்நீதி நாயனர் வரலாற்றில் நிகழ்ந்த நிகழ்ச்சி வழிவழியாக உலக மக்களால் வியந்து பேசப் பெற்று வந்தது என்பதை அடிகளது "உரைக்கு மன்ரே இவ்வகலிடமே" என்றவாக்கு மெய்ப்பிக்கின்றது. அதன் மேலும் இந் நிகழ்ச்சி நல்லூரிலேயே நிகழ்ந்திருக்க வேண்டும் என்பதும் இதனுற்புலனுகின்றது. சண்டீசர் தந்தையின் தாளைப் பெருங் கொடு மழுவால் வீசிய செய்தியை முன் கூறியபடி விரிவாக ஓவியமாகவே அடிகள் எழுதிக்காட்டி விடுகின்ருர். இவ்வாறே

---

12. முன்பதிப்பே — 4. 76—4, முதலியன.
13. முன்பதிப்பே—4—101—1—10.

சாக்கியர் திருத்தொண்டு அடிகளால்,

புத்தன் மறவாது ஓடி
எறிசல்லி புதுமலர்கள் ஆக்கினான் காண்''

என்றும்,

''கல்லினால் எறிந்து கஞ்சி தாமுணும்
சாக்கியனார்
நெல்லினார் சோறுணாமே நீள்விசும் பாள
வைத்தார்''

என்றும் ஏத்தப்பெற்றுள்ளமை குறிக்கத் தக்கது. இனி, கோச்செங்கட்சோழநாயனார், திருவானைக்காவில் தன் வாயின் நூலால் திருநிழற்பந்தர் செய்து வழிபட்ட சிலந்தி யின் திருவவதாரமே என்பதனை அடிகள் அருளியுள்ளார்.

## சிறப்பு வழிபாடுகள் - திருவிழாக்கள்:

அப்பர் காலத்தே வாழ்ந்த அடியார்கள் நாட்பூசனை, சிறப்புப்பூசனை இரண்டும் செய்து வழிப்பட்டனர் என்பது அவர் தேவாரப் பதிகங்களால் இனிது விளங்கும். திருக்குறுக்கையில் அட்டமிக்கு முந்திய ஏழு நாளும் கூத்தராக இறைவனை எழுந்தருள் வித்து வழிபட்டிருக்கின்றனர். திருவாரூரில் திருவாதிரைத் திருநாளில் விழா எடுத்துப் போற்றி யிருக்கின்றனர். பங்குனி உத்திரத் திருவிழா திருவாரூரிலும், திருவொற்றியூரிலும் சிறப்புற அடியார்களால் கொண்டாடப் பெற்றது. குடந்தையில் பல தீர்த்தங்கள் ஒருங்கிணைந்து அன்பர்கட்கு நலம்பல நல்கின. திருவிடை மருதூர்ப் பூசநாள் விழா பெருஞ்சிறப்புடையதாய் விளங்கிற்று.[14]

இவற்றுள், அவர்கால அடியார்கள் திருவா ரூரில் திருவாதிரைத் திருவிழாக் கொண்டாடிய திறத்தினைக் குறிஞ்சிப் பதிகம் ஒன்றில் அடி கள் குறித்துள்ளார். ''முத்து, விதானம், கவரி, ஆகியவற்றை அன்பர்கள் ஆணும் பொன்னுமாகக் கூடி ஏந்தியவாறு வீதி களில் வந்தனர். வீதிகள் தோறும் வெண் கொடி, விதானங்கள், நவமணிகள் அழகு செய்தன. சங்கு, பறை, கல்லவடம் ஆகிய இசைக்கருவிகள் ஒலித்தன; அவ்வொலியை இடி முழக்கி வந்த ஒலி எனக் கருதி மயில் கள் மருண்டன. இறையடி பரவி விம்மியும் வெருவியும் சென்றும் அன்பர் கூட்டத்தில் மைந்தர்களோடு மங்கையரும் இருந்தனர். துன்பம் நும்மை தொழாத நாள்கள் என் பாரும், இன்பம் நும்மை ஏத்தும் நாள்கள் என்பாருமாக அடியார்கள் கூடித் திருவாதி ரைத்திருநாளைக் கொண்டாடினர்'' என்பது திருவாரூர்த் திருவாதிரை நாள்பற்றி அப்ப ரடிகள் தரும் விளக்கம் ஆகும்.[15]

## தொகுப்புரை :

சுருக்கமாகக் கூறினால், அப்பர் தேவாரத் தால் அறியப்பெறும் அடியார்கள் மன, மொழி, மெய் மூன்றாலும் இறைவனை வழி பட்டனர் என்றும், அவர்கள் ஞானவழிபாடு சரியை வழிபாடு ஆகிய பலநிலைகளில் நின் றனர் என்றும், அவர் காலத்திற்கு முந்திய நாயன்மார் திறம் அவரால் இயம்பப் பெற் றுள்ள திறம் இத்தகையது என்றும் கூற லாம். அடியாரை வழிபடும் அடியார் வழி பாடு (சங்கம வழிபாடு) அவர்காலத்தேயே வழக்கில் இருந்தது என்பது புலன் ஆகும்

---

14.—முன்பதிப்பே—4—50—2, 4—21—3, 6—45—5, 5—22—3—4, 6—75—10:

திருவிடைமருதூர்க்கு அப்பரடிகள் பூசத்திருநாளன்று சென்று வழிபட்டு நீராடி யிருக்கக் கூடும் என்பது பின் வருந்திருவாக்கினால் புலப்படும்: (5—14—10)

"பாசமொன் றிலராய்ப்பல பத்தர்கள்
வாசநாண்மலர் கொண்டடி வைகலும்
ஈசனெம் பெருமான் இடைமருதினில்
பூசநாம் புகுதும் புனலாடவே''

15. முன்பதிப்பே—4—21—1—10. பாடல்கள்.

# அப்பர் தேவாரத்தில் திருநீறு

சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர், தேவகோட்டை

பரம் பொருளாகிய சிவபெருமான் மெய்யடியார்களை உய்யக் கொள்ளுதற்காகத் தமது சதாசிவ மூர்த்தத்திலிருந்து வெளிப்படுமாறு செய்தருளிய வேத சிவாகமங்களோடு ஒப்பத், தேவார திருவாசக முதலிய அருள் நூல்களைப் பதி வாக்கென்றே கொண்டு நமது சைவ பாரம்பரியம்தொன்று தொட்டுப் போற்றி வருகின்றது. சிவகரணங்களுள் தமது பசு கரணங்கள் அடங்கத் தமக்கெனச் செயலும், தாமும் அற்ற நிலையில் நமது அருளாசிரியன்மார் தேவார திருவாசகமாதிய அருட் பாடல்களை வழங்கியுள்ளனர். வேத சிவாகமக் கருத்துக்கள் தேவார திருவாசகங்களுள் இடையீடின்றி எங்கும் விரவியிருப்பதை நமது முன்னோர் பலரும் எழுதியும் பேசியும் போற்றியுள்ளார்கள்.

வேதம், சித்தாந்த சைவரல்லாத வேறு சில சமயத்தினராலும் ஒருபுடை ஒப்புக் கொள்ளப் பெறுவதாயினும், வேதாந்தமாகிய முடிவு சித்தாந்த சைவத்திலன்றி வேறு எங்கணும் நிலைநிற்கக் காண்கின்றோமில்லை. சைவ சாதனங்களான திருநீறு உருத்திராக்கம் ஆகியவை பற்றித் தனித் தனி உபநிடதங்கள் முறையே "பஸ்ம ஜாபாலம்", "ருத்ராக்ஷ ஜாபாலம்" என்னும் பெயர்களுடன் வேதாந்த—ஞான காண்டப் பகுதியில் விளங்கக் காண்கிறோம். இதையே சிவாகமங்களும் ஆங்காங்கே தெளிவுபடுத்தி உரைக்கின்றன. "சைவத்தின் மேற் சமயம் வேறில்லை" எனவும், அதைச் சார்ந்து விளங்குகின்ற 'சிவமாம் தெய்வத்தின் மேல் தெய்வமில்லை' எனவும் ஐயம் திரிபற உணர்ந்து, சித்தாந்த சைவ நெறியைக் கடைப்பிடித்து திருநீறு உருத்திராக்கங்களை அணிந்து, திருவைந்தெழுத்தை இடையறாது சிந்திக்கும் பேறு பலகோடிப் பிறப்புக்களில் செய்த நல்வினைப் பயனால் வருவது என்பதை ஒவ்வொருவரும் செம்மையாகத் தெளிந்து கொள்ளுதல் வேண்டும்.

தெய்வத் திருவருளை எளிதில் வழங்கியருளுகின்ற திருநீற்றின் சிறப்பு அளவிட்டுரைக்கும் தரத்ததன்று. சிவபெருமானது பரத்துவ உண்மையை விளக்குகின்றதும், ஆன்மாக்களின் மலமாயா கன்ம பாசங்களை அறவே ஒழித்து அவைகளுக்குச் சிவப்பேற்றை வழங்குகின்றதும், உலகியலில் உடற்பிணி ஆகிய துன்பங்களை அகற்றி இன்புறுத்துகின்றதும், திருநீறே என்பதைச் சமய குரவர்களாகிய நமது ஞானசிரியர்கள் தமது அருட் பாடல்களில் ஆங்காங்கே குறிப்பிட்டருளியுள்ளார்கள். சமய குரவர் நால்வரில் முன்னே தோன்றியவரும், பல ஆண்டுகள் நிலவுலகில் வாழ்ந்து உலகியல் அனுபவங்களைத் தமது ஞானனுபவத் திருவாக்கால் வெளிப்படுத்தித் தந்தவரும் ஆகிய அப்பரடிகள் தமது தேவாரத்தில் நூற்றுக்கும் மேற்பட்ட இடங்களில் திருநீற்றைக் குறிப்பிட்டு அதன் பெருமையை விளக்கியுள்ளார்கள்.

சிவபெருமானது திருமேனி முழுவதிலும் திருநீறு பூசப் பெற்றிருப்பதை வேத சிவாகமங்கள் பல இடங்களில் சொல்லித் துதிக்கின்றன. கங்காளனாகிய கடவுள் பூசுகின்ற திருநீற்றை மங்காமல் பூசி மகிழும் தொண்டர்களுக்கு வினைகள் தங்கா என்றும், சிவகதி சாரும் என்றும், சிங்காரமான திருவடிப் பேறு சித்திக்கும் என்றும் திருமூல தேவ நாயனார் தமது திருமந்திரத்தில் குறிப்பிடுகின்றார். ஆண்டவனும் அடியார்களும் திருநீற்றை நிறையப்பூசி அருள் வழங்குதலும் அருள் பெறுதலும் செய்கின்றார்கள் என்பதை அப்பரடிகள் திருவாக்கு ஆங்காங்கே நினைவுபடுத்திச் செல்லுகிறது.

பொய்ச் சமயமாகிய சமண சமயத்தை விட்டுத் திருவதிகை வீரட்டானப் பெருமானது நல்லருளால் திலகவதியார் திருமுன்னர் வந்த அப்பரடிகளுக்கு அம்மையார் முதற்கண் வழங்கியது திருநீறேயாகும். இதனைச் சேக்கிழார் சுவாமிகள் "வெள்ளிக் குன்றுடையான் திருநீற்றை அஞ்செழுத்து ஓதிக் கொடுத்தார்" என்று குறிப்பிடுவார்கள். அம்மையாரிடமிருந்து பெற்ற திருநீற்றை அப்பரடிகள் அணிந்துகொண்ட முறையை" திருவாளன் திருநீறு திலகவதியாரளிப்பப், பெருவாழ்வு வந்ததெனப் பெருந்தகையார் பணிந்தேற்றங்கு, உருவார அணிந்து" என்று திருத்தொண்டர் புராணம் கூறுகிறது. இங்ஙனம் சமயப் பிரவேசத் தொடக்கத்திலேயே திருநீறு அப்பரடிகளால் போற்றி ஏற்றுக்கொள்ளப் பெற்றது. இதன் சிறப்பை அப்போது அவர் ஓதியருளிய "கூற்ருயினவாறு" என்னுந் தலைப்பை உடைய பதிகத்தின் மூன்ருந் திருப்பாடலில் "பிணிந்தார் பொடிகொண்டு மெய்பூசவல்லீர்" என்று சிவபெருமான் திருநீறு பூசும் வன்மையைக் குறித்துக் காட்டி விளக்கியருளியுள்ளார். இங்குச் சிவபெருபெருமானைத் திருநீறு பூசுபவர் என்று கூருமல், பூசவல்லவர் என்று கூறியருளியதன் நுட்பம் சிந்தித்தற்குரியதாகும்.

திருநீற்றின் தோற்றத்தைப் பற்றிச் சிவபுராணங்கள் என்ன கூறுகின்றன என்பதை இங்கே நினைவு கூர்தல்வேண்டும். அண்டபேரண்டங்களாகிய அனைத்துப் புவனங்களும் சிவசக்தியினுள் ஒடுங்க, அவளையும் தனக்குள்ளே ஒடுக்கிக்கொண்ட பேரூழிக் காலத்தில் சிவபெருமான், திருமால் நான்முகன் ஆகிய உயிர்த் தொகைகள் அனைத்தும் ஒடுங்கிய சாம்பர் படர்த்த மயானத்தில் திருக்கூத்து ஆடினுரெனவும், அந்த வேளையில் அவ்வாட்டத்தினுலெழுந்த சாம்பற்புழுதி அவர் திருமேனியிற் படிய அதனை எதிரேயுள்ள வெள்விடையின் முன்வழித்து எறிந்தாரெனவும், அதனை உண்டு அவ்வெள்விடை தனது பிந்துவைப் பசுக்கள் பால்விட, அப்பசுக்களின் கோமயம் திருநீற்றுக்கு மூலமாகிச் சிறந்ததெனவும் புராணங்கள் கூறுகின்றன. திருமால் பிரமன் ஆகியோரும் மலமாயா கன்ம பாசங்களையுடைய நம்மனைய உயிர் வர்க்கத்தினரே ஆதலின் அவர்களும் வேதனைப் படுதல், ,பிறத்தல், இறத்தல், மேல்வினையைச் செய்தல் ஆகியவற்ருல் துன்புறுபவரே ஆவர். இதுபற்றியே 'பிணிந்தார்' என்று திருமால் பிரமன் ஆகியோர் இங்கே அப்பரடிகளால் குறிக்கப் பெற்றனர்.

சிவபெருமான் ஒருவரே ஆதி நடுஅந்தமிலா அளவில் சோதி என்பதும், திருமால், பிரமனுதியோர் சிவபெருமானுற் செய்யப் பெறுகின்ற தோற்றநிலை ஒடுக்கங்களுக்கு உட்படுவார் என்பதும் அப்பரடிகளால் 'நூறு கோடிப் பிரமர்கள் நொந்தினுர், ஆறு, கோடி நாராயணர் அங்ஙனே, ஏறு கங்கை மணல் எண்ணில் இந்திரர், ஈறிலாதவன் ஈசன் ஒருவனே" என்னும் திருக்குறுந்தொகையில் உணர்த்தப் பெறுகின்றது. படைத்தல் காத்தலாகிய பெருந் தொழில்களுக்குத் தலைவர்களாக விளங்கும் கடவுளின் வீந்த உடற்பொடி சிவபெருமான் திருமேனியில் பூசப் பெற்றிருப்பது பற்றி, அதைப் பூசுவதற்குரிய வல்லமை அவரிடம் மட்டுமே உள்ளதென்பதை உணர்த்தவே "பூசவல்லீர்" என்ற சொற்றொடரை அமைத்தருளினுர்,

இனி ஐந்தாம் திருமுறையும், அப்பரடிகளின் இரண்டாம் திருமுறையுமாகிய திருக்குறுந்தொகைப் பகுதியில், சிவபெருமான் நிலைபெற்றுத் தங்குமிடங்களில் ஒன்று திருநீறணியும் திருத்தொண்டர்களது உள்ளம் என்று அடிகள் அருளுகின்ருர். சித்தும் சடமுமாகிய எல்லாப் பொருள்களிலும் நீக்கமற நிறைந்திருப்பது சிவபெருமானது இயல்பாயினும் அடியார்களை ஆட்கொள்ளுவதற்கு அவர் வெளிப்பட்டு வருகின்ற இடங்கள் இரண்டு என்று ஞான நூல்கள் கூறுகின்றன. "தாபர சங்கமங்கள் என்றிரண்டு உருவில் நின்று மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க் கருளை வைப்பன்" என்பது சிவஞான சித்திபார் திருக்கோயில்களில்எழுந்தருளியுள்ளசிவலிங்கமாதிய திருமேனிகளும். ஞானசிரியர், திருத்தொண்டர் ஆதிய சிவனடியார்களது திருவுருவங்களும் சிவனருள் வெளிப்பாட்டுக்கு நிலைக்களங்களாக இருப்பவை. பிற பொருள்களில் தயிரில் நெய்போல வெளிபட்டுத் தோன்றியருளுவான். அதனுல் ஞானசிரியரும், சிவ

னடியாரும் சிவபெருமானது திருக்கோயில் களே என்று போற்றுதற்குரியர்,

மற்ருெரு திருக் குறுந்தொகையில் சிவனடியார்களது திருவேடங்களுள் சிறந்ததாகிய திருநீற்றை, யார் அணிந்திருக்கிருர்களோ அவர்களது உள்ளங்களைப் பெருமான் தனது நிலைக்களமாகக் கொள்ளுவாரென்று அப்பரடிகள் "வெள்ளை நீறணிமேனி யவர்க்கெலாம், உள்ளமாய பிரானுர் உறைவிடம், பிள்ளை வெண்பிறை சூடிய சென்னி, கள்வன் சேர்கடம் பூர்க்கரக் கோயிலே' என்று கூறியருளுகின்ருர். இத் திருப்பாடலில் உள்ளத்திற் பெருமான் உறைவார் என்று கூறவந்த அடிகள் திருநீற்றுத் தொண்டர்களது உள்ளம்வேறு. சிவபெருமான் வேறு என்ற உணர்ச்சி நம் மனையவருக்கு வாராமற் பாதுகாக்க "உள்ளமாய பிரானுர்" என்று இரண்டையும் ஒன்ருகவே வைத்தோதியுள்ளார்.

திருவாஞ்சியத் திருக்குறுந் தொகையில் அருளை வழங்குகின்ற ஆண்டவனும் அருளைப் பெறுகின்ற அடியார்களும் திருநீறு பூசிய சிறப்புடையவர்க ளென்பதையும், திருநீறு பூசிச் சிவபெருமானை வணங்குபவர்களுக்குச் செல்வங்களெல்லாம் மல்கும் என்பதையும் அடிகள் அருளுகின்ருர்கள். அது "நீறு பூசி நிமிர்சடை மேற்பிறை, ஆறு சூடும் அடிகள் உறைபதி, மாறுதா ஞெருங் கும்வயல் வாஞ்சியம், தேறிவாழ் பவர்க்குச் செல்வமாகுமே" என்பதாகும். இத்திருப்பாடலில் வரும் "நீறுபூசி" என் பதை ஆறுசூடும் அடிகள் என்பதனேடு கூட்டிச் சிவபெருமான் திருநீறு பூசியுள்ள குறிப்பையும், தேறிவாழ்பவர்க் கென்பதனேடு கூட்டி அடியார்கள் திருநீறு பூசியுள்ள குறிப்பையும் தெளிவு படுத்திக் கொள்ளல்வேண்டும்.

ஆரும் திருமுறையாகிய திருத்தாண்டகப் பகுதியில் திருநீறு பூசிய மெய்யடியார்களது திருவுள்ளத்தில் மட்டுமின்றி அவர்களை வழிபடுகின்ற அடியார் உள்ளத்திலும் சிவபெருமான் வீற்றிருப்பார் என்று அருளிச் செய்கின்ருர். அந்தப் பகுதி எவரேனும் தாமாக இலாடத்திட்ட திருநீறும் சாதனமும் கண்டால் உள்கி....கவராதே தொழும் அடியார் நெஞ்சினுள்ளே கன்ருப்பூர் நடுதறியைக் காணலாமே' என்பதாகும் இதனுல் திருநீற்றுத் தொண்டர்க்குத் தொண்டராம் பேறு பெறுவதும் சிறப்புடையது என்பது தெற்றென விளங்குகின்றதல்லவா? இங்ஙனம்பல்லாற்ருனும் அப்பரடிகளால் சிறப்பித்துப் பேசப்படுகின்ற திருநீற்றை நிறையப்பூசி நித்தலும் நியமம் செய்து இம்மை மறுமை நலங்களை எளிதில் அடைவோமாக.



"புத்தியற் றிருக்கும் பொய்யர் புறச்சம யத்தை நீக்கிச்
சத்தியப் பொருளை யோர்ந்து தலைவனை யறிந்து சைவ
பத்தியிற் கனிந்த ஞானப் பழத்தினை யொருகற் றூணை
லத்தியைக் கடந்த நாவுக் கரசினை வணங்கு வோமே"

—செவ்வந்திப் புராணம்

# அப்பர் தேவாரத்தில் திருவைந்தெழுத்து

வித்துவான் திரு தி. பட்டுச்சாமி ஓதுவார், திருச்சிராப்பள்ளி

## தோற்றுவாய் :

முன்னைப்பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளாகிய இறைவனைச் சரியை, கிரியை, யோகங்களால் வழிபட்டு வினை நீங்கப்பெறுதற்கும், பின்பு சிவஞானம் கை வரப்பெற்று முத்திநிலை அடைந்து நிற்கத் துணையாய் இருப்பதும், சிவபெருமானுக் குரிய மேலான மந்திரமாக விளங்குவதும், மந்திரங்களுக்கெல்லாம் ஆதிமந்திரமாகத் திகழ்வதும் திருவைந்தெழுத்தே ஆகும். இது ஸ்ரீ பஞ்சாட்சரம் எனவும் பெயர் பெறும்: "ஆதிமந்திரம் அஞ்செழுத்து" என்பதும், "முந்தை முதல் மந்திரங்கள் எல்லாம் தோன்றும் முதலாகும் முதல்வனுர் எழுத்(து) அஞ்சு" என்பதும் பெரியபுராணம்.

வேதம் முதலாகிய பதினன்கு நூல் களுள் வேதமே சிறந்தது ; வேதத் துள்ளும் உருத்திரை காதசனி என்னும் ஸ்ரீ ருத்திர மந்திரமே மேலானது. ஸ்ரீ ருத்திர மந்திரத் தினும் மிக மேலானது ஸ்ரீ பஞ்சாட்சரமே ஆகும். வேத புருடனுக்கு ஸ்ரீ ருத்திர மந்திரம் கண்ணும், ஸ்ரீ பஞ்சாட்சரம் கண் மணியும் ஆகும்.

"சோணுசலத்தில் (அருணுசலத்தில்) உயர்ந்த க்ஷேத்திரம் இல்லை ; மகேசுவர தருமத்தில் உயர்ந்த தருமம் இல்லை ; சிவாக மத்தில் உயர்ந்த சாஸ்திரம் இல்லை ; பஞ்சாட் சரத்தில் உயர்ந்த மந்திரம் இல்லை என்பது அருணுசல மான்மியம்.

## திருவைந்தெழுத்து வகை :

திருவைந்தெழுந்து தூலம், சூக்குமம், அதிசூக்குமம் என மூன்று வகைப்படும்.

தூல ஐந்தெழுத்து (தூல பஞ்சாட்சாரம்) என்பது நகரத்தை முதலாகவும் யகரத்தை இறுதியாகவும் உடைய ஐந்தெழுத்து. அது நமசிவய என்பது. இதில் நம என்ற பகுதி பாசத்தையும், சிவ என்ற பகுதி பதியினையும் ய என்ற பகுதி பசுவினையும் (ஆன்மா வையும்) உணர்த்தும். ஆகவே, பதி, பசு, பாசம் என்ற முப்பொருள் உண்மையினைக் காட்டுவது திருவைந்தெழுத்தாம்.

நமசிவய என்பதை நூல்கள் நமச்சிவாய என வழங்குகின்றன. "நமச்சிவாய வாஅழ்க நாதன் தாள் வாழ்க" என்பது திருவாசகம். "மந்திரம் நமச்சிவாய ஆக நீறு அணியப் பெற்ருல்" என்பது அப்பர் தேவாரம். நமச்சிவாய என்பதனை நமஸ் எனவும், சிவாய எனவும் பிரித்து, சிவாய-சிவனுக்கு, நமஸ்-நமஸ்காரம் எனப்பொருள் கூறுவர்.

இறைவன் பஞ்சாக்கரமே திருமேனி யாகக் கொண்டுள்ளான். திருவடி நகரம், திருவுந்தி மகரம், திருத்தோள் சிகரம், திரு முகம் வகரம், திருமுடி யகரம் என்பதாம். இதனுல் நமசிவய என்பது தூல பஞ்சாட் சரம் எனப் பெயர் பெறும்.

சூக்கும ஐந்தெழுத்து (சூக்கும பஞ்சாட் சரம்) என்பது சிகரத்தை முதலாகவும் மகரத்தை இறுதியாகவும் உடைய ஐந்தெ ழுத்து. அது சிவயநம என்பது. இதில் சி-சிவம், வ-அருட்சத்தி, ய-ஆன்மா, ந-திரோதானசத்தி, ம-மலம் என்பதை உணர்த்தும். இங்கு ஒவ்வொரு எழுத்தும் பதம் எனப் பெயர் பெறும். சிவாயநம என்பதை அஞ்சு பதம் எனக்கூறுவர்: "அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி" என்பது சுந்தரர் தேவாரம். திருமூலர் சூக்கும ஐந்தெழுத்தை 'நாயோட்டு மந்திரம்' என்பர்.

அதிசூக்கும ஐந்தெழுத்து (அதிசூக்கும பஞ்சாட்சரம்) என்பது சிவ சிவ என்பதற்கு இடையே யகரம் உடைய ஐந்தெழுந்து. அது சிவயசிவ என்பது. இது காரண பஞ் சாட்சரம் எனவும், ஸ்ரீபஞ்சாட்சரம், எனவும் முத்தி பஞ்சாட்சரம் எனவும் பெயர் பெறும். யகரமாகிய ஆன்மா பாசத்தினின்றும் நீங்கி அருள் எழுத்தோடும் பதி எழுத்தோடும் நிற்றல் என்பது அதிசூக்கும ஐந்தெழுத்தின் பொருளாம்.

இந்த ஐந்தெழுத்துக்களை நூலின் வாயி லாக அறிந்தாலும், பிறர் சொல்லக் கேட்டா லும் குருமுகமாக உணர்ந்து முறைப்படி உச்சரித்தால்தான் இறைவன் திருவருளை எளிதில் பெறலாம். "அஞ்சில் இறைவன் அருள் பெறலாமே" என்பது திருமந்திரம்.

## திருவைந்தெழுத்தின் தன்மை :

திருவைந்தெழுத்தில் ஒவ்வொரு எழுத் தும் ஒவ்வொரு பொருளைத் தந்து நிற்பது. அவ்வவ்வெழுத்தின் உருவம் தெரிந்து செபித்தலே முறையாம். "உருவாய்த் தெரிந்து உன்றன் நாமம் பயின்றேன்" என்பது அப்பர் தேவாரம்.

ஒருவர் காலையும் மாலையும் திருவைந் தெழுத்தை விடாமல் ஓதின் இறைவன் திரு வடிக்கு அன்பு பெருகி நிற்பர். யாதொன்றும் அறியாதவர்களாயினும் ஐந்தெழுத்தை அன்புடன் ஓதி உணர்பவர் மனத்தின்கண் வேறுபாடின்றி அம்மையப்பர் இருவரும் மகிழ்ந்து வீற்றிருப்பர் என அப்பர் சுவாமி கள் கூறுவர்.

திருவைந்தெழுத்து ஆலையில் நசுக் குண்டு ஒழுகும் கரும்பின் சாறுபோலத் தித் திக்கும் தன்மையுடையது. ஆனால் இம் மந்திரம் நற்பயன் உடையது என்பதைத் தெளியாமல் ஐயுற்றுக் கொண்டு ஓதுபவரி டத்தில் இறைவன் விலகி நிற்பான்.

திருநாமம் அஞ்செழுத்தும் செப்பாதவர் இறைவன் திருவருளை இழந்தவர் ஆவர். அவர் தீராக் கொடிய நோய்களால் துன்பப் பட்டு இறந்து மீண்டும் பிறந்து இறக்கும் தொழிலிலே இருப்பர். ஆதலால் அதிகாலை யில் துயில் நீங்கி எந்தையார் திருநாமம் 'நமச்சிவாய' என்று காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதி உணரும் உணர்வுடை யவர் வானுலகில் வளம் பெற்று விளங்குவர். சிவத் தொண்டர்குலம் அல்லாதவராயினும் திருவைந்தெழுத்தினை ஓதின், அஃது அக் குலத்திற்கு ஏற்றபடி நன்மைகளைச் செய்ய வல்லது, "குலமில ராகிலும் குலத்துக் கேற் பதோர், நலமிகக் கொடுப்பது நமச்சி வா யவே" என்பது அப்பர் தேவாரம். நலம் நீங்கி னும் மறவாமல் உச்சரிக்கவேண்டிய மந் திரம் திருவைந்தெழுத்தே. இதுவே, முத் திக்கு வித்து; மோகமெனும் கடலுக்கு வட முகாக்கினி; இருவினைக் காட்டிற்குப் பெரு நெருப்பு; கொடிய பிறவி நோய்தீர்க்கும் அரிய மருந்து; பிறவிப்பெருங் கடலைக் கடத் தற்குப் பெரும் புணை. ஆகவே, நமச்சிவா யவே ஞானமும் கல்வியும் தரும்; அதுவே நன்னெறி காட்ட வல்லது.

பூவினுள் சிறந்தது தாமரை; பசுக் களுள் சிறந்தது அரன் ஆடும் பஞ்சகவ்வி யம் தரும் பசு; அரசருள் சிறந்தவர் செப்ப மான செங்கோலையுடைய அரசர்; அது போல, நாவினுள் சிறந்தது ஐந்தெழுத்து ஓதும் நாவே ஆகும்.

வானளாவும்படி அடுக்கிய விறகில் வெவ்விய தீப்பட்டால் அவ்விறகுகள் எரிந்து அழிவதுபோல, பலவுலகில் பல பிறப்புக்களில் செய்து செய்து பழகியபாவங் களையெல்லாம் நண்ணி நின்று போக்க வல்லது ஐந்தெழுத்து ஒன்றேயாம். நடுக்கத் தைக் கெடுப்பதும், நன்மையினை அளிப் பதும் மனவிருளை ஓட்டுவதும், அகத்துள் நல்லக விளக்காகத் திகழ்வதும் நமச்சிவா யவே ஆகும்.

அப்பர் சுவாமிகள், "எம்பெருமானே! நின் திருநாமம் ஐந்தெழுத்தையும் உச்சரித் துக்கொண்டு என் உயிர் நீங்கப்பெறுமே யானல் எவ்விதக் கொடிய நோய் என்னை அடுத்தாலும் என்செய வல்லது? ஆதலால் அடியேன் உடலினின்று உயிர் நீங்கும் அவ் வேளையில் உன் திருநாமத்தை வாழ்த்தி, நமச்சிவாய என்னும் ஐந்தெழுத்தை உரைக் கும் ஆற்றலை அளித்தருள்வாய்" என்றும், "மனமாகிய ஆழமுடைய நீர்நிலையில் வஞ்சம் என்னும் நீர்ச்சுழியில் அடியேன் அகப்பட்டு உணர்வு இழக்கும்போது, தேவ ரீர்! நும் திருநாமம் ஐந்தெழுத்தும் தோன்ற

அருள்வீராக'' என்றும், "இறைவனே! உன் திருவைந்தெழுத்தை எனது நாவின் கண் படைக்கலமாகக் கொண்டுள்ளேன்; நான் இறக்கும் தருவாயில் தொண்டை விக்கி நின் ஐந்தெழுந்தை ஓதும் தொழிலை விட்டு உம்மை மறக்கச் செய்யினும் எனக்கு மறவாத திறத்தை அருளக் குறிக்கொண் மின்' என்றும், 'சிவாயநம என்று நீறு அணிந்தேன் தருவாய் சிவகதி' என்றும் கூறுகின்றார்.

ஓரிடத்தில் அப்பர் சுவாமிகள் நெஞ்சை நோக்கி "பேதை நெஞ்சே! நமக்கு வைத்தபொருள் ஆம் என்று கூறி மனத்தடைத்துச் சித்தம் ஒடுக்கி, 'சிவாய நம' என்று சொல்லிக்கொண்டிரு! அவ் வாறு இருந்தால் இறைவன் திருவருளை எளிதில் பெற்றுய்யலாம்'' என்கின்றார். "சிவாயநம என்று சிந்தித்திருப்போர்க்கு அபாயம் ஒருநாளும் இல்லை. இதுவே உபா யம்'' என்பது ஓர் அருந் தமிழ்ப் பாடல்.

எம்பெருமான் திருநாமம் ஐந்தெழுத் தைப் பலநாளும் நாம் இடைவிடாமல் ஓதிக் கொண்டு அவனை அழைத்தால், இவன் என்னைப் பன்னாளும் அழைக்கின்றான். அழைத்தலை ஒழிவதில்லை என்று இறைவன் வந்து நமக்கு அருள் புரிவான் என்பதை "அவன்றனை யான், பவன் எனும் நாமம் பிடித்துத்திரிந்து பன்னாள் அழைத்தால் இவன் எனைப் பன்னாள் அழைப்பொழி யான் என்று எதிர்ப்படுமே'' என்று அப்பர் தேவாரம் கூறும்.



## தெய்வத் திருப்பாட்டு

சைவத்தின் உயிர்நாடி திருவைந்தெழுத்து. எல்லையற்ற சிவபரம் பொருளின் இயல் பனைத்தும் இதனுள் அடக்கம். அப்பர் பெருமான் அருள் வாழ்வில் ஐந்தெழுத்து ஆக்கம் பெற்றது. சமய நுட்பங்களறிந்த தண்டமிழ்ப் பெரியோர் திருவைந்தெழுத்தை முன் பின்னாக மாற்றியமைத்துப் பெறப்படும் நுட்பங்களையெல்லாம் விளக்கிப் போந்தனர்.

"நமச் சிவாய வாஅழ்க'' என்றெடுத்து, நானேயோ தவம் செய்தேன் சிவாய நம எனப்பெற்றேன்'. என முடிக்கும் மணிவாசகப் பெருந்தகையாரின் திருவுள்ளம் இதனை விளக்கிநிற்கிறது. 'சி'கரத்தை முன் வைத்துரைப்பதைச் சூக்கும பஞ்சாட்சரம் என்பர். 'நமசிவாய' என்பதன் இடை நின்ற அவ்வெழுத்தை அப்பரடிகள் ஆளுந்திறம் வியப்பூட்டுகிறது.

அப்பரடிகளின் திருமுறைகளுள் இடைநிற்பது ஐந்தாம் திருமுறை. அதனுள்ளும் இடைநின்ற பதிகம் ஐம்பத்தொன்றும் பதிகமாய்த் திருப்பாலைத்துறைக் கமைகிறது. அப் பதிகத்துள்ளும் இடைநின்ற ஆரும் திருப்பாட்டுள், நடுநின்ற வரியின் இடையில் 'சிவாய' என்ற திருநாமம் இடம் பெற்றிருக்கும் தன்மை சிந்தையைக் கொள்ளைகொள்கிறது.

"விண்ணி னார்பணிந் தேத்த வியப்புறும்
மண்ணி னார்மற வாதுசி வாயவென்
றெண்ணி னார்க்கிட மாஎழில் வானகம்
பண்ணி னாரவர் பாலைத் துறையரே''

'த்ரயீ' எனப்படும் வேதங்கள் சிவநாமத்தை இதயநடுவுள் வைத்துப் போற்றுவது போல், சிவாய என்னும் சிவமூலமந்திரம் திருமுறையின் நடுவில் அமைந்து விளங்கும் தெய்வத் திருப்பாட்டு இது.

எம். சிவானந்த முதலியார், சென்னை.

# அப்பர் தேவாரத்தில் பண்ணமைதி

பண்ணாராய்ச்சி வித்தகர் குடந்தை திரு. ப. சுந்தரேசனார்

அலகில் கலைத்துறை தழைப்ப இத் தமிழகத்தில் அருந்தவத்தோர் நெறி வாழ அவதாரம் செய்தவர் அப்பர் அடிகள். அப் பெருமான் இளமையில், முந்து முறைமையில், முதிர அறிவு எதிரும் வகையில், புலன் கொளுவ, மனம்முகிழ்த்த கலைபயின்றவர். அவரருளிய திருப்பதிகங்கள் (312 வரை) இக்காலம் வரை நம்மிடையே சிறப்புற இருந்து வருகின்றன என்பதைச் சிவநெறி யுலகம் நன்கறியும். நிறைய பதிகம், கால வெள்ளையில் கைக்கெட்டாது மறைந்து விட்டன என்பதும் உண்மையேயாம். சிற்சில பதிகங்களிலும் பாடல்கள் மறைந் துள்ளன என்பதும் வெளிப்படை. ஒரு பதிகத்தில் ஒருபாடல் மட்டும் இருப்பதும் அறியப்படுகிறது. இக்காலத்துள்ள அப்பர் திருப்பதிகங்களில் மூன்று திருமுறை—அதாவது, பன்னிருதிருமுறைத் தொகுப்பில் 4, 5, 6 என உள்ளவற்றில், பண்பெயர் உடைய (பண்கள் பத்து) திருப்பதிகங்கள், 21 உள்ளன. இருபத்தியிரண்டாம் பதிகம் முதல் திருநேரிசை எனப்படும். இதன் தலைப் பிலும் பண் கொல்லி என்று, பண் பெயர் குறிப்பதும் வழக்காயிற்று. அன்றியும் திரு விருத்தம், திருத்தாண்டகம் எனும் பகுதி அப்பர் பெருமான் அருளிச்செய்தவை; சிவ நெறித் திருமுறைக்கே சிறப்புப் பொருந்தி யவை அவை.

பண் பெயர்கள்:

| | | | |
|---|---|---|---|
| 1. | கொல்லி | பதிகம் | 1 |
| 2. | காந்தாரம் | பதிகம் | 6 |
| 3. | பியந்தைக்காந்தாரம் | பதிகம் | 1 |
| 4. | சாதாரி | பதிகம் | 1 |
| 5. | காந்தாரபஞ்சமம் | பதிகம் | 2 |
| 6. | பழந்தக்கராகம் | பதிகம் | 2 |
| 7. | பழம்பஞ்சுரம் | பதிகம் | 2 |
| 8. | இந்தளம் | பதிகம் | 3 |
| 9. | சீகாமரம் | பதிகம் | 2 |
| 10. | குறிஞ்சி | பதிகம் | 1 |
| | ஆக | பதிகம் | 21 |

இவற்றைப் பாடும் முறைமை ஒரு வகையில் கைக்கொள்ளப்பெற்று வருவதும் அறியப்பெற்றதே.

பண்பாடும் முறைமைக்கு நம்நாட்டு இசைக்கலைக்குரிய பொதுக் கருத்துணர்தல் நலம்.

இந்திய இசைக்கலைப்பாணியில், தென்னிந்திய இசைமுறையும், அதன் பண், பண்பு, ஏனைய பிறவமைதி யாவுமே மிகத் தொன்மையான வழியைச் சார்ந்ததாகும் என்பர். தமிழகத்தில் மிகப்பழைய கால—சங்ககால—சோழர் காலத்திசை முறை பல்லவர்கள் காலத்தில் மிகவும் வழக்கிலிருந்து பாராட்டிப் போற்றித் தொழின் முறையில் நன்கு பாதுகாக்கப்பெற்றுவந்தது.

ஒருவகையில் அம்முறையும் பிற்காலச் சோழ அரசில் பெரிதும் பாராட்டப்பெற்று திருவாரூர் திருக்கோயிலில் நன்கு வரன் முறையோடு வழக்கிருக்க ஆவனசெய்யப் பெற்றது. அதனாற்றான் திருவாரூர் இசைமுறை என்பது ஒரு பழைய முறையைச் சார்ந்தது எனப் பிற்காலத்தாரால் கூறப்பெறுவதாயிற்று. இம்முறையே மிகமிகப் பிற்கால நாயக்க மன்னர்கள் காலத்தும், மராட்டிய மன்னர்கள் காலத்தும் தஞ்சை அரண்மனை இசைமுறை எனக் கூறப்பெற்று சிறந்த இசை யிலக்கணங்கள் எழுதப்பெறவும் வாய்ப்பாக இருந்தது. இதனடியில் எழுந்தவையே பிற்கால மும்மூர்த்திகளின் இசைமுறையாகும் என்பதை முதன்முதலில் ஒல்லும் வகையில் உணர்தல் வேண்டும்.

ஆகவே நமது பண்டைய திருப்பதிக இசைமுறைக்கு திருவாரூர் முறைமையையும் திருவாரூர் இருந்து சென்று தங்கிய ஓதுவா மூர்த்திகள் மூலம் திருமறைக்காட்டு முறைமையையும் பெருமளவு நாம் இன்று ஒல்லும் வகையானெல்லாம் உய்த்துணர்தல் வேண்டும். நாளடைவில் பயிற்சி முறை வழுவிப் போதலும், சாதனை வலுப்படாதிருந்து நயந் தோன்றுமல் பண்பாடும் முறையில் பாணி மாறுதலைப் பெற்றுவிடுவதுமுண்டு. அக்காலம்மட்டுமின்றி இக்காலத்திலும் அத்தகு பெருத்த சூழ்நிலையொன்று இந்திய சங்கீதத்திற்கே ஏற்பட்டுள்ளது கர்நாடக சங்கீதத்திற்கும் அச்சூழ்நிலை பெரிதும் ஏற்பட்டுவிட்டது. தேவாரத்திருமுறைகளை ஓதுவதிலும் அவை நன்கு ஏற்பட்டுவிட்டன. இத்தகு சூழ்நிலையில்தான், நமக்கு பண்டைய இசைபற்றிய இலக்கணங்கள் ஊன்றுகோலாக இருந்து உண்மைவிளங்குவதற்குப் பெரிதும் பயன்படுகிறது. இசைமுறையும் இசையிலக்கணங்களும் திருப்பதிகப் பண்பாடும் முறைக்கு மிகவும் இன்றியமையாததாகும்.

அவையாவும் ஒருபுறமிருக்க இக்காலத்தே தேவாரம் பாடும்முறைபற்றி அறிய வேண்டுமாயின், இன்றுவரை. நமக்குக் கிடைக்கப்பெறும் பழையமுறை, அதாவது பழமையான பயிற்சியுடைய ஓதுவா மூர்த்திகள் மூலம் கொல்லிப்பண் பாடும் முறையும் அதற்குரிய இசை முறைமைகளையும் நன்கு ஓர்ந்துணர்தல் வேண்டும் அங்ஙனம் ஓர்ந்துணர்ந்து ஆராயுமிடத்து பிற்காலத்தார் அப்பண்ணினை இராகப் பெயரிட்டுக் குறிக்குங்கால், அதற்குத்தனி அமைதியொன்று இருப்பதறிந்து நவரோசு எனக் குறித்துள்ளதாகத் தெரிகிறது. இவ்வழக்கு மிகப் பிற்காலத்திய வழக்கு. கொல்லியாம் பண்ணுகந்தார் குறுக்கை வீரட்டனுரே என்பதும் அப்பர் வாக்கு. இந்த நவரோசு (கொல்லி) என்ற இராகம், கீழ் முடிவில் கொண்ட இசையை நேரே எடுத்தலாகக் கொள்ள நேரிட்டால் பண்டைக்கால வழக்கப்படி செம்பாலை என்ற பெரும்பண்ணுவது மிகத் தெளிவாக இசையாராய்ச்சி உடையவர்களால் ஓர்ந்தறியப்படுகிறது. அருமையான இம்முறை அறிந்துணரவும் அவனருள் வேண்டுமென்பது உண்மையேயாம்.

செம்பாலை என்ற பழைய பண்ணினை பிற்காலத்தார், காம்போஜி மேளம் எனக் கொண்டு 72 மேள இராகங்களில் 28-வது மேளம் எனும் கணித முறையில் ஹரிகாம்போஜி எனக் கூறிவிட்டனர். எழுதியும் உள்ளனர். அஃதவ்வாறிருக்க, பண்டைய ஓதுவா மூர்த்திகள். அப்பர் அருளிய திருத்தாண்டகச் செழும் பாடல்களைத் தாள நிலையில்லாது அரிகாம்போதியில் பாடி வந்ததை நாம் நன்கறிவோம். ஆகவே கொல்லிக்கும், செம்பாலைக்கும் உள்ளதோர் பெருந் தொடர்பு ஆராய்ச்சி முறையில் நன்கு விளங்குவது ஒப்பற்றதோர் பேருண்மையாகும் என்பதை உணரலாம். இவற்றை நேரே பாடிக்காட்டினலன்றி, அஃதும் இசையறிவு (சுரக் ஞானம்) உடையார்க்கன்றி விளங்காது என்பதும் உண்மையே.

அப்பர் பெருமான். கொல்லிப்பண்ணில் கூற்றுயினவாறு, எனத் தொடங்கி. செம்பாலையில் உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே, என முடித்திருப்பது, அவரது சிவநெறியின் உறுதிப்பாடு, தமிழ்மொழியின் தகைமை, இறைவன் வடிவாய மிகப் பழைய தமிழகத்து இசைநிலைக்குரிய பண்ணமைதி என எத்துணைப் பண்பைக் காட்டுகிறது. இவ்வுண்மையை, இவற்றுள் ஒன்றிலேனும் சிறிதேனும் பயிற்சியில்லாதார் எவ்வாறே அறிவர்? கொல்லியும் செம்பாலையும் அதாவது இக்காலமுறைப்படியும் கூறவேண்டுமாயின் நவரோசு ராகமும் ஹரிகாம்போதி ராகமும் அப்பர் பெருமான் அருளிய திருப்பதிகத் தொகுப்பிற்கு ஒரு பெட்டகம் போன்று முதலும் இறுதியுமாக இருப்பது எத்துணை உண்மையைப் புலப்படுத்தி விளக்குகிறது! அறிந்து உணர்ந்து இன்பந்துய்ப்பதே நம் கடனுகும். முதலும் இறுதியும் தாமே போலும் என்று அருளியவர் அப்பர்தானே! இசைமுறையிலும் இச்சொற்களுக்குப் பொருள் கொள்ளலாமன்றே?

மற்ற பண்களைப் பற்றி ஈண்டு எழுதப் புகின் கட்டுரை விரிவுபடும். இனி அப்பர் பெருமான் திருப்பதிகங்களில் வரும் இசைக் குறிப்புக்களை மட்டும் ஒல்லும் வகையில் குறிப்பிடுவோம்.

அப்பர் பெருமானுல், தமிழோடு இசை பாடல் மறந்தறியேன், பண்ணார் இன்சொல்

இச்சொற்கள் முதற் பதிகத்தும் இறுதிப்பதி கத்தும் அருளப் பெற்றவை.

பண்ணுண்ட பாடல் இச் சொற்கள், தில் லையில் அருளிச் செய்த திருநேரிசையில் ஒரு பாடலில் உள்ளவை. திருநேரிசை பாடும் முறை அடியேன் கேட்டுகந்தவரை, திரு மறைக்காடு, அடங்கன் முறை ஐயா திரு மகனுர் திரு அருணுசல தேசிகரும், என தன்பிற்குரிய திரு. மணி தேசிகரும் முறை வழுவாது பாடினர் என்பதேயாகும். மற் றைய ஓதுவாமூர்த்திகளும் அம்முறையை அறியாமலில்லை.

திருநேரிசையை, அப்பர் பெருமா னருளிய கொல்லிப்பண்ணின் பதிகமாக, ஆனுல், விருத்தப்பாக்கள் முறையில் இருவ ரேனும், அதற்கு மேற்பட்டும் ஒத்த முறை யில் அரும்பாலை என்ற பண்ணில் பாடி வந்ததே பழைய வழக்கு என உணரலாம். கொல்லிப் பண்ணினை அதாவது நவரோசு இராகத்தை சமநிலையில் மெலிவு நிலைக்கு வாராது பாடவே, அரும்பாலை யாகி விடும் என்பது நுண்மையான இசைவல்லார் அறிந்ததாகும். ஆனுல் திருநேரிசையை பண்டையோர் பாடுங்கால் மெலிவு நிலை யிலும் போக்கு முறை காட்டப் பெறுவதறிய லாம். அரும்பாலை யென்பதைப் பிற்காலத் தார் சங்கராபரணம் எனக் கூறினர். இந்த ராகத்தினை 72 மேள ராக முறையில் 29-ஆவது மேளம் எனக் குறிக்கவேண்டி தீரசங்க ராபரணம் எனக் குறிப்பது வழக்காயிற்று. ஆகவே, அப்பர் அருளிய திருப்பதிகங் களின் பண்ணமைதிகள், திருத்தாண்ட கத்தில் செம்பாலையும் திருநேரிசையில் அரும் பாலையும் அமைந்துள்ளன என்பதை நன்கே ஓர்ந்தறியலாம். அதாவது, அரிகாம்போதி யும் சங்கராபரணமுமாகப் பொருந்தி வரு வதனை உணரலாம்.

''எழுநரம்பின் ஓசையானை, என்பதும் அப்பர் வாக்கேயன்றே! அரும்பாலைக்குரிய மிகப் பழைய பெயர் பாலையாழ் என்பதே. பாலையாழ் என்ற கருவியில் அரும்பாலைக்குரிய ஏழு நரம்புகளையே கட்டப் பெறுவதும், தெறித்திசைப்பதும் வழக்காதலான். கரு விப் பெயரையே பண்பெயராகக் குறித்த லும் சங்ககால வழக்காதலான் அரும்பாலையை பாலையாழ் என்றும் குறிப்பதே நூல் வழக்கா யிற்று எனலாம்.

''எழு நரம்பின் இன்னிசைகேட்டு இன் புற்றானை' எனவும் அப்பர் பெருமான் கூற வில்லையா! அரும்பாலையென்ற சங்கராபர ணத்தை இக்கால முறைப்படி நிஷாதம் முதல் எடுத்து நிஷாதம் வரை இசைக்க பண்டைய செவ்வழிப்பாலை பேசுவதை, இசைப் பயிற்சியையும் இசையிலக்கண ஆராய்ச்சியையும் உடையவர் நன்கறிவர். ஒரு கூட்டத்தார் அரும்பாலை பாட அல்லது இசைக்க மற்ரெரு கூட்டத்தார் அவ்வரும் பாலையையே பழைய முறையில் கைக்கிளை முதலாகப் பாட அல்லது இசைக்க செவ் வழிப்பாலை யாகும். தனித்துக்கேட்க இரண் டுமே அரும்பாலையாகவும் ஒன்ரென்ருய்க் கேட்க, ஒன்று அரும்பாலையாகவும் மற் ரென்று செவ்வழிப்பாலை யாகவும் கேட்கும். இக்கருத்து இன்றும் நன்கு தெளிவுற அறிந் துணரக் கிடக்கின்றது. இத்தகையதோர் அரிய இசை முறைக் கருத்தை அப்பர் பெருமான் அருளாலும் அறிந்தவர் ஆனமை யால், இந்நிலையில் திருவீழிமிழலையில் அக்காலத்து அடியவர்கள்பாடிவழிபட்டனர் எனும் நுண்ணிய இசை நூற்கருத்தினை,

பாலையா ழொடு செவ்வழிப்பண் கொள
மேலைவானவர் வந்து வணங்கிடும்......

எனப்பாடியருளியிருப்பதை மிக்க நுண் ணறிவோடு உணர்தல் வேண்டும். தமிழ கத்துப் பண்டைக்காலத்து நரம்பிசைக் கருவியை யாழ் என்று எல்லா நூல்களும் கூறுநிற்கும். யாழ்வேறு, வீணை என்ற கருவி வேறு. திருக்கழிப்பாலைத் திருநேரிசை யில் தங்கையில் யாழும் வைத்தார் என்றும் பாடியுள்ளார் அப்பர் பெருமான். இவற்றை யெல்லாம் நன்குபயின்று பெரிய இசை யறிவு பெற்றுக் கண்டாலன்றி எவ்வாறே விளங்கும். 'பாலையாழ் மொழியாளவள்' என் பதும் அப்பர் அருள் வாக்கன்றே!

திருவிருத்தம் என்ற தலைப்பின்கண் உள்ள பாடல்கள் நற்றமிழ் இலக்கண முறைமையில்நேர்பதினுறு, நிறை பதினேழு என்ற எழுத்தெண் முறையில் அமைந்து கட்டளைக் கலித்துறைப் பாவினங்களாக இருப்பதனை யாவருமே அறிவர். கலித் துறை அஃதும் கட்டளைக் கலித்துறை பிற்

கால வழக்கு முறையை ஒட்டியும் கருதிக் காண பைரவி இராகத்தில் பாடப் பெறுவதே பெரு வழக்கமாக இருத்தலை நன்கறியலாம்.

பண் முறையில் கௌசிகம் பாடும்முறை இராகம் பைரவி யாயிருத்தலை அறியாதார் யார்? அப்பர் அருளிய திருவிருத்தப்பாக்கள் யாவும் தாளமில்லாது கௌசிகப்பண்ணில் பாடுதற்குரியவை என்பது இதனுலும் விளங்குமன்ரூே! பிற்காலத்தார், நம் திரு முறைகளை, மொழியமைதியுடன் கண்டு அதன் நுண்பொருளாய சமயக் கண்கொண்டு மட்டும் கண்டு குறித்தன ரேயன்றி கலையறிவுபெற்று கலைக்கண் கொண்டு கண்டாரில்லை. இக்குறையையும் இக்காலம்நிறைவு செய்தல்வேண்டுமன்ரூே!

பற்பல பாடல்களில் நம் அப்பர் பெரு மான், வீணைக்கருவியையும் குறிப்பிடு கின்ருர். இசைகள் நரம்பின் ஒலிவகை யன்ரூே! அவற்றிற்குக் குறியீட்டெழுத்தும் உண்டு. பண்ணினை வரையறை செய் வதற்கு எழுத்துக்களையே குறிப்பதும் உண்டு. அதனை அப்பரடிகள் பண்ணுர் எழுத்து ஆனுனை, எனவும் அருளியிருப்ப தறிதல் வேண்டுமல்லவா? இசைகள், சிற் றிசைகளாகவும், பேரிசைகளாகவும் ஒலிக் குந்தன்மை வாய்ந்தவை, கின்னரம் என்ற இசைக்கருவியில் பேரிசைகள் ஒலிப்பன என்பதையும், பேரிசைக்கின்னரம், பேரொலிக் கின்னரம் எனவும் அருளினுர் அப்பர். களரி யார் என இசைகாரரையும் குறிப்பிடுவதறிய லாம். கீதம் என்பது இசைப்பாட்டு, குழ லுமிழ்கீதம் என்றே பாடியருளி, கீதத்தைப் பாடும் அடியார் எனவும் பாடியுள்ளார் நம் அப்பர் பெருமான்.

இசைத்தமிழில், இசையின் ஒவ்வொரு வகைத்தொகுதியே பண்ணுகும். பண், பண்ணி யற்றிறம், திறம், திறத்திறம் எனுமிவற்றைப் பிற்காலத்தார், சம்பூரணம், ஷாடவம், ஔடுவம், சதுர்த்தம் எனக்கூறினர். பண் நீங்கலாக பண்ணியற்றிறம், திறம், திறத்திற மிவற்றை பொவதுவாகவே திறம், திறல் எனக்கூறுவதும் வழக்காம். இதனைக்குறிக் கும் அப்பர் அடிகள், பண்டிறல் கேட்டுகந்த பரமர் என்றும், பாட்டிசையிற்காட்டுகின்ற பண்ணவன் என்றும், பண்ணவற்றின் திறலா ஞன் எனவும் அருளியிருப்பதும் அறிந்துண ரத்தக்கதேயாம். பண்பொருந்த இசைபாடு தலே சிறப்பாம். பண்ணுலாம் பாடல் எனவும் அருளினுரன்ரூே! பண்ணுமாகவே பாடும் பழனத்தான் என்றும், ஏழிசை வண்ணமும் எனவும் குறித்தருளினுர். பண்ணுடன் பல வுஞ்சொல்லி, புறவிசை, என்றும் பாடி, இசையானை என்று ஏத்தியுள்ளாரன்ரூே. இவை பலவும் அப்பர் அருளிய திருமுறை களில் உள்ளவைதானே! ஏன் உணரப் பெறவில்லை? எழுதப்பெறவில்லை? எடுத்துக் கூறப்பெறவில்லை?

யாழின் பாட்டை உகந்த அடிகள் என்றும், பண்ணின் இன்மொழி கேட்கும் பரமன் என்றும், பண்ணுர்ந்த வீணை பயின்ருன் என்றும், பண்ணின் இசைமொழி பாடிய வானவர், பாட்டிற்பண்ணும், இன்னிசைகள் கேட்டுருகும், பண் கெழுமிய வீணை; பண் ணிட்ட பாடலர், துன்னிய தொண்டர்கள் இன்னிசை பாடித் தொழுதல், குறிகொண்ட இன்னிசை, உகப்பர் ஏழிலோசை, பண்ணி னுர்; பண்ணின் மிக்க பாடலார், பண்குணத் தார், பாடலாக்கிடும் பண்ணுேடு, பஞ்சமம் பாடியாடும், பண்ணினுர் பாடலாகி, பண் மலிந்த மொழியவர், பண்ணிடைச்சுவைகள் பாடி, குழலையாழ் மொழியார் இசை வேட் கை, பாலையா ழொடு செவ்வழிப்பண் கொள எழு நரம்பின் இசைகேட்டானை, கந்திருவம் பாட் டிசையிற்காட்டுகின்ற பண்ணவன் காண், பண்ணவற்றின் திறலானுன்காண், பண்ணுர் இன்சொல், பழுத்த பண்களாகி, காமரங்கள் பாடித்திரிவார் போலும், பண்டளவு நரம் போசைப்பயனை, பண்ணிலங்கு பாடலோடு ஆடலார், இன்பக் கேள்வி இசையவன் காண், ஏழிசை யாழ்வீணை முரலக்கண் டேன், தங்கையில் வீணை வைத்தார், வண்டு பண்பாடுமே, பண்ணுடன் பத்தர் ஏத்த, என்ற குறிப்புக்கள், அப்பர் பெரு மானல் நம்மனேர்க்குக் கிடைக்கப்பெற் றுள்ள பெருநிதியமல்லவா?

வரி, முரி பாடி, கந்திரம் (காந்தாரம்) கின்னரம், பண்ணினை,

'தாளங்கள் கொண்டும் குழல் கொண்டும்
யாழ் கொண்டும் தாமங்கனே
வேடங்கள் கொண்டு விசும்பு
செல்வாரவர் வீரட்டரே'

'ஏழ்நரம்பினுேசை படைத்தாய் போற்றி'
'பண்துளங்கப்பாடல் பயின்ருய் போற்றி'

'பண்ணிற்பாடல்கள் பத்திசெய்
வித்தகர்க்கு அண்ணித்தாகும் அமுதினை'
வீணையேந்திக் கந்தாரம் (காந்தாரம்)
தாம் முரல,
'இடங்கை வீணையேந்தி,' பண்ணில்
ஓசை.
'பழத்தினில் இன்சுவை'
'பண்ணிடைச்சுவையின் மிக்க கின்னரம்'
'பண்ணினைப் பாடியாடும் பத்தர்கள்
சித்தங்கொண்டார்'
'பண்தான் இசைபாட நிற்ருர்தாமே'
'பண்ணியலும் பாடல் உகப்பார்தாமே'
'பண்ணாகி' 'பண்ணாகப்பல்லியம்
பாடினுன்காண்'
'இசைபாடிப் பலியுங் கொள்ளீர்'
'பண்ணின் இசையாகி நின்ருய் போற்றி'
'பண்ணார் இசையின் சொற்கேட்டாய்
போற்றி'
'ஏழின் இசையே உகப்பாய் போற்றி'
'பண்ணொடு யாழ் வீணை பயின்ருய்
போற்றி'
'பண்மேலே பாவித்திருந்தாய் போற்றி'
'ஏழுகொலாம் இசையாக்கினதாமே'
'உமை நங்கை பிறழ் பாட'
'அளப்பிலகீதம் கமாரங்கற்றுமில்லேன்'
'ஏழினின்னிசையினுலும் இறைவனை
எத்தமாட்டேன்'
'மருவற்கினிய பண்ணகத்தான்'
'எம்மிறை நல்வீணை வாசிக்குமே'
'பண்ணொத்தானை'
'பண்ணாகிப் பாடலாகி'
'சாமத்தின் இசை வீணை தடவிக்
கொண்டார்'
'பண்ணார்ந்த வீணை பயின்றதுண்டோ'
'ஒருகை வீணையுண்டு.'

என்றெல்லாம் வந்துள்ள தனித்த இசைத் தமிழ்க்குறிப்புகள் பலவும் தனித்தே ஒவ்வொன்ருக ஆராய்தல் வேண்டுமென்பது வெளிப்படை. கட்டுரை விரிவுபடாதிருக்க வேண்டியே இம்மட்டோடு இக்குறிப்புக்களை மட்டும் ஈண்டு குறிக்கலானேன். பொதுப்படக் கூறுமிடத்து, நம் தேவாரத் திருமுறை பாடும் முறையில். தனித் தமிழ், தமிழர் நாகரிகத்தில் தமிழ் நாட்டில் ஆயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன்னர் உள்ள ஒருவகை இசைப்பாணியை இக்காலத்தும் அறிந்துணரப் பெருவாய்ப்பு உள்ளமையை நன்கேயறியலாம். அது குறித்தேதான் நாம் இசைமுறையிலும் பழைய பாணியை மாற்றுதல் கூடாது என்றும், ஏதேனும் இடைக்காலத்தில் மாறுபட்டவையாகஇருப்பின் அக்காலத்திற்கு முற்பட்ட காலத்திற் கிடைக்கும் இசையிலக்கணத்தைக் கொண்டே ஒல்லும் வகையில் கண்டு ஆராய்ந்தறிதல் வேண்டும் எனக்கூறி வருகின்ருேம். பிற்காலத்திய கீர்த்தனைக்காரர்கள்கூட இசை முறையை மாற்றுவதற்கு ஒருப்படவே இல்லை என்பதை நாம் நன்கறிதல் வேண்டும். தேவாரத் திருமுறையிசை பழங்காலத்திய உயர்தனிச் செவ்விசை (Classical Music) என்பதை மறத்தல் கூடாது. இக்காலத்திய மெல்லிசையாக, திருமுறையிசையை ஆக்கி விடுதல் கூடவே கூடாது.

பொதுவாகத் தமிழ்மக்களாலும், சிறப்பாகச் சைவப் பெருமக்களாலும் நன்கு போற்றத்தக்கவாறே திருவாமூரில் அப்பர் விழா ஆண்டுதோறும் நடைபெற்றுவரும் நற்காலம் இதுவாகும். அதற்கு அரும்பணியாற்றிவரும் நம் சிவத்திரு சோமசுந்தரத் தம்பிரான் அடிகளுக்கு சிவநெறியுலகம் என்றென்றும் கடமைப்பட்டுள்ளது. இயல்வகையில் திருமுறைகள் எவ்வகையில் மாற்றப்படுதல் கூடாமையோ, அவ்வகையே இசைமுறையிலும் திருமுறைகள் மாற்றப்படாமை தெளிவுபெறுதல் வேண்டும். சிவநெறித் திருமுறைகளை எழுத்தளவில் பாதுகாக்க வேண்டி எவ்வெவ்வாருே புத்தம் புதிய முறைகளில் அச்சியற்றி வெளியிட்டுப் பாதுகாத்துவரும் நம் சிவநெறியாதீனங்கள், திருமுறைகளைப் பாடும்முறையையும் பாதுகாக்க வேண்டி ஆவன செய்தல்வேண்டும் என்பதே நமது பணிவார்ந்த வேண்டுகோளாய விண்ணப்பமாகும்.



# அப்பரும் சம்பந்தரும்

திரு. ந. ரா. முருகவேள், எம்.ஏ.,எம்.ஓ.எல்., சென்னை.

## முன்னுரை:

அப்பரும் சம்பந்தரும், நமது தமிழ்நாட்டினை வாழ்விக்கத் தோன்றிய சான்றோர்களில், குறிப்பிடத்தக்க பெருஞ்சிறப்புடையவர்கள் ஆவர். சங்க காலம் தமிழ்மொழியின் பொற்காலம் என்றால், அப்பரும் சம்பந்தரும் வாழ்ந்தருளிய காலம், சைவ சமயத்தின் பொற்காலம் எனலாம். அப்பரும் சம்பந்தரும் ஆகிய இவ்விரு பெருமக்களுமே,

"திசை யனைத்தின் பெருமை எலாம்
தென்திசையே வென்றேற,
மிசையுலகும் பிறவுலகும்
மேதினியே தனி வெல்ல,
அசைவில்செழுந் தமிழ்வழக்கே
அயல்வழக்கின் துறைவெல்ல,
இசைமுழுதும் மெய்யறிவும்
இடங்கொள்ளும் நிலைபெருக"

அவதாரம் செய்தருளியவர்கள் ஆவர் எனலாம். இவர்களால் தமிழ்நாட்டிற்கு விளைந்துள்ள அருப்பெறல் நலங்களுக்கு அளவேயில்லை.

## அப்பரும் சம்பந்தரும்:

அப்பரும் சம்பந்தரும், வெறும் சமயத் தலைவர்கள் மட்டுமே அல்லர். சமயம் மொழி சமுதாயம் கலை நாகரிகம் பண்பாடு முதலிய எல்லாத் துறைகளிலுமே, அவர்கள் நமக்கு வழிகாட்டி, நலங்கள் பலப்பல புரிந்துள்ளனர். சங்க காலத்திற்குப் பின்னர், அதாவது கி.பி. 2-ம்ஆம் நூற்றாண்டு முதல் கி பி. 7-ஆம் நூற்றாண்டு வரையில், களப்பிரர் முதலிய வேற்றுப் புல அரசர்களால் தாக்குண்டு பல்லாற்றானும் சிதைந்து சீரழிந்து இருளடைந்து கிடந்த நமது தமிழ்நாட்டிற்குப் புத்துயிர்ப்பும் மறுமலர்ச்சியும் புதுவாழ்வும் அளித்து, எல்லாத் துறைகளிலும் அஃது இனி தோங்கித் தழைத்து வளருமாறு செய்தருளியவர்கள், அப்பரும் சம்பந்தருமே யாவர் எனத் துணிந்து கூறலாம்.

## சாலப்பெரியர்:

சமயம் என்பது, சங்க காலத்திற் பெரிதும் மக்களிடையில் அவரவர்களின் உள்ளுணர்வு அளவிலேயே அமைந்து விளங்கியது. அதனை ஒரு பெரும் சமுதாய இயக்கமாக ஆக்கியருளியவர்கள், அப்பரும் சம்பந்தருமே ஆவர்.

"புறம்பு காண்குவன் புல்லியன் ஈசனை
அறந்தரு ஞானியர் அகத்திற் காண்பரால்"

என்றபடி, அப்பரும் சம்பந்தரும் ஈசனைத் தம்முடைய அகத்திற் கண்டுணர்ந்து அவ்வளவில் அமைந்து விடாமல், புறம்பேயும் ஈசனைக் கண்டனர்; ஒவ்வோர் உயிரிலும் பொருளிலும் ஈசனைக் கண்டனர்; மன்னுயிர்க்குத் தொண்டு புரிதலே மகேசனுக்குத் தொண்டு புரிதலாகும் எனத் தெளிந்தனர். சமயத்தின் அருளனுபவ நலங்களைத் தாம் மட்டும் துய்த்துச் சமாதிநிலையில் ஒன்றி விடாமல், அதனைச் சமுதாய இயக்கமாக மாற்றி அனைத்துயிர்களும் இறையருள் நலனை அறிந்து, அதில் ஈடுபட்டுத் திளைக்குமாறு செய்தருளினர். சமயத்தினைத் தனிநிலையியல்பினின்று (Individual aspect) சமுதாய நிலையியல்பிற்குரிய ஒரு பேராற்றல் (Social Force) எனும்படி உருவாக்கி வளர்த்தருளியவர்கள், அப்பரும் சம்பந்தருமே யாவர் என்பதில் ஐயமில்லை.

"மூலை யிருந்தாரை முற்றத்தே விட்டவர்
சாலப் பெரியவர்என்று உந்தீபற
தவத்தில் தலைவர் என்று உந்தீபற"

என்றபடி, ஞானிகளின் உள்ளத்திலும், யோகிகளின் அநுபவத்திலும், சான்றோர்

களின் எண்ணங்களிலும் அருளாளர்களின் வாழ்விலும் மட்டுமே, எங்கேயோ ஒரு மூலை யில் மட்டுமே ஒதுங்கிக் கிடந்திருந்த சமயச் செந்நெறியினை, பொதுமக்களின் வாழ்வுத் துறை ஆகிய சமுதாயச் சூழல் என்னும் முற்றத்தே கொணர்ந்து விட்டருளியவர்கள், சாலப் பெரியவர்களும், தவத்தில் தலைவர் களும் ஆகிய நமது அப்பரும் ஞானசம்பந்த ருமே என்றல் மிகையாகாது.

## அரும்பெரும் புரட்சியாளர்:

அப்பரும் சம்பந்தரும் போன்ற அரும் பெரும் புரட்சித் தலைவர்களை நாம் யாங் கணும் காண்டல் இயலாது. கத்தியின்றி ரத்தமின்றி யுத்தம் புரிந்து, அரிய பெரிய புரட்சிகளை முதன்முதலில் விளைவித்தவர்கள் நமது அப்பரும் சம்பந்தருமேயாம்.

வடமொழியிற் சிறந்த புலமையுடைய வனும், இசைக்கலையில் வல்லவனும், சிற்பம் ஓவியம் நடனம் முதலிய கலைகளிற் பெரிதும் ஈடுபாடுடையவனும், போர்த்திறன் மிக்க பெருவீரனும், 'மத்தவிலாசப் பிரகசனம்' என்னும் வடமொழி நாடக நூல் இயற்றிய வனும், தம்மை நீற்றறையில் இட்டும், நஞ் சூட்டியும், களிற்றை ஏவியும், கற்றூ ணைப் பூட்டிக் கடலிற் பாய்ச்சியும், பற்பல துன்பங்களை விளைவித்தவனும் ஆகிய மகேந் திரவர்மன் (கி.பி. 600-630) என்னும் பல் லவ மன்னனைத் தமது தெய்விக அருள்நலத் தால் திருத்தி ஆட்கொண்டு அவனைச் சமண சமயத்தினின்று சைவ சமயத்தவ னாக மாறும்படி செய்தருளிய திருநாவுக்கரச ரின் செயலினும் சிறந்த புரட்சிச் செயல் வேறென்றுள்ளதோ? "இலிங்கத்தை வழி படும் குணபரன் என்னும் அரசன். புறச் சமயத்தில் இருந்து திரும்பியதனுற் பெற்ற சிவஞானப் பேரொளியானது, இந்த இலிங் கத்தின் வாயிலாக நெடுங்காலம் இவ்வுல கில் நின்று நிலவுவதாக'' எனவரும் மகேந் திரவர்மனின் திருச்சிராப்பள்ளிக் கல் வெட்டு, அப்பர் பெருமான் நிகழ்த்தியருளிய அரிய பெரிய புரட்சியை அறைகூவி அறி விக்கும் ஒப்புயர்வற்ற சான்றன்றோ?

" வீடறியாச் சமணர்மொழி
பொய்யென்று மெய்யுணர்ந்த
காடவனும் திருவதிகை
நகரின்கண் கண்ணுதற்குப்
பாடலிபுத் திரத்தில் அமண்
பள்ளியொடு பாழிகளும்
கூடஇடித் துக்கொணர்ந்து
குணபரஈச் சுரம்எடுத்தான்''

எனச் சேக்கிழார் பெருமான், இப்புரட்சி நிகழ்ச்சியினைத் தமது பெரிய புராணத்தில் எடுத்து விளக்கியிருத்தல், உன்னித்து உணர்ந்து மகிழற்பாலது. இவ்வாறே,

'மன்னன்நீறு அணிந்தான் என்று
மற்றவன் மதுரை வாழ்வார்
துன்னிநின் றார்கள் எல்லாம்
தூயநீறு அணிந்து கொண்டார்'

என்னும்படி, பாண்டிய நாட்டில் நின்றசீர் நெடுமாறர் (கி.பி. 640-680) காலத்தில் திருஞானசம்பந்தர் நிகழ்வித்த சமய சமு தாய அரசியற்கலைப் புரட்சியும், இங்கு நாம் பெரிதும் சிந்தித்து உணரத்தக்கது.

## நற்றமிழ் வளர்த்த நல்லோர்:

அப்பரும் சம்பந்தரும் ஆற்றியருளிய அளப்பருந் தொண்டுகள் பற்பல. அவற் றுள், சிறந்தது பல்வேறு கொள்கைகளாலும் சூழ்நிலைகளாலும் சிதறுண்டு கிடக்கும் ஒரு நாட் டின் மக்களை அவர்கள் பேசும் தாய்மொழியின் வாயிலாலே ஒன்றுபடுத்தி உணர்ச்சியூட்டிக் கிளர்ந்தெழச் செய்யமுடியும்''* என்னும் உயரிய உண்மையினை யுணர்ந்து, 'நாளும் இன்னி சையால்' நற்றமிழ் பரப்பிய பொற்புறு செய லேயாகும். இவ்வாற்றால், முதலில் தமிழ்ப் பண்பாட்டிற்கு மாறுபட்டுப் "பல்லவர் பதகர் நீசர்'' என்று இழித்து விலதுமாறு இருந்த பல்லவர்கள் நாளடைவில் தமிழ்ப் பண்பு தழுவித் தமிழ்வண்ணம் ஆகும்படி செய்து, ஐயடிகள் காடவர்கோன், காடவர்

* "In any social group, whatever its nature and howerer large it may be, language plays a role of primary importence. It is the strongest of the bonds inviting the members of the group, and is at the same time the symbol and safeguard of their common life. What instrunst can have greater efficacy then language in affirining the individuality of the group? It is their sign of recogrition, and their badge of brotherhood."

*J. Vendreys, Language.*

கோன் கழற்சிங்கன் முதலிய சிறந்த சிவனடியார்களாகவும் மாறும்படி செய்தருளிய அப்பரின் பெருமை அளப்பரியது.

## புண்ணியக் கண் இரண்டு:

தமிழ் வளரவும், சைவம் தழைக்கவும், இசை நடனம் சிற்பம் ஓவியம் முதலிய பல்வேறு கலைகளும் செழிக்கவும் அப்பரும் சம்பந்தரும் ஆற்றியுள்ள தொண்டுகளுக்கு அளவே இல்லை. அதுபற்றியே ஆசியரிர் சேக்கிழார் பெருமான்,

அருட்பெருகு தனிக்கடலும் உலகுக்கெல்லாம்
அன்புசெறி கடலுமாம் எனவும்; ஓங்கும்
பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற
புண்ணியக்கண் இரண்டெனவும்; புவனம் உய்ய
இருட்கடுவுண் டவர் அருளும் உலகம் எல்லாம்
ஈன்றுள்தன் திருவருளும் எனவும் கூடித்
தெருட்கலைஞா னக்கன்றும் அரசும் சென்று
செஞ்சடைவா னவர்கோயில் சேர்ந்தார் அன்றே"

என்ற பாடலில், அப்பரையும் சம்பந்தரையும் "பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற புண்ணியக்கண் இரண்டு" எனப் புகழ்ந்து போற்றியருள்வாராயினர். ஆசிரியர் நம்பியாண்டார் நம்பிகளும்

"பாடிய செந்தமி ழாற்பழங் காசு
பரிசில் பெற்ற
நீடிய சீர்திரு ஞானசம் பந்தன்
நிறை புகழான்,
நேடிய பூந்திரு நாவுக் கரசோடு
எழில் மிழலைக்
கூடிய கூட்டத்தி னுல்உளது ஆய்த்து
இக்குவலயமே"

எனத் தமது திருத்தொண்டர் திருவந்தாதியில், இவ்விரு பெருமக்களையும் திறந்தெரிந்து சிறந்தெடுத்துப் பாடிப் போற்றி மகிழ்ந்தருளினர்.

## முடிவுரை:

இங்ஙனம் எத்தனையோ பல எண்ணற்ற சிறப்புக்களையுடைய, அப்பர், சம்பந்தர் என்னும் இவ்விருபெருஞ் சான்றோர்களின் அருமை பெருமைகளை யுணர்ந்து, அவர்களை வழிபட்டும், அவர்களின் அடிச்சுவடுகளைப் பின்பற்றி ஒழுகியும் வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து, நாம் அனைவரும் உய்ய முயலுவோமாக.



# அப்பரும் சுந்தரரும்

திரு தெ. ஞானசுந்தரம், எம் ஏ., சென்னை.

முன்னுரை:

சிவநெறி செழிக்கச் செய்த பெருந்தவச் செல்வர் நால்வராவர். அத்நால்வரையும் சமயகுரவர் எனப்போற்றி வழிபடுகிறது சைவ உலகம். அவர்தம் பெருமை அளவி டற்கரியது. அந்நிறைமொழி மாந்தர் பாடிய இறைமணங் கமழும் மறைமொழிகளால் செந்தமிழ் தெய்வத் தமிழாயிற்று. அந்நால் வரையும்.

பூழியர்கோன் வெப்புஒழித்த
  புகலியர்கோன் கழல்போற்றி!
ஆழி மிசைக் கல்மிதப்பில்
  அணைந்தபிரான் அடிபோற்றி!
வாழிதிரு நாவலூர்
  வன்தொண்டர் பதம்போற்றி!
ஊழிமலி திருவாத
  ஊரர்திருத் தாள்போற்றி;

என்று வாழ்த்துகிறார் உமாபதிசிவம்.

அவர்களுள் தோணிபுரத்தோன்றலும் சொற்கோவும் சுந்தரரும் 'மூவர் முதலிகள்' எனச் சிறப்பிக்கப்படுகின்றனர். அவர்கள் திருவாய் மொழிந்தருளிய திருவாசகங்கள் தேவாரம் என்று பெயரிடப் பெற்றுப் பன்னிரு திருமுறைகளில் முதல் ஏழு திருமுறை களாக ஒளிவிடுகின்றன. அத்திருமுறை களில் முதல் மூன்று திருமுறைகளைப் பாடியவர் திருஞானசம்பந்தர். அடுத்த மூன்று திருமுறைகளைத் தந்தவர் திருநாவுக் கரசர், ஏழாந்திருமுறையினை அளித்தவர் சுந்தரர். இக்கட்டுரையின்கண் திருநாவுக் கரசரையும் சுந்தரரையும் பற்றிக் காண் போம்.

காலநிலை:

திருநாவுக்கரசரும் சுந்தரரும் திருமுனைப் பாடி நாட்டில் தோன்றியவர்கள். தெய்வ நெறிச் சிவம்பெருக்கும் திருவாமூர் அப்பரடி கள் பிறந்ததால் சிறப்புப் பெற்றது. வாய்மை குன்றாத் திருமறையவர்கள் வாழும் திருநாவ லூர் நம்பியாரூரர் தோன்றியதால் ஏற்றம் உற்றது. முன்னவர் வேளாளர் குலத்திலும் பின்னவர் அந்தணர் குலத்திலும் தோன்றிய வர்கள். இருவரும் ஒரே நாட்டைச் சார்ந் தவர் எனினும் ஒரே காலத்தில் வாழ்தவர் அல்லர். சொல்லரசர் கி.பி. 7 ஆம் நூற் ருண்டின் முற்பகுதியிலும் தம்பிரான்தோழர் கி.பி. 9 ஆம் நூற்ருண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்தனர் என்பர் வரலாற்ருசிரியர்கள். இருவர் வாழ்ந்த காலநிலையும் வெவ்வேருன வை. அப்பரடிகள் வாழ்ந்த காலம் சமயப் போராட்டம் மேலோங்கி இருந்தகாலம். சமண சமயம் அரசோச்சிய காலம். அவர் வாழ்வில் ஏற்றுப் போராடிய பல்வேறு சோதனைகளைக் கொண்டு இதனை உணர லாம். திருஞானசம்பந்தர் வாழ்க்கையும் இதனை நன்கு அறிய உதவி புரிகின்றது. சுந்தரர் வாழ்ந்தகாலம் போராட்டம் அடங் கிய அமைதி மிகுந்தகாலம். அக்காலத்தில் திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் மேற்கொண்ட அரும்பெரும் முயற்சிகள் பயனுகச் சைவம் புத்துயிர்பெற்றுத் தழைத் திருந்தது. முடியால் உலகாண்ட மூவேந்தர் முன்னே மொழிந்த என்ற அவருடைய பாட லடியால் மூவேந்தரும் அவரைப் போற்றி யுள்ளனர் என அறிகிறோம். சேக்கிழார் சித்தி ரிக்கும் சுந்தரர் வரலாற்றிலும் சமயப் போராட்டம் யாதுமின்மை நோக்கத்தக்கது.

ஆரூரர் வணங்கிய அப்பர்:

அப்பரடிகள் காலத்தால் சுந்தரருக்கு ஒரு நூற்ருண்டு முன் வாழ்ந்தவர் என்பத தோடு மட்டுமல்லாமல் சுந்தரரால் வழி படப் பெற்றவராகவும் உள்ளார். பெரியு

புராணத்துக்கு முதல் நூலான திருத்தொண்டத் தொகையில்,

> திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
> திருநாவுக் கரையன்றன் அடியார்க்கும் அடியேன்

என்று சுந்தரர் தன்னை அப்பரடிகளின் அடியாராகக் குறிக்கின்றார். அதற்கும் மேலாகத் திருநாவுக்கரசர் பெயரையே எழுதியும் கூறியும் துன்பமில்லாப் பதம்பெற்ற அப்பூதியடிகட்கும் தன்னை அடியார் என்று புகல்கிறார். நாவுக்கரசர் ஆண்டவனுக்கு அடிமையானவர்; இறைவன் தாளினையே தலைப்பட்டவர். ஆளுடைய நம்பியோ அடியார்க்கு அடியாரானவர். இதனால் நாவுக்கரசர் அடியார்க்கு அடியாராக விளங்கினாரில்லை என்பது பொருளன்று; ஆளுடைய நம்பிகள் அடியார்க்கு அடியராய் இலங்குவதில் சிறந்து விளங்கினார் என்பதே கருத்தாகும். இத்தன்மையில், காரிமாறப்பிரான் கழலிணைகளையே பற்றி வாழ்வு நிரம்பப் பெற்ற மதுரகவிகளோடு சுந்தரர் ஒத்து விளங்குகிறார் என்னலாம்.

## தோற்றப் பொலிவு:

அப்பர் எளிமையின் வடிவாகத் திகழ்ந்தவர். பெருந்துறவு நெறியில் நிலைத்து நின்வர். எளியஉடை அணிந்து வெண்ணீறு துதைந்த பொன்மேனியும் மார்பாரப் பொழிகின்ற கண்ணீருமாகக் கையில் உழவாரப்படை யேந்தித் திருவாயில் பதிகச் செஞ்சொல் பாடியவண்ணம் ஊர்தோறும் திரிந்து தொண்டாற்றிய உத்தமர். அவருடைய கோலதைச் சேக்கிழார் மிகுந்த ஈடுபாட்டோடு.

> "தூயவெண்ணீறு துதைந்தபொன் மேனியும் தாழ்வடமும்
> நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையும் நைந்துருகிப்
> பாய்வதுபோலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச் செஞ்சொல்
> மேயசெவ் வாயும் உடையார்புகுந்தனர் வீதியுள்ளே"

என்று வருணிக்கிறார்.

இக்கருணை வடிவானவனுக்குத் தீங்கு செய்யச் சமணர்களுக்குச் சீற்றம் எவ்வாறு தான் உண்டாயிற்றோ என்று கண்டவர் கனிந்துருகுமாறு இருந்ததாம் அவருடைய திருவுரு. திருநாவுக்கரசரின் தெய்வப் பொலிவைச் சிவஞான முனிவர்.

> "இடையருப் பேரன்பும் மழைவாரும் இணைவிழியும் உழவா ரத்திண்
> படையருத் திருக்கரமும் சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சும்
> நடையருப் பெருந்துறவும் வாகீசப் பெருந்தகைதன் ஞானப் பாடல்
> தொடைருச் செய்வாயும் சிவவேடப் பொலிவழகும் துதித்து வாழ்வாம்"

என்று சொல்லோவியமாகக் காட்டுகிறார்.

இதற்கு முற்றிலும் மாறுபட்ட நிலையில் நின்றவர் சுந்தரர். அவர் எளியகோலம் பூண்டவரல்லர்; அழகுக் கோலம் பூண்டவர். என்றும் திருமணக்கோலப் பெருமாளாகக் காட்சிதந்தவர்.

> "தோழமையாக உனக்கு நம்மைத் தந்தனம்
> நாம்முன்பு தொண்டு கொண்ட
> வேள்வியில் அன்றுநீ கொண்ட கோலம்
> என்றும் புனைந்துநின் வேட்கைதீர
> வாழிமண் மேல்விளை யாடுவாய்"

என்ற இறைவன் ஆணைப்படி மணக்கோலம் தாங்கி வாழ்ந்தவர். ஒருமணத்தைச் சிதைவு செய்து ஆட்கொண்ட உவனைக் கொண்டே இருமணத்தைச் செய்து கொண்டவர் அவர். மேலும் அம்மங்கையர்பால் அவனைத் தூது செல்லவிட்டு வன்தொண்டர் என்ற பெயருக்கேற்ப நடந்தவர். இதனையே திருக்களிற்றுப்படியார்.

> 'மோகம் அறுத்தவர்க்கே முத்தி கொடுப்பதென
> ஆகமங்கள் சொன்ன அவர்தமையே— தோகையர்பால்
> தூதாகச் செல்லவிடும் வன்தொண்டன் தொண்டுதனை
> ஏகாதச் சொல்வேனி யான்'

என்று நவில்கின்றது.

## இறைவன் ஆட்கொண்ட திறம்:

இருவருமே இறைவனால் ஆட் கொள் ளப்பட்ட சிறப்புக்குரியர். எனினும், அவர் களை இறைவன் ஆட்கொண்ட முறை வேறு பட்டது. சிவபிரான் திருநாவுக்கரசருக்குத் தாங்கொணாத சூலைநோய் தந்து துன்புறுத்தி ஆட்கொண்டான் "நாட்டிற்கிலாத குடர் நோய் நினக்கு முன்நல்கி" என்கிறார் சிவப் பிரகாசர். ஆனால் சுந்தரரைப் பெற இருந்த இன்பத்தைத் தடுத்து வலிய ஆட்கொண் டான் "ஒரு மணத்தைச் சிதைவு செய்து வல்வழக்கிட்டு ஆட்கொண்ட" என்பது காஞ்சிபுராணத் தொடர்.

## அருளால் செய்த அற்புதங்கள்:

அப்பரும் சுந்தரரும் சிவனருளாலே நிகழ்த்திய வியத்தகு நிகழ்ச்சிகள் பல. நாவுக்கரசர் பல்லவ மன்னன் நீற்றறையில் இட்டபொழுது தாண்டவ மூர்த்தியின் தாள் நிழலைத் தலைக்கொண்டு அங்கு இனிது வீற் றிருந்தார். அவன் நஞ்சூட்டுவித்தபொழுது 'நாதனடியார்க்கு நஞ்சும் அமுதாம்' என்று அதனை அருந்தினார்; கொலையானை எதிரே வந்தபொழுது தன்னை அது வலம் வந்து புறஞ் சென்று சமணர் சிலரைக் கொன்றோடு மாறு செய்வித்தார்; கல்லொடு பிணித்துக் கடலில் இட்டபொழுது 'சொற்றுணை வேதி யன்' என்னும் நமச்சிவாயப் பதிகத்தைப் பாடிக் கரையேறினார். இவைகள் அவர் வாழ்வில் நடந்த செயல்கள். மற்றவர் வாழ்வில் ஏற்பட்ட துன்பங்களையும் துடைத் தவர் அப்பர்பெருமான். அப்பூதியடிகள் மகன் மூத்த திருநாவுக்கரசு அரவு தீண்டி இறந்தபொழுது 'ஒன்று கொலாம்' என்னும் பதிகம்பாடி அவனை உயிர்பெற்றெழச் செய் தார். திருவீழிமிழலையில் பஞ்சம் ஏற்பட்ட பொழுது பிரானருளால் வாசியிலாக்காசு பெற்று அடியவர் துயர் தீர்த்தார். திரு மறைக் காட்டில் நெடுநாட்களாக மூடிக் கிடந்த கோயிற் கதவினைத் திறக்கப் பாடி னார். அப்பரடிகள் செய்த அருஞ்செயல் களையெல்லாம்,

> "வெந்தபொடி விடம்வேழம் வேலைநீந்தி
> வியன்சூலங் கொடிஇடபம் விளங்கச் சாத்தி
> அந்தமில்அப் பூதிமகன் அரவு மாற்றி
> அருட்காசு பெற்றுமறை அடைப்பு நீக்கி"

எனத் திருத்தொண்டர் புராண சாரம் திரட் டிக் கூறுகின்றது.

சுந்தரரும் அருஞ்செயல்கள் பல நிகழ்த்தியுள்ளார். திருக்கோளிலிப் பெரு மானைப் பாடிக் குண்டையூரிலிருந்து நெற் குவியல்களைத் திருவாரூருக்குப் பூதகணங் கள் சேர்க்குமாறு செய்தார். திருவருளால் அவர் தலையணையாக வைத்துக் கொண்ட செங்கற்கள் பொன்கற்களாக மாறின. திரு முதுகுன்றப் பெருமான் தந்த பன்னீராயிரம் பொன்னை மணி முத்தாற்றில் இட்டுத் திரு வாரூர்த் திருக்குளத்தில் எடுத்தார். இறை வன் சோறும் கறியும் இரந்து வந்து ஆரூர ருக்கு அளித்துள்ளான். காவிரி பிரிந்து அவருக்கு வழிவிட்டுள்ளது. இறைவன் அவர் பொருட்டுத் தூது நடந்துள்ளான். திருப்புக்கொளியூரில் அவிநாசி அப்பனைப் பாடி முதலையுண்ட பிள்ளையை உரிய வளர்ச்சியுடன் கொண்டுவந்து கரையில் முதலை உமிழுமாறு செய்தார். திருத்தொண் டர் புராணசாரம் இவற்றையெல்லாம்

> "செப்பலருங் குண்டையூர் நெல்ல ழைத்துத்
> திருப்புகலூர்ச் செங்கல்செழும் பொன்னாச் செய்து
> தப்பில்முது குன்றர்தரும் பொருளாற் றிட்டுத்
> தடத்தெடுத்துச் சங்கிலிதோள் சார்ந்து நாதன்
> ஒப்பில்தனித் தூதுவந்தா றூடுகீறி
> உறுமுதலை சிறுமழலை உமிழ நல்கி"

எனக் குறிக்கின்றது.

'மூவர் முதலிகள்' வாழ்வில் நிகழ்ந்த அற்புதச் செயல்களில் ஒவ்வொன்றைச் சுட்டிச் சிவப்பிரகாசர், முதலையுண்ட மகனை அழைத்த சுந்தரர் செயலே சிறந்ததெனப் பாடியுள்ளார். என்புக் குடத்திலிருந்து பூம் பாவை எழுமாறு செய்தார் திருஞானசம்பந் தர்; கல்லே தெப்பமாகக் கரையேறினார் அப் பர்; இவையிரண்டிலும் முறையே என்பு என்ற ஒன்று பெண்ணாகவும், கல் என்ற ஒன்று தெப்பமாகவும் மாறின. ஆனால் யாதுமில்லாத நிலையில் முதலைவாய்ப் பிள்ளையை மீட்ட செயல் சிறந்தது என் கிறார் சிவப்பிரகாசர். இதனை,

போதம் உண்ட பிள்ளையென்பு
　　பொருகண்மாது செய்ததோ?
காதல்கொண்டு சொல்லின்மன்னர்
　　கல்மிதப்ப உய்த்ததோ?
வாய்திறந்து முதலைகக்க
　　மகவை நீ அழைத்ததோ?
யாதுநம்பி அரிது; நன்று
　　எனக்கு இயம்ப வேண்டுமே.

என்ற நால்வர் நான்மணிமாலையால் அறியலாம்.

## வழிபாட்டு நெறி:

இறைவனை வழிபடுகிற முறை பல. அதனை அடிமை நெறி (தாசமார்க்கம்), சேய்நெறி (சற்புத்திர மார்க்கம்), தோழமை நெறி (சகமார்க்கம்) ஞானநெறி (சன்மார்க்கம்) என்று பகுத்துச் சொல்வர் ஆன்றோர். அந்நெறிகளுள் அடிமை நெறியில் நின்றவர் அப்பர். அதற்கேற்ப அவர் பாடல்களில் இறைவனைப் பலகால் பணிந்து வேண்டுகின்ற தன்மையினைக் காணலாம்.

"சோதியே சுடரேயுன்றன் தூமலர்ப்
　　　　　　　　　　பாதங்காண்பான்
ஆதியே அலந்துபோனேன் அதிகைவீ
　　　　　　　　　　ரட்டனீரே"

"தேனமர் பொழில்கள் சூழத் திகழுநெய்த்
　　　　　　　　　　தானமேய
கூனிள மதியினானைக் கூடுமாறு
　　　　　　　　　　அறிகிலேனே"

"செறிவிலேன் சிந்தையுள்ளே சிவனடி
　　　　　　　　　　தெரியமாட்டேன்
குறியிலேன் குணமொன்றில்லேன்கூறுமா
　　　　　　　　　　கூறமாட்டேன்
நெறிபடு மதியொன்றில்லேன் நினையுமா
　　　　　　　　　　நினையமாட்டேன்
அறிவிலேன் அயர்ந்து போனேன்
　　　　　　　　　　ஆவடு துறையுளானே"

"அரவுமிழ் மணிகொள்சோதி யணியணா
　　　　　　　　　　மலையுளானே
பரவுநின் பாதமல்லால் பரமநான்
　　　　　　　　　　பற்றிலேனே"

முதலிய பகுதிகளை அவருடைய எல்லையற்ற பணிவுக்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம்.

சுந்தரர் தோழமைநெறியில் நின்றவர். இறைவனாலே தோழன் என ஏற்றுக்கொள்ளப் பெற்றவர். இறைவன் தன்னுடைய குற்றங்களுக்கும் துணைபுரிந்தான் என்பதை 'என்னுடைய தோழனுமாய் யான்செய்யும் துரிசுகளுக்குடனாகி' என்று குறிக்கிறார் சுந்தரர். அவர் அடியார்களால் "தம்பிரான் தோழர்" என அன்போடு அழைக்கப்பட்டவர். நட்புக்குரிய நகையாடும் போக்கு அவர் பாடலில் இழையோடுவதைக் காணலாம்.

"திங்கள் தங்கு சடைகண் மேலோர்
　　திரைகள் வந்து புரள வீசும்
கங்கை யாளேல் வாய்தி றவ்வாள்
　　கணப தியேல் வயிறுதாரி
அங்கை வேலோன் குமரன் பிள்ளை
　　தேவி யார்கோற் றட்டி யாளார்
உங்க ளுக்காட் செய்ய மாட்டோம்
　　ஓண காந்தன் தளியுளீரே"

என்ற பாட்டில் உள்ள நகைச்சுவை சிந்தைக்கினிய விருந்தாகும்.

நட்புக்கேயுரிய மற்றொரு சிறப்பு, உரிமையோடு பழகுவது ஆகும். தன் குறைகளைச் சொல்லி நிறைவு செய்யுமாறு இறைவனை நம்பியாரூரார் வேண்டுமிடங்களில் இந்த உரிமையுணர்வு சிறந்து விளங்குகிறது.

"முத்தாரம் இலங்கிமிளிர் மணிவயிரக்
　　　　　　　　　　கோவை
யவைபூணத் தந்தருளி மெய்க்
　　　　　　　　　　கினிதா நாறும்
கத்தூரி கமழ்சாந்து பணித்தருள
　　　　　　　　　　வேண்டும்
கடல்நாகைக் காரோண மேவியிருந்
　　　　　　　　　　தீரே"

என்ற பாடலிலும் அவர் உரிமையுணர்வு புலப்படுவது அறியலாம்.

## முடிவுரை:

இதுகாறும் கூறியவற்றால் திருநாவுக்கரசர் அப்பரடிகள் ஆகியோர் பிறப்பு, வாழ்ந்த காலநிலை, தோற்றப் பொலிவு, செய்த வியத்தகு செயல்கள், இறைவனை வழிபட்ட முறை, அவர்கள் பாடல்களில் மேலோங்கி நிற்கும் உள்ளப் பண்பு ஆகியனவற்றை உணரலாம்.



# திருவாமூர்
# அப்பர் ஆலயத்தின் அழகார்ந்த கோலங்கள்



செப்பரிய புகழாளர் அப்பர் கோயில்
சீரோடு விளங்குகின்ற திருமு கப்பு.



தந்தை தாய் தமக்கையுடன் தமிழின் வேந்தர்
சிந்தை வளர் திருப்பொலிவில் திகழும் மாட்சி.



அப்பர் திருக்கோயில் அணிமாட மேல்தளத்தே
செப்பரிய தமிழ்நால்வர் சிறந்திருக்கும் அருட்காட்சி.



அப்பர்பிரான் அவதரித்த திருவாமூரில்
அடியார்கள் எண்ணத்தால் எழுந்து நிற்கும்
ஒப்பரிய திருக்கோயில் தன்னில் அப்பர்
உலகுக்கு அருள்வழங்கும் உயர்ந்த மாடம்.

# அப்பர் சந்நிதியில் அருள்பெற்றோர்

திருவாமூர் ஸ்ரீ அப்பர் சுவாமிகள் திருமுன்னர் 1966 முதல், ஆண்டுதோறும், தேவா ரத் திருமுறைகளில் பழுத்த அனுபவம் பெற்று, முதிர்ந்த ஓதுவா மூர்த்திகளுக்கு அவர்தம் திருமுறைத் தொண்டினைப் பாராட்டும் முகத்தான் 'திருமுறைக் கலாநிதி' என்ற சிறப்புப் பட்டம் பொறிக்கப் பெற்ற பொற்பதக்கம் வழங்கி, பொன்னாடை போர்த்தி, 501 வெண் பொற்காசுகள் கொண்ட பண முடிப்பீந்து சிறப்பிக்கப் பெற்று வருகிறது. சித்திரைச் சதயத்தன்று தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்கள் திருவாமூர் எழுந்தருளி திருமுறைவாணர்களுக்கு இப்பட்டத்தை வழங்கியருளுகிறார்கள்.

## 1966 குருபூசை விழாவில்



இடைமருதூர் நடராச தேசிகர்க்கு
எங்கயிலைக் குருமணிதான் பட்ட மீந்து
இனிதாகப் பணமுடிப்பு வழங்கும் மாட்சி
இதன்பின்னர் காண்பதுவோ அப்பர் காட்சி.

## 1966 முதல் திருமுறைக் கலாநிதி பட்டம் பெற்றவர்கள்

1. 1966 திருவிடைமருதூர் திரு. நடராச தேசிகர்
2. 1967 சிதம்பரம் திரு. மு. கனகசபைப் பிள்ளை
3. 1968 திருவீழிமிழலை திரு. மு. சா. சோமசுந்தர தேசிகர்
4. 1969 திருமறைக்காடு திரு. க. மணி தேசிகர்

1970 இல் பட்டம்பெற இருப்பவர்: திருக்கடவூர் திரு. மு இரத்தினம் பிள்ளை.

# 1969-இல் அப்பர் குருபூசைப் பாதயாத்திரை வேள்வித் தொடக்க விழா




பாதயாத் திரைக்குழுவில் பங்கேற்ற அடியவரை
ஆதரித்துத் தாம்பரத்தில் அன்பரெலாம் வரவேற்றார்.

திருவாமூர் ஸ்ரீ அப்பர் சுவாமிகள் குருபூசை விழாவை முன்னிட்டு 81 அன்பர்களைக் கொண்ட பாத யாத்திரைக் குழுவினர் ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் தலைமையில், சென்னை தியாகராயநகர் தருமபுர ஆதீன சமயப்பிரசார நிலையத்திலிருந்து, தமது பாத யாத்திரையை 30—4—69 அன்று மாலை தொடங்கினர். விழாவிற்கு உயர் நீதிபதி கனம், பி.எஸ். கைலாசம் அவர்கள் தலைமை வகித்தார்கள். பேராசியர், டாக்டர். திரு மு. வரதராசனார் அவர்கள் பாத யாத்திரை விழாவைத் தொடங்கி வைத்தார்கள், திருமதி. சௌந்தரா கைலாசம் அவர்கள் அப்பர் குருபூசை விழாமலரை வெளியிட்டார்கள்.

தொடக்கவுரையாற்றிய பேராசியர், திரு மு. வரதராசனார் அவர்கள் 'அறிவால் உயர்ந்தவர்கள் உடலுழைப்பும் செய்யவேண்டும் என்பதற்கு எடுத்துக் காட்டாகத் திகழ்ந்தவர் அப்பர் பெருமான். அதனை இக்கால மக்கள் யாவரும் உணரவே, அவர் தமது திருக்கையில் உழவாரப்படை ஏந்தியுள்ளார். அவர் பாத யாத்திரையாகவே பாரதநாடு முழுவதும் சென்று தலங்களைத் தரிசித்துப் பக்தி நெறியைப் பரப்பியவர். 1300 ஆண்டுகளுக்கு முன்பு நடந்தது என்று இதனை எளிதாகக் கருதி, நாம் புறக்கணித்தல் கூடாது. இந்நூற்றாண்டிலும் அப்பர் பெருமானின், அடிச்சுவட்டைப் பின்பற்றியே, காந்தியடிகள் தமது பாதயாத்திரையை மேற்கொண்டு பாரதநாட்டிற்குப் பெருவெற்றியைத் தேடித்தந்திருக்கிறார். காந்தியடிகள் கடைப்பிடித்த சத்தியாக்கிரஹம், உண்ணா நோன்பு முதலியன திருநாவுக்கரசர் வாழ்விற் கண்டனவே' என்று குறிப்பிட்டார். நீதிபதி கனம், பி. எஸ். கைலாசம், பாதயாத்திரை செய்தல் கூடாது என்று எவரும் கருதலாகாது. அதனால் பெரும் பயன் விளையும் என்பதைப் பெரியோர்களின் வாழ்வில் காண்கிறோம். சைவ சமயாசாரியார்கள் பாதயாத்திரை செய்தது போலவே ஆதி சங்கரரும் தமது அத்வைதக் கொள்கையை இந்தியா முழுவதும் பாதயாத்திரையின் மூலமாகவே பரவச்செய்து மக்கட் பண்பை உயர்த்தி இருக்கின்றார் என்று குறிப்பிட்டார்கள்.

வித்துவான், ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் வரவேற்புரையும் நன்றியுரையும் நவின்றார்கள். பின்னர், பாதயாத்திரைக் குழுவினர் சிவ விஷ்ணு ஆலயத்தில் வழிபாடு செய்துகொண்டு கிண்டியில் உள்ள மணலி ராமகிருஷ்ணமுதலியார் மாணவர் விடுதிக்குச் சென்று சேர்ந்தனர். மக்கள் இவ்விழாவிற்கு மிகவும் திரளாக வந்திருந்து, தமது அன்பையும் ஆர்வத்தையும் பெரிதும் புலப்படுத்தினர்.



பாதத்தால் ஆமூர்க்கு நடந்து சென்ற
பண்பார்ந்த அடியார்கள் மூவர் கண்டீர்.



பாதத்தால் நடந்தாரை ஆமூர் எல்லைப்
பல்லடியார் வரவேற்றுச் சிறப்புச் செய்தார்.

செய்திச் சுருக்கம்

## 1969-இல் திருவாமூரில் ஸ்ரீ அப்பர் சுவாமிகள் குருபூஜை விழா

ஸ்ரீ அப்பர் சுவாமிகள் திருவவதாரத் தலமாகிய திருவாமூரில் ஸ்ரீ அப்பரடிகள் இறைவன் திருவடி நிழலிற்கலந்த சித்திரைச் சதயத்தை ஒட்டி 10—5—69 சனிக்கிழமை யன்று மிகச்சிறப்பாகக் குருபூஜைவிழா இனிதே நிகழ்ந்தேறியது.

குருபூஜைவிழாவையொட்டி திருவாமூர் ஸ்ரீ அப்பர்சுவாமிகள் திருக்கோயிலில் 8, 9, 10—5—69 ஆகிய மூன்று நாட்களும் அப்பர் தேவார அருந்தமிழ் மாநாடு, கருத்தரங்கு, கவியரங்கு, பட்டிமன்றம், பண்ணிசையரங்கு இவற்றுடன், பண்ணுராய்ச்சி மாநாடும், இன்னிசை நிகழ்ச்சிகளும் இடம் பெற்றன.

ஸ்ரீ அப்பர் சுவாமிகள் தலங்கள்தோறும் காலால் நடந்து சென்று இறைவனை வழி பட்டு, நற்றமிழ்ப்பாமாலை பாடி, கையில் ஏந்திய திருவுழவாரத்தால் ஆலயத்துள் கல்லும் முள்ளும் களைந்து தொண்டு நெறியின் தலைநின்ற தூயோர். 81 ஆண்டுகள் நிலவுலகில் வாழ்ந்திருந்து சைவம் புதுக்கிய அப்பர்பெருமானின் திருத்தொண்டை நினைவுகூரும் வகையில் 81 அன்பர்களைக் கொண்ட பாத யாத்திரைக் குழு ஒன்று 30—4—69 அன்று சென்னை, தருமபுரஆதீன மடாலய தேவாலய சமயப் பிரசார நிலையத்திலிருந்து புறப் பட்டது.

தவத்திரு, சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் தலைமையில் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் வந்திருந்த அன்பர்கள் கையில் உழவாரப் படையேந்தித் திருவாமூர் நோக்கிப் பாதயாத்திரையைத் தொடங்கினர். பேரூராதீனம், தவத்திரு, சாந்தலிங்க ராமசாமி அடிகளும், சமயபுரம் தவத்திரு ஊரன் அடிகளும் பாத யாத்திரை யில் பங்குபற்றினர்.

1—5—69 தாம்பரத்திலும். 2-ஆம் நாள் செங்கற்பட்டிலும், 3ஆம் நாள் மதுராந்த கத்திலும், 4ஆம் நாள் காலை அச்சிறுபாக்கத்திலும், மாலை பெரும்பேற்றிலும், 5ஆம் நாள் திண்டிவனத்திலும், 6ஆம் நாள் விக்கிரவாண்டியிலும், 7ஆம் நாள் காலை விழுப்புரத்திலும், மாலை இருவேல்பட்டிலும் பாதயாத்திரைக் குழுவினர் மிகச் சிறப்பாக அன்பர்களால் வரவேற்கப்பட்டனர், இடையில் குழுவினர் திருக்கோயில் வழிபாடாற்றிக்கொண்டு, ஆங்காங்கே திருமுறை மாநாடுகளும் தேவார இசையரங்குகளும் நிகழ்த்தினர்.

பாதயாத்திரைக் குழுவினர் 8—5—69 காலை 11 மணி அளவில் திருவாமூரை அடைந் தனர், பெருந்திரளான மக்கள் கூடிநின்று வரவேற்றனர். குழுவினர் ஸ்ரீபசுபதீசுவரர் திருக்கோயில வழிபாடாற்றிக்கொண்டு ஸ்ரீஅப்பர் பெருமானை வழிபட்டனர்.

8—5—69 மாலை சிவபூஜர் மாநாடும், அப்பர் தேவார அருந்தமிழ் மாநாடும் நிகழ் வுற்றன. திருவாளர்கள் திருச்சி. ஜி. வரதராஜபிள்ளை, ஔவை. சு. துரைசாமிபிள்ளை சி. அருணைவடிவேல் முதலியார், திருவாசகமணி முதலியோர் விழாவில் பங்கேற்றனர். இரவு குளிக்கரை சகோதரிகளின் இன்னிசை நிகழ்வுற்றது.

9—5—69 காலை பண்ணுராய்ச்சி மாநாடு நிகழ்வுற்றது, திரு, சொ. சிங்காரவேலன் தொடங்கிவைத்தார். வேதாரண்யம் திரு. க மணிதேசிகர் தலைமையில் ஓதுவாமூர்த்தி கள் பலரும் 'தக்கேசிப் பண் பற்றி' ஆய்வு நிகழ்த்தினர். மாலை கோவை. கௌமார மடாலயம் தவத் திரு. சுந்தர சுவாமிகள் தலைமையில் அப்பர் கவியரங்கம் நிகழ்ந்தது. திருவாளர்கள் அ. பாலகுருவாயன், இரா. செல்வக்கணபதி, சோ. நடராசன், சொ. சிங்கார வேலன், இராம. கோவிந்தசாமி பிள்ளை, திருவாசகமணி, ஜி முத்துசாமிப் பிள்ளை முதலி யோர் பங்குபற்றினர். இரவு வேலூர் சப் இன்ஸ்பெக்டர் குணபூஷணம் இன்னிசைக் கதை நிகழ்வுற்றது.

10—5—69 குருபூஜை விழாவன்று காலை திருவாசகமணி தலைமையில் பவானி திரு. மு. கண்ணப்பர் இன்னிசைக் கதை நிகழ்த்தினர். மாலை திரு. உலக. சுப்பிரமணியம் திருமதி. காஞ்சனமாலை அம்மையார் சொற்பொழிவாற்றினர். மாலை அப்பர் தேவாரத்தில் பெரிதும் வலியுறுத்தப் பெறுவது பக்தி நெறியா? தொண்டு நெறியா? என்ற பொருள் பற்றி பட்டிமன்றம் கனம். என், கிருஷ்ணசாமி ரெட்டியார் தலைமையில் நடந்தது. ஔவை. து நடராசன், தவத்திரு. ஊரன் அடிகள். இரா. செல்வக்கணபதி, இராமராசன் வித்துவான் ஆறுமுக முதலியார் புலவர் அரங்கநாதன் ஆகியோர் பங்கேற்று வாதிட்டனர்,

குருபூஜையன்று ஸ்ரீதிருநாவுக்கரசு பெருமானுக்கு மகந்நியாச பூர்வமாக ஏகாதச ருத்ராபிஷேகமும், தீபாராதனையும் நிகழ்வுற்றன. அன்று மாலை பழம்பெரும் ஓதுவா மூர்த்திகளான வேதாரண்யம் திரு. க. மணிதேசிகர் அவர்களுக்கு தவத்திரு சோமசுந் தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் அப்பர் சந்நிதியில் "திருமுறைக் கலாநிதி" என்ற சிறப்புப்பட்டம் பொறித்த பொற்பதக்கமளித்து பொன்னுடை போர்த்தி, ரூ 501 கொண்ட பணமுடிப்பும் வழங்கினார்கள்.

அன்றிரவு ஸ்ரீஅப்பர் சுவாமிகள் திருவீதியுலாக்காட்சி செம்பனார்கோயில் இராஜ ரத்தினம் குழுவினர் நாதசுர இசையுடனும், பிரபல ஓதுவாமூர்த்திகளின் தேவாரப் பண் ணிசையுடனும், வாணவேடிக்கையுடனும் சிறப்பாக நிகழ்ந்தேறியது. பல்லாயிரக்கணக் கான மக்கள் அப்பர் பெருமானைக்கண்டு களித்து கண் குளிர தரிசித்தும், செவி குளிர அறவுரைகளைக் கேட்டும் சென்ற காட்சி வந்தோரைப் பக்தியில் ஈடுபடுத்தியது.



திருவா சகமணியார் திருவாமூர் கவியரங்கில்
அரிய கவிதொடுத்து ஆர்ப்பரிக்கும் அருங்காட்சி.



தக்கேசிப் பண்ணையும் மாநாட் டின்கண்
தருமைவளர் தம்பிரான் வரவேற் கின்றார்.



நீதிபதி ரெட்டியார் தலைமை யேற்க
நிகழ்கின்ற பட்டிமன்றம் திருவா மூரில்
சோதிரா மலிங்கர்திரு வடிகள் போற்றும்
தொழிலதிபர் மகர்லிங்கம் தொடங்கி வைத்தார்.



திருமறைக் காட்டு மணி தேசி கர்க்குத்
திருமுறைக் கலாநிதி என்ற பட்டம்
தருமைவளர் தம்பிரான் வழங்கி நன்ருய்த்
திருமுறை வல்லார்க்குச் சிறப்புச் செய்தார்.

# அப்பரும் நம்பியாண்டாரும்

பேராசிரியர். ஔவை துரைசாமி பிள்ளை, மதுரை.

நம்பியாண்டார் நம்பிகள் கி. பி. 9ம் நூற்றுண்டின் இறுதியிலும் 10ம் நூற்றுண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்த சைவ வேதியர். தில்லைச் சிதம்பரத்திற்கு மேற்கில் சுமார் 10-12 கல் தொலைவில் உள்ள திருநாரையூரிற் பிறந்து வாழ்ந்தவர். அவ்வூர் அவர்க்கு முன்பே ஏழாம் நூற்றுண்டில் திருஞானசம்பந்தர், "சிவன் மேய செல்வத் திருநாரையூர்" என்றும், திருநாவுக்கரசர் "நாறு பூம் பொழில் நாரையூர்" என்றும் மகிழ்ச்சியோடு வந்திருந்து பாடிய மாண்புடையது.

நம்பிகள் இளமையிலேயே திருவருட் கல்வியும் சிவநெறித் தெளிவும் சிறக்கப் பெற்றவர். தந்தை ஊரில் இல்லாதபோது சிறுவராகிய நம்பிகள் அவ்வூர் விநாயகர்க்குப் பூசைத் திருப்பணி புரிந்து தாம் கொண்டுசென்ற திருவமுதை உண்பித்த பெருமையுடையவர். இவ்வூரை அந்நாளைய சோழர் அரசியற் குறிப்புக்கள் "வடகரை விருதராச பயங்கர வளநாட்டுத் தனியூர் வீரநாராயணச் சதுர்வேதி மங்கலத்துப் பிடாகையான திருநாரையூர்" என்றும் இங்குள்ள சிவபெருமானுக்குத் திருக்கயிலாயமுடைய மகாதேவர் எனவும், பெருமாளுக்குத் "திருவாய்ப்பாடி ஆள்வார்" எனவும் பெயர் என்றும் தெரிவிக்கின்றன. (ஏ. ஆர். எண். 542-3-1921) நான் மறை வல்ல வேதியர் வாழ்ந்ததால், வைதிக ஞானவொழுக்கங்களும் சைவநெறியின் பெருக்கமும் இவ்வூர்க்கண் சிறந்து நின்றமை அறியலாம். வடமொழிப் புலமையுடன் நம்பிகள் தமிழில் இயற் புலமையும் திருமுறைகளை யோதுதற்குரிய இசைப்பயிற்சியும் நன்கு பெற்றிருந்தார். அதனுல் அவரது புகழ் காவிரி வடகரை நாட்டில் நன்கு பரவியிருந்தது.

சோழவேந்தனுன இராசராசன் தேவாரத் திருப்பதியங்கள் தில்லைப் பெருங்கோயிலில் இருப்பதை அறிந்து அவற்றை வெளியிற் கொணர்ந்து முறை வகுக்க விரும்பினுன். அக்காலத்தே மக்களிடையே திருப்பதியங்களை ஓதுவதில் மிக்க விருப்பமுண்டாகியிருந்தது. ஆங்காங்கே அவற்றில் காணப்படும் இனிய தொடர்களைக் கொண்டே பெற்ற மக்களுக்கும் வீடு மனை நிலம் முதலியவற்றிற்கும் பெயரிட்டுப் போற்றுவது வழக்கம். பிற்காலத்தில்தான் திருமுறைகளைப் பயில்வதை மதிக்காத பேய்க்கூட்டம் தோன்றிச் சைவ மரபையும் ஒழுக்கத்தையும் சீர் குலைத்தது.

திருப்பதியங்களைக் கண்டு ஆராய்ந்து இசைவகையில் முறைப்படுத்தும் திறம் நம்பிகட்குண்டெனச் சோழர் பெருமானுக்கு நாட்டு நல்லறிஞர் தெரிவிக்கவும், அவன் நம்பிகளைக்கொண்டு தில்லைக்குச் சென்று திருப்பதியங்களை வெளிப்படுத்திப் பண்வகையில் முறை செய்யுமாறு வேண்டினுன். பண்முறைகளை அறிந்தவராயினும் திருவெருக்கத்தம்புலியூரில் திருநீலகண்ட யாழ்ப்பாணர் குடியில் பெண்ணெருத்தி பண்முறையில் மிக்க புலமையுற்றிருந்ததை அறிந்து அரசனைக்கொண்டு அவளை வருவித்து முறை செய்தார்.

நம்பியாண்டார்க்கு இயல்பாகவே திருஞானசம்பந்தர் திருப்பதியங்களில் மிக்க ஈடுபாடு உண்டு; அவருடைய திருப்பாட்டுக்களை விரும்பிப் பயிலும் விழைவுமேம்பட்டவர். ஞானம் பெற்ற பிள்ளையாகிய அவரைச் சிவமாகவே கருதி மெய்யால் வணங்கியும் வாயாற் பல நூல்களைப் பாடியும் வழிபடும் இயல்பினர். ஞானசம்பந்தரோடு உடனிருந்து யாழ் இசைப் பணி புரிந்த நீலகண்ட பாணர் வழியினள் எருக்கத்தம்புலி

பூர் நங்கை என்றது நம்பிகட்கு அவள்பால் பெருமதிப்பை உண்டு பண்ணிற்று. அவரது திருவுள்ளமும் சாதி வேற்றுமைச் சேற்றில் அழுந்திக் கெடாமல் பண்ணிசைப் புலமையையே பொருளாகக் கருதியது; அஃதொன்றே நம்பியாண்டார் நம்பிகளின் பெருமைக்கு உயரிய சான்று! அவரே திருப்பதியங்களை முறை செய்தற்குத் தகுதி வாய்ந்தவர் என்பதையும் வற்புறுத்துகிறது.

நம்பி ஆரூரராகிய சுந்தரமூர்த்திகளிடத்தும் நம்பியாண்டார்க்குப் பெருமதிப்பு இருந்தது. அவர் பாடிய திருத்தொண்டத் தொகையில் தொக்கி நின்ற வரலாறுகளை நேர்மை நிறைந்த மனத்தோடு தெரிந்து திருத்தொண்டர் திருவந்தாதி என்ற நூல் எழுதித் தமது நன்றிக்கடனை அவர்க்குச் செலுத்தினர். அதன் கண் நம்பி ஆரூரரின் பெருமைகளை நற்றேன் பிலிற்றும் சொற்றொடர்களால் நயம் கனியப் பாடிருப்பது அருந்தமிழ் அறிஞர்க்கு இன்பம் தருவதாகும்.

பின்பொருகால் சோழவரசின் பேரமைச்சராய்ப் பிறங்கிய சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர் வரலாறு எழுதும் திருப்பணியை மேற்கொண்டபோது நம்பிகளின் நேர்மையில் பெருகிய அன்பினராய் அவர் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியையே தாம் முதலாகக்கொண்ட திருத்தொண்டத் தொகைக்கு வழி நூலாகக் கொண்டார் எனின், வேறு கூறுவது மிகை. இங்ஙனம் உண்மை வரலாறிருக்க, மெய்யே மொழிந்தறியாத ஒருமடவோன் வடமொழியில் உபமன்யு பக்த விலாசம் என்றொரு நூலை எழுதிச் சேக்கிழார், தமது நூலை அதைப் படித்து எழுதினர் என்று ''தெருளாத உள்ளத்தவர் திகைக்கச்'' செய்துள்ளான், இது தமிழ்நாடு செய்த தீவினை.

திருவாசகம் பாடியருளிய திருவாதவூரரிடத்தும் நம்பிகள் மிக்க அன்பும் ஆர்வமும் கொண்டவர் என்று அவருடைய இனிய நூல்களால் அறிகின்றோம். திருவாசகமும் திருக்கோவையாரும் நம்பிகளின் புலமையுள்ளத்தில் நிலைபெற்று நின்று வெளிப்படற்கு இடம் வாயாமையால் ஆங்காங்கு ஒளி செய்து தமது இருப்பைப் புலப்படுத்துகின்றன. நம்பிகள் காலத்து வாழ்ந்தோருள் உபமன்யு பக்தவிலாசம் எழுதியவன் போல ஒருவர் திருக்கோவை போன்ற நூலொன்று எழுதியது காண்கின்றார் நம்பிகள்; அது கண்டுஅவர் மனத்தெழுந்த நகைப்பை,

> ''வருவா சகத்தினில் முற்றுணர்ந்
> தோனை வண்தில் லைமன்னை
> திருவாத வூர்ச்சிவ பாத்தியன் செய்
> திருச் சிற்றம்பலப்
> பொருளார் தருதிருக் கோவை
> கண் டேயும் மற் றப்பொருளைத்
> தெருளாத உள்ளத் தவர்கவி பாடிச்
> சிரிப்பிப்பரே''

என்று தெரிவிக்கின்றார்.

இங்ஙனம் ஞானசம்பந்தரையும் நம்பி ஆரூரரையும் திருவாதவூரரையும் சிந்தித்து மகிழும் நம்பியாண்டார் திருநாவுக்கரசரை மறப்பரா? மறக்கத்தான் அவர்க்கு இயலுமா?

தொண்டத்தொகை பாடிய நம்பி யாரூரர், தாமே தம்முடைய தண்டமிழால் கூருமல், நாவுக்கரசர் மொழிந்தருளிய நன்னெறியே பற்றி, ''சிவனெனும் ஓசை யல்ல தறையோர் உலகில் திருநின்ற செம்மை யுளதே'' என்பதே கொண்டு, ''திரு நின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக் கரையன்'' என்று குறித்தருளினர். நம்பியாண்டார் திருநாவுக்கரசரை,

> ''நற்றவன்; நல்லூர்ச் சிவன் திருப்
> பாதம் தன்சென்னி வைக்கப்
> பெற்றவன்; மற்று இப்பிறப்பற
> வீரட்டர் பெய்கழல் தாள்
> உற்றவன்; உற்ற விடம் அடை
> யார் இட ஒள்ளமு தாத்
> துற்றவன் ஆமூரில் நாவுக்
> கரசெனும் தூமணியே''

என்று பாராட்டி அவருடைய அருள் பெருகு திருப்பாட்டுக்களை வியந்து,

> ''சைவப் பெருநெறிக்கே
> அணியன நாவுக்கரையர்
> பிரான் தன் அருந்தமிழே''

எனச் சுருங்க வுரைத்து தெளிவித்தார்.

திருநாவுக்கரசுதேவர் திரு ஏகாதச மாலை என்ற நூல் ஒன்றைத் தனியாகப் பாடிப் பரவினர் நம்பியாண்டார் நம்பிகள். இதன் கண் உள்ளவை அந்தாதியாக அமைந்த பதினொரு பாட்டுக்கள். பதினொன்று என்பதை

வடமொழி ஏகாதசம் என்று கூறும்; பதினேராம் நாளை ஏகாதசி திதி (தியதி. தேதி) என்ருற்போலப் பதினெரு பாட்டுக்களால்ஆகிய பாமாலை ஏகாதசமாலை என்று பெயர் சூட்டப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாட்டும் இனிய சந்த உருவாகியிருப்பது படிப்பவர்க்கும் இசைப்பவர்க்கும் இசைக்கக்கேட்பவர்க்கும் சருக்கரைக் கட்டியால் இயன்ற பண்டத்தை வடித்த செந்தேனிற்பெய்து உண்பது போன்ற சுவை நிறைந்துளது. இன்றைய சைவத்துக்கு அருட்செல்வங்களாகிய திருமுறைகள் மிக்க பெருமை தருவன. ஆயினும், அரசியற் பதவிகட்கும் அதிகாரங்கட்கும், சாதி வேற்றுமைக்கும் மதிப்பளித்து ஆதரித்தொழுகும் ஆர்வ மிகுதியால், அவற்றிற்கே அடிமையாய்ச் சிறுமைப்பட்டுத் தேய்ந்து கெடும் பேதைமைப்பேய் சைவநெறியைப் பிடித்து வருத்திக்கொண்டிருக்கிறது. இதற்குக் காரணம் கண்ட சைவத்தம்பிரான் சுவாமிகள் ஒருவர், "புறச் சமயத்தவர் அடுத்துக் கெடுக்கும் சூழ்ச்சி மேற்கொண்டு இந்நாளில் சைவராய்ப் பிறந்து வளர்ந்து பேய்ச் செயலுக்கு வாய்ப்பும் வளமும் தருகின்றனர்" எனவுரைக்கின்ருர். உண்மையா? நிற்க.

வேற்றுச் சமயத்தில் வீறு பெற்று விளங்கினர் மருணீக்கியாரான தருமசேனர். சூலை நோய் உற்று வருந்திப் போந்தது கண்ட அவருடைய தமக்கையாரான திலகவதியாரால் அவர் திருவைந்தெழுத்து அறிந்து ஓதித் திருநீறணிந்து நோயும் சமண்சமயப் பிணிப்பும் நீங்கிச் சிவநெறிச் செல்வத் திருநாவுக்கரசரானுர் என்ற வரலாற்றை இந் நூலில் தான் முதன் முதலாக நம்பியாண்டார் குறிக்கின்ருர். "தமக்கையர் புணர்வினுல் உற்று உரைசெயக் குடர்சுலவு சூலைப்பிணி கெடுத்து ஒளிர் வெண்ணீறிட்டு அமண் அகற்றிய துணிவினுன்" என ஏகாதச மாலையின் முதற் பாட்டிலேயே மொழிகின்ருர்.

திருநாவுக்கரசர் பிறந்தவூர் நடுநாட்டுத் திருவாமூர் என்பதை "ஆமூரில் நாவுக்கரசு எனும் தூமணி" எனத் தொகுத்துச் சுட்டி இந்நூலின்கண்,"வண்ணத்திண் சிலைமாடம் திகழ் புகழ் ஆமூர் உறை திருநாவுக்கரசு" என்று விளக்குகின்ருர். இதனைக் காணும் சேக்கிழார் பெருமான், திருப்பாசுரங்கட்குத் தெளிவுரை காணும் சிவ ஞானச் செல்வராதலால், அறிவு நெறி (Scientific process) யிற் பொருள் காண்கின்ருர். "வண்ணத்திண் சிலை மாடம் திகழ் ஆமூர்" என உரைக்க வேண்டிய நம்பிகள்; புகழ் என்ற சொல்லை இடையிற் பெய்வது ஏன் என்று எண்ணி, 'ஆமூர் உறை திருநாவுக்கரசு"என்பதோடு இயைவதால், அஃது அவரது தந்தையின் பெயராதல் வேண்டுமெனத் துணிகின்ருர். தமது திருத்தொண்டர் புராணத்தில், "உளரானுர் திக்கு நிலவும் பெருமை திகழ வரும் புகழனுர்" எனப் பாடி மகிழ்கின்ருர்.

சமண்சமயத் தருமசேனராக விளங்கியவர், ஒருவர்க்கும் சொல்லாமல்,ஒரு கருத்தும் வெளிப்படுத்தாமல் திடீரெனச் சைவத் திருநாவுக்கரசரானது கண்ட சமண் பெருமக்களும் அவரைத் தழுவிப் புரக்கும் அரசும் சும்மா இராமல் கடிய செயல் பல மேற்கொண்டிருக்குமே என்ற ஐயம் யாவர் மனத்திலும் எழும். அது அகலும் பொருட்டு அவர்கள் வாதை பல செய்தனர். அவற்றை அதிகைப் பெருமான் திருவருளால் வென்றுயர்ந்தார் நாவரசர் என்பராய், "அதிகை மாநகர் மேவி அருளினுல் அமண் மூடரவர் செய் வாதை தீரும் அனகன்" என்று இயம்புகிருர். வாதைகளில் ஒன்ருன கல்லொடு பிணித்துக் கடலின் கண் தள்ளின செய்தி மனத்தில் மறக்கப்படாது நின்றதால் அதனைவிதந்து, "ஏற்றுணையின் மிதவாமல் கற்றுணையின் வரும் ஆதி" என மொழிகின்ருர். இக்குறிப்பின் தலைமை நலம் கண்டே நாவுக்கரசரை நினைப்பவர் அனைவரும் கன்மிதப்பிற் கரையேறிய இச்செயலை எடுத்துரைப்பதை இயல்பாகக் கொண்டு இன்றும் ஓதி வருகின்ருர்கள்.

திருநாவுக்கரசரானபின் அவர் செய்த செயல்வகைகளை எண்ணுகின்ருர் நம்முடைய நாரையூர் நம்பி. அவர் பாடிய திருப்பதியங்கள் நெஞ்சில் காட்சிதருகின்றன. ஏழ் எழுநூறு பதிகங்கள் என்ற எண்ணிக்கை முன் நிற்கிறது. இத்தனையும் பாடுதற்கு நாவரசு மேற்கொண்ட "கவியோகம்" அவர் கருத்தைப் பிணிக்கிறது. பரவுகின்ருர்; பணிகின்ருர்; "பதிகம் ஏழெழுநூறு பகரு மாகவியோகி பரசு நாவரசான பரமகாரண ஈசன்" எனப் பாடி மகிழ்கின்ருர். மேலும் காம மயக்கில் வீழ்ந்து கலக்குற்று வருந்தும் மனத்தை நோக்கி, "உள்நோய்க்கு மருந்து

இன்பம் தானே, இதற்கு மருந்து இதோ தருகின்றேன்; எங்கள் திருநாவுக்கரசு தந்தருளும் திருப்பதிகமே இன்பத் திரு மருந்து; வேறுமருந்து கிடையாது'' என்று கூறுகிருர். நன்மடவார்,

அழிந்த பொசியதிலே கிடந்து
இரவு பகல் நீ
அளைந்து அயரும் அது நீ
அறிந்திலை கொல், மனமே
கழிந்த கழிகிடு; நாள்
இணங்கு இதயம் நெகவே
கசிந்து இதயம் எழுநூறு
அரும்பதிய நிதியே
பொழிந்தருளு திருநாவின்
எங்கள் அரசினையே
புரிந்து நினை; இதுவே
மருந்து; பிறிது இலையே''

எனத் தெருட்டு கின்ருர்.

இந்த மயக்கம் மண்ணினிற் பிறந்தார் அனைவரையும் ஒழியாது வருத்துவதா யிற்றே; நாவுக்கரசர் என்னுனர்? எனச் சிலர் வினவுகின்ருர்கள். ''காம வெகுளி மயக் கங்கள் முற்றவும் கெடும் குற்றங்கள் அல்லவே'' எனச் சாத்திரங்களைக் காட்டு கின்றனர். ஆம். சாத்திரங்கள் கூறுவன உண்மைதான்; எங்கள் நாவுக்கரசை அவை அடர்த்தழிக்க முயன்றன; கவியோகம் இல்லாத போது, அவர் உழவாரப் படை யோகம் கொண்டார்; அதனுல் பொல்லாத அம்மயக்கம் அவர் முன் நில்லா தாயிற்று; அவர் திருவுள்ளத்தையும் வெல்லாதாயிற்று. அதனை,

தெளிதேன் ஒத்த இனிய சொல்
மடவார் ஊர்பசிமுதல்
வருவானத்து அரிவையர்
நடமாடிச் சில சில
வசியாகச் சொலும் அவை
துகளாகக் கருதி, மெய்
உருஞானத் திரள் மனம்
உருகா நெக்கு அமுது
உழவராப் படை கையில் ''

உடையனுயினுன் என உரைக்கிருர். கர்ம வுணர்ச்சி கருத்தை ஈர்க்கும் போது கைத் தொழில் வகையில் அதனைச் செலுத்தும் என இக்காலக் கருத்தடை விஞ்ஞானக கூறுவதை நினைந்து பார்மின்; திருமுறை களின்பெருமை தெற்றென விளங்கும்.

இந்நிலையில் பதியம் ஏழெழுநூறு பகரும் பரம கவியோகத்தில் நம்பிகள் தமது ஆராய்ச்சி வழிபாட்டைச் செலுத்துகின்ருர். நாற்பத்தொன்பது நூறு பதியங்களில் நாவுக்கரசு என்ன நவில்கின்ருர் என எழும் அவாய்நிலைக்குத் தெளிவு கூறும் நம்பிகள், மாயையாலாகிய இவ்வுலகு, உயிர்களை மயக்குவதும் செய்வது; அதன் பொய்மயக் கத்தைப் போக்குவன வாய்மைப் பொருள் கள்; அவற்றை மிகுதியாகத் தருவன நாவ ரசின் நற்பதியங்கள்;

''உலகின் மாயப் பிறவியைத் தரும்
உணர்விலா அப்பெருமயக்கினை
ஒழிய, வாய்மைக் கவிதை''

என்றும், அவற்றின் வழியாகச் சிவஞான மாகிய கடலின்கண் உள்ள அமுதமாகிய சிவ வொளியில் ஆன்மாக்கள் புகுந்து உய்தி பெறுதற்கு இன்றியமையாத திருவருள் நல் கப்படுகிறது என்று விளக்குவாராய்,

''வாய்மைக் கவிதையிற் பல
உபரியாகப் பொருள் பரப்பிய
அலகில் ஞானக் கடலிடைப்படும்
அமுத யோகச் சிவவொளிப் புக
அடியரேமக்கு அருளினைச் செயும்''

என்றும் பரிவோடு உரைக்கின்ருர். முடிவில் இவர் திருப்பதியங்களை ஓதுவார் பெறும் பயனையும் நாட்டுமக்கள் பயன்பட வாழ்ந்த நாவுக்கரசர்க்கு நாம் செய்யலாகும் கடமை களையும் இவ்வேகாதச மாலையில் இனிமை கமழ எடுத்து இயம்புகின்ருர்,

திருநாவுக்கரசரைச் சிவகுருவாகவும், அவருடைய திருப்பதியங்களைச் சிவஞான வுரையாகவும் கொண்டு வாழ்பவர், பிறவி யறுத்துப் பேரின்பப் பெருவாழ்வு எய்துவர். இதனை,

''உழவாரப் படை கையில்
உடையான் வைத்தன தமிழ்
குருவாகக் கொடு சிவன்
அடிசூடத் திரிபவர்
குறுகார் புக்கு இடர்படு
குடர் யோனிக் குழியிலே''

எனப் பாடுகின்ருர்.

அப்பெருமானை விரும்புபவர், அவரது "திருநாவுக்கரசு" என்ற திருப் பெயரையே மந்திரமாகக்கொண்டு ஓதுதல் வேண்டும். அவ்வாறு ஓதி முழுப் பயன்பெற்ற வேதிய ரான அப்பூதியடிகளின் நலங்களை,

"தனமா வதுதிரு நாவுக் கரசின்
சரணம் என்று
மணமார் புனற்பந்தர் வாழ்த்தி வைத்
தாங்கவன் வண்தமிழ்க்கே
இனமாத் தனது பெயரிடப்
பெற்றவன்; எங்கள் பிரான்;
அனம் ஆர் வயல் திங்களூரினில்
வேதியன் அப்பூதியே"

என்று ஓதினுராதலால், இங்கே அப்பூதியின் வாழ்வைக் கருத்தில் நினைவுகூர வைத்து,

"இலை மாட்டு என்று இடர்பரியார்;
இந்திரனே ஒத்து உறுகுறைவற்றுலும்
நிலையாது இச்செல்வம் எனவே கருதுவர்;
நீள்சன்மக் கடலிடையிற் புக்கு
அலையார்; சென்று அரன்நெறி யாகும்
கரை
அண்ணப் பெறுவர்கள், வண்ணத்திண்
சிலைமாடம் திகழ் புகழ் ஆமூர் உறை
திருநாவுக்கரசு என்போரே"

என்று அறுதியாக அறிவிக்கிருர். அவர் திருவடிகளைப் பணிபவர்,

"நிதியராகுவர்; சீர்மையுடையராகுவர்;
வாய்மை
நெறியராகுவர்; பாவம் வெறியராகுவர்
சால
மதிய ராகுவர்: ஈசன் அடியராகுவர்;
வானம்
உடையராகுவர், பாரில் மனிதரானவர்
தாமே"

என்றும் இசைத்தருளுகின்றுர்.

இத்தகைய பெருநலம் அருளும் பெருமானுகிய திருநாவுக்கரசரின் திருவடிகள் நமக்கெல்லாம் உய்தி தரும் பெருந்துணை யாவது காண்கின்ற நாம், அது வல்லது பற்று மற்று இல்லை என்று கொண்டு வாழ்வோமாக என அறிவுறுத்துகிற நாரையூர் நம்பிகள்,

"நன்றும் ஆதரம் நாவுக்கரைசு அடி
நளினம் வைத்து உயின் அல்லால்
ஒன்றும் ஆவது கண்டிலம்; உபாயம்
உள்ளன வேண்டேமால்"

என்றும் ஆதியும் அந்தமும் இல்லதோர் இக பரத்து இடைப்பட்டுப் பொன்றுவார் புகும் சூழலில் புகேம்; புகில் பொறியில் ஐம்புல னேடே" எனத் திட்டவட்டமாக உரைத்துத் தமது திருவேகாதசத்தைத் தேனெழுக்குப் போலப்பாடி முடிக்கிருர். வாழ்க திருநாவுக்கரசர் வான்கழல்கள்.



# அப்பரும் சேக்கிழாரும்

தவத்திரு. குன்றக்குடி அடிகளார்

சேக்கிழார் அடிகள் பக்திச்சுவை நனி சொட்டச்சொட்டக் காவியம் பாடியவர். ஒரு வரலாற்றுக் காவியம் எழுதுவது எளி தன்று. அதிலும், உணர்ச்சியில் இம்மியள வும் குறையாமல் வடித்துத் தருவதென்பது அரியபணி. உளம்நிறைந்த பக்திஅனுபவத் திலும் அடியார்கள் மாட்சியில் மனங்கலந்த ஈடுபாடு கொண்டமையாலுமே சேக்கிழார் பெருமானுல் அதைச்செய்ய முடிந்தது. சேக்கிழார் பெரியபுராணத்தை இயற் றித் தராதிருப்பாரானுல் தூய சிவநெறி யின் வரலாறு கிடைக்காமலேபோயிருக்கும்.

சிவநெறி வாழ்க்கையோடியைந்தது என் னும் பேருண்மையை உலகுக்கு உணர்த்து வதற்குப் பெரியபுராணமே நமக்குரிய சிறந்த சாதனமாகத் திகழ்கிறது.

அப்பரடிகள் வரலாற்றை அருந்தமிழ்ச் சேக்கிழார் அருள் உணர்வு பொங்கித் ததும்பி வழிய எடுத்து இயம்பும் முறை, எண்ணத்தக்கது.

திருத்தொண்டற்கொரு தலைவராக வந்த வதரித்த திருநாவுக்கரசரைத் தொண்டின் திருவுருவாகவே சேக்கிழார் பெருமான் படைத்துக் காட்டுகிருர்.

சேக்கிழார், அப்பரடிகள் காலத்திற்கு மிகமிகப் பிந்தியவர் ஆயினும், அப்பரடிகளை நினைந்து நினைந்து, தமது உள்ளக்கிழியில் உருஎழுதி ஓவாத்தமிழ் தந்துள்ள அருமை நினைந்து நினைந்து இன்புறத்தக்கது. அப்பர டிகளின் திருமேனி, திருவுள்ளம் ஆகியவற் றைப்படம் பிடித்துக் காட்டியிருக்கிருர். அப்பரடிகள், திருநீறணிந்து மகிழ்வதைக் கடமையாகக் கொண்டவர்; பழுதிலாத்துற வாலும், சீலம்நிறை வாழ்வாலும், தவத்தின் வலிமையாலும், திருவருள் நினைவாலும், பொன்னெளிர்மேனி பெற்றவர். அந்தப் பொன்மேனியில் திருநீறு மண்டி மணம் கமழ்கிறது.

இறைவனின் திருவடிகளை அப்பரடிகள் தம் நெஞ்சு அண்ணித்துத் தொட்டுத் தடவிக் கொண்டிருக்கிறது., அப்பரடிகள் நெஞ்சத்தைத் திருவடிகள் திருக்கோயில் கொண்டருளின. அப்பரடிகளின் நெஞ்சம் ஒன்றையே நினைக்கிறது. மறந்தும் பிறி தொன்றை நினைப்பதில்லை. அதுவே, எந்தை ஈசன் திருவடிகள்! நெஞ்சத்தில் திருவடியை நினைந்து நினைந்து இன்ப அன்பினில் திளைத்து மகிழ்வதால் கண்களில் கண்ணீர் மல்குகிறது. அன்பின் பெருக்கில் ஊற் றெடுப்பது கண்ணீரே! கண்கள் காதற் பெருக்கில் கண்ணீரை மழையெனப் பொழி கின்றன!

அப்பரடிகளின் செந்நா சிவத்தையே பாடிய செந்நா. அவர் வாயில் உதித்த சொற்கள் செஞ்சொற்கள். சிவத்தின் செவிக்கே அமுதமெனத் திகழ்ந்த சொற் கள். நன்றுடையானே நாவுக்கரசரெனப் பெயர்சூட்டிய பேரரசு, அப்பரடிகள் திரு வாயில் ஊற்றெடுத்த திருத்தமிழைச் செவி மடுப்பதற்கென்றே எம்பெருமானும் கயி லையை மாற்றிக்கொண்டார்! இத்தகைய இனிய இயல்புகளையுடைய அப்பரடிகள் புலன்கள்மீது தனியரசு செலுத் திய அரசு எனவும், நற்றமிழ்க்கோர் நாவுக் கரசெனவும், சிவநெறிக்கோர் அருளரசு எனவும் விளங்கியமையை சேக்கிழார் பெருமான் என்பு நெக்குருகப் பாடுகிருர்.

'தூயவெண் ணீறு
துதைந்தபொன் மேனியும்
தாழ்வடமும்
நாயகன் சேவடி
தைவரு சிந்தையும்
நைந்துருகிப்
பாய்வது போல
அன்புநீர் பொழிகண்ணும்
பதிகச்செஞ் சொல்
மேயசெவ் வாயு
முடையார் புகுந்தனர்
வீதி யுள்ளே"

என்பது பாடல்.

# அப்பரும் பட்டினத்தடிகளும்

திரு. பூ. ஆலாலசுந்தரம் செட்டியார், எம் ஏ . தாம்பரம்

அப்பர் அடிகளும் பட்டினத்தடிகளும் யான் என்ற அகப்பற்றும் எனது என்ற புறப்பற்றும் நீக்கித் தூய துறவு வாழ்க்கையினை மேற்கொண்டவராவர். அன்னார் வாக்கிலும் போக்கிலும் பல ஒப்புடைய கருத்துக்களையும் உவமை நலங்களையும் ஒருமிக்கக் காணலாம். அப்பர் யாக்கை நிலையாமையினை நமக்குநன்கு எடுத்துக்காட்டியுள்ளார். நமது உடல், பொய்யுடல், புலாலுடல், புழுக்கூடு எனப் பழிக்கப்படுகின்றது. நமது யாக்கையின் இழிவைப் பட்டினத் தடிகள் தம் அகவற் பாக்கள் மூலம் நன்கு விளக்கியுள்ளார். அப்பர் அடிகள் திருக்கடவூர் இறைவனை நோக்கிக் "கடவூர் வீரட்டனீரே! யான் பழிக்கப்படும் புலால் உடம்பைப் பெற்றுள்ளேன்; என் காலத்தை யெல்லாம் வீணாக்கி அருள் நெறியில் நில்லாமல் மற நெறியில் வாழ்கின்றேன். இது மாயவாழ்க்கை என்பதேயும் என்னால் அறியக்கூட வில்லை. யான் ஐம்புலன்களான் அலைக்கப் பட்டுக் கழியில் அலையும் தோணிபோன்றேன்; கரையேறுமலும் கடலிடை யாடாமலும் இருக்குந் தோணிபோல உடலிடை இனிது நில்லாமலும் உன் திருவருள் வெள்ளத்தில் முழுகாமலும் உள்ளேன்" எனப் பாடியுள்ளதைக் கீழ்க்காணும் திருநேரிசை விளக்குதல் காண்க:

"பழியுடை யாக்கைதன் னில் பாழுக்கே நீரிறைத்து
வழியிடை வாழ மாட்டேன் மாயமுந் தெளியகில்லேன்
அழிவுடைத் தாய வாழ்க்கை ஐவரால் அலைக்கப்பட்டுக்
கழியிடைத் தோணிபோன்றேன் கடவூர் வீரட்டனீரே!"

இத்திருப்பாடல் மூலம் யாக்கை நிலையாமையை நமக்குத் தெரிவித்துள்ளார் திருநாவுக்கரசர்.

செல்வநிலையாமையைப் பற்றியும் அப்பர் பெருமான் நமக்கு அறிவுறுத்தியுள்ளார். உலகத்திலுள்ள மக்கள் பலர், பல பொய்களைப் பேசி நல்வழியின்றித் தீயவழியில் பொருளை ஈட்டுகின்றனர். அத்தகைய மக்களை நோக்கி அப்பர் "நாணமற்றவர்களே! பொய்பேசிப் பொருளைத்தேடுகின்றீர். அதனைக் கொண்டு அறம் செய்யாமல் பொருளைக்காத்துக் கொண்டு வாழ்கின்றீர்கள். ஒருநாள் திடீரென்று உங்கள் உயிர் உடம்பைவிட்டுப் போய்விடும். அவ்வாறு போவதற்கு முன்பே திருக்காட்டுப்பள்ளியுள் திருக் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள இறைவனை நீங்கள் வணங்கி வாழ்த்தி அவன் திருவடியடைய முயலுங்கள்." என அறிவுறுத்தியுள்ளார். இதனைக் கீழ்க்காணும் திருக்குறுந்தொகை விளக்குதல் காண்க.

"மாட்டைத் தேடி மகிழ்ந்துநீர் நும்முளே
நாட்டுப் பொய்யெலாம் பேசிடும் நாணிலீர்
கூட்டை விட்டுயிர் போவதன் முன்னமே
காட்டுப் பள்ளியு ளான்கழல் சேர்மினே."

(திருக்காட்டுப்பள்ளி - திருக்குறுந்தொகை)

திருநாவுக்கரசர், அகப்பற்று, புறப்பற்று முதலியவற்றுள் ஆழ்ந்துகிடக்கும் தம் நெஞ்சை நோக்கி "மனமே! மனைவி, மக்கள் தந்தை தாய் சுற்றத்தார் எனப்படும் இவர்களே நிந்தியமானவர் எனக் கொண்டு நீ பாசக்கடலில் வீழ்ந்து அழுந்தித் துன்புறுகின்றாய். அத்துன்பத்தினின்று நீங்கி நீ இன்பம் பெற வேண்டுமாகில் திருக் கடல்நாகைக் காரோணத்து இறைவனை என்றும் நினைக்கவேண்டும். தாய்தந்தை முதலியோரிடத்து அன்பு செலுத்துவதில் தவறில்லை. ஆனால் அவர்களே அழியாப் பொருள் எனக் கொண்டு அவர்களிடத்தே பாசத்தை வைத்து அழியாப் பொருளாகிய இறைவனை நினையாமல் இருத்தல் தவறாகும்" எனத் தம்

மனத்திற்கு அறிவுரை வழங்கினர் நாவுக்கரசர். இக்கருத்தினைக் கீழ்க்காணும் திருநேரிசையில் காண்க.

''மனைவிதாய் தந்தைமக்கள் மற்றுள
சுற்றமென்னும்
வினையுளே விருந்தருந்தி வேதனைக் கிடமாகாதே
கனையுமா கடல்சூழ்நாகை மன்னுகாரோணத்தானை
நினையுமாவல்லீராகி லுய்யலா
நெஞ்சினீரே''
(திருநாகைக் காரோணம்–திருநேரிசை)

திருநாவுக்கரசர் திருவொற்றியூர் இறைவனை வேண்டுவது ஈண்டுச் சிந்திக்கத்தக்கது. திருநாவுக்கரசர் இறைவனை நோக்கி ''திருவொற்றியூருடைய கோவே! யான் மனம் என்ற மாக்கலம் பற்றி மதியாகிய கோலை யூன்றி, சினம்என்ற சரக்கை யேற்றிக் கடலில் செல்லும் போது மதன் (கர்வம்) என்ற பாறை தாக்கி அழிவேன்; அப்போது உண்மை அறிய இயலாமல் வருந்துவேன். அதுபோதுயான் தங்களை நினைக்கும்படியான உணர்வைத் தாங்கள் எனக்கு அளிக்கவேண்டுகின்றேன்'' என முறையிட்டார். இதனைத் திருவொற்றியூர்த் திருநேரிசை விளக்குதல் காண்க.

மனமெனுந் தோணி பற்றி மதியெனுங்
கோலை யூன்றிச்
சினமெனுஞ் சரக்கையேற்றிச்
செறி கடலோடும்போது
மத னெனும்பாறை தாக்கிமறியும் போ தறிய
வொண்ணாது
உனையுனு முணர் வைநல்காயொற்றி
யூருடையகோவே''
(திருவொற்றியூர் ; திருநேரிசை)

இத்திருப்பாட்டில் மூன்றும் வரியிலுள்ள மதன் என்ற சொல்லுக்குப் பதில் 'மனன்' என்ற பாடமும் உண்டு என்பர் சிலர். அவர் மனன் என்பதற்கு மன்மதன் எனப் பொருள் கூறுவர். எனவே இதற்குக் காமம் என்ற பாறை தாக்கியது எனப் பொருள் கொள்ள வேண்டும்.

இதுவரை ஐம்புலன் ஆசை, மக்கள் பொய்பேசுதல், செல்வநிலையாமை, ஆக்க நிலையாமை குடும்பம் என்ற பாசம், வாழ்க்கையாகிய மாயை என்பன பற்றித்திருநாவுக்கரசர் கூறியுள்ளதைக் கண்டோம். இனி இவைகள் பற்றிப் பட்டினத்தார் கூறுவதைக் காண்போம்.

பட்டினத்தடிகள் முற்றும் துறந்த தூய துறவியாவர். அவரது துறவின் பெருமையை விளக்க வந்த தாயுமானவர்,

''பாரனைத்தும் பொய் யெனவே
பட்டினத்துப் பிள்ளையைப்போல்
ஆரும் துறக்கை யரிதரிது''

எனப் பாராட்டியுள்ளார். பட்டினத்தடிகள் பாடிய பாக்களுள், கோயில் நான் மணிமாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக் கோவை, திருவேகம்பமுடையார்திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது என்ற ஐந்தும் சைவத் திருமுறைகளுள் பதினோராம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளன. இவற்றுள் கோயில் நான்மணி மாலையில் காணப்படும் ஒரு திருப்பாடலை ஈண்டு நோக்குவோம்.

பட்டினத்தடிகள் தாம் உலக வாழ்க்கையில் சிக்குண்டு, துன்புறும்போது இறைவன் தமது திருவருளால் தம்மை ஆட்கொண்டு அவரது திருவடியாகிய கரையில் சேர்க்க வேண்டும் என்ற கருத்தினைப் பல உவமைகள் உருவகங்கள் வாயிலாக அப்பாடலில் நன்கு விளக்கியுள்ளார். அவர் தில்லையிலுள்ள ஸ்ரீ நடராஜப் பெருமானை நோக்கி ''தில்லைக் காவல! அறிவில் ஒழுக்கம், பொய், பிணி, துன்பம், என்ற இவ்விதமான பொருள்களை ஏற்றிக் கொண்டு, தீவினை என்கிற மாலுமி அம்மரக்கலத்தை அது நிலைத்த நிலையினின்றும் தாயின் கருப்பம் என்கின்ற பட்டினத்தின் ஒப்பற்ற துறைமுகத்தை நோக்கிச் செலுத்த, அந்த வெள்ளத்தில் செல்லும்போது, ஐப்புலன்கள் என்ற சுறுமீன்கள் சுழன்று (அம்மரக்கலத்தைக் கால நோக்கித் தீங்கு செய்யப்) பின் பற்ற, பிறப்பு என்ற பெருங்கடலுள் சென்று, துன்பம் என்ற அலைகளால் நிலை பெயர்ந்து வருந்தி, குடும்பம் என்னும் பெரிய மலையில் மோதப்பட்டு, மனவடக்கம் என்ற பாய்மரம் முரிந்து, அறிவு என்ற பாய்கிழிந்து, தீமைகள் நெருங்கிய மாயம் என்ற பெயர் பெற்ற உடல் என்கின்ற மரக்கலம் கலங்கி வீழ்ந்து கெடுவதற்கு முன்னம் தேவரீருடைய திருவருள் என்னும்

கயிற்றல் சேர்த்துத் திருவடியாகிய கரையினை அடையுமாறு கருணைபுரிய வேண்டுகின்றேன்'' எனவேண்டிக் கொண்டார். இனி அத்திருப்பாடலை நோக்குவோம்,

''அறிவில் ஒழுக்கமும் பிறிதுபடு பொய்யும்
கடும்பிணித் தொகையும் இடும்பை
ஈட்டமும்
இனையன பலசரக் கேற்றி வினையெனும்
தொன்மீ காமன் உய்ப்ப அந்நிலைக்
கருவெனும் நெடுநகர் ஒருதுறை
நீத்தத்துப்
புலனெனும் கோண்மீன் அலமந்து
தொடரப்
பிறப்பெனும் பெருங்கடல் உறப்புகுந்
தலைக்கும்
துயர்த்திரை உவட்டில் பெயர்ப்பிடம்
அயர்த்துக்
குடும்பம் என்னும் நெடுங்கல் வீழ்த்து
நிறையெனும் கூம்புமுரிந்து குறையா
உணர்வெனும் நெடும்பாய் கீறிப் புணரும்
மாயப் பெயர்ப்படு காயச் சிறைக்கலம்
கலங்குபு கவிழா முன்னம் அலங்கல்
மதியுடன் அணிந்த பொதியவிழ்ச்
சடிலத்துப்
பையர வணிந்த தெய்வ நாயக!
தொல்லெயில் உடுத்த தில்லை காவல!
வம்பலர் தும்பை அம்பல வாண! நின்
அருளெனும் நலத்தார் பூட்டித்
திருவடி நெடுங்கரை சேர்த்துமா
செய்யே.''

(கோயில் நான்மணிமாலை—16)

இதே கருத்தினைத் திருவாசகத்தைத் திருவாய் மலர்ந்தருளிய மணிவாசகப்பெருந்தகையாரும் பாடியுள்ளது ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. மாணிக்கவாசகர் இறைவனை நோக்கி ''முழுமுதற் பொருளே! யான் பிறவியாகிய பெருங்கடலில் வீழ்ந்து, துன்ப அலைகளால் தாக்கப்பட்டு ஆதரவு ஏதுமின்றி, பெண்கள் என்று சொல்லப்படும்புயற் காற்றால் அலைக்கப்பட்டு, காமம் என்ற சுரு மீனின் வாயில் அகப்பட்டு இனி உய்யும் வகையாதோ என எண்ணிக் கவலை கொண்டு பின் திருவைந் தெழுத்தாகிய தெப்பத்தைப் பிடித்துக்கொண்டு கரைசேர இயலாமல் தவிக்க, மூர்க்ககுணமுடைய எனக்கும் முத்திக் கரையைக்காட்டி ஆட் கொண்டருளினாய்'' எனப் பாடியுள்ளார்.

''தனியனேன் பெரும்பிறவிப் பௌவத்(து)
எவ்வத்
தடந்திரையால் எற்றுண்டு பற்(று)
ஒன்றின்றிக்
கனியைநேர் துவர்வாயார் என்னுங்
காலாற்
கலக்குண்டு காமவான் சுறவின்
வாய்ப்பட்(டு)
இனியென்னே உய்யுமா றென்றென்
றெண்ணி
அஞ்செழுத்தின் புணைபிடித்துக்
கிடக்கின்றேனை
முனைவனே முதலந்த மில்லா மல்லற்
கரைகாட்டி ஆட்கொண்டாய்
மூர்க்க னேற்கே''

(திருச்சதகம்—27)

அப்பர் அடிகளும் பட்டினத்தடிகளும் காட்டிச்சென்ற அறநெறிகளை நாம் கடைப் பிடித்து யாக்கைநிலையாமை, செல்வநிலையாமை முதலிய நிலையாமைகளை உணர்ந்து அகப்பற்றினையும் புறப்பற்றினையும் போக்கிப் பற்றற்றான் பற்றினைப் பற்றிப் பிறந்ததன் பயனை அடைவோமாக திருவருள் கூட்டுவதாக.



# அப்பரும் அருணகிரியாரும்

திரு. பாலூர். கண்ணப்ப முதலியார், எம் ஏ., பி.ஓ எல்., சென்னை.

மலர்தலை உலகிற்கு மாபெருந் திலகமாய் விளங்குவது இந்தியா. இந்தியாவில் பல சமயங்கள் உண்டு. அவற்றுள் வைதீக இந்துக்களின் சமயங்களாகத் திகழ்பவை ஆறு. அவையே சைவம், சாக்தம், கணுபத்தியம், கௌமாரம், வைணவம், சௌமாரம் என்பன. சைவம் என்பது சிவபெருமானை முழு முதற் பரம் பொருளாகக்கொண்டு வழிபடும் சமயம். சத்தியை (உமாதேவியாரை)த்தம் வழிபடும் தெய்வமாகக் கொண்டிருப்பது சாக்தம். இவ்வாறே கணபதியைக்கடவுளாகவும், முருகப்பெருமானை இறைவனுகவும், திருமாலைத் தெய்வமாகவும், சூரியனைத் தம் தேவனுகவும் கொண்டு வழிபட்டு வரும் சமயங்கள் முறையே, கணுபத்தியம், கௌமாரம், வைணவம், சௌமாரம் எனப்படும். இச்சமய வழிபாட்டினர் வெவ்வேறு தெய்வங்களை வழிபட்டு வந்தாலும், அவ்வழிபாடுகள் எல்லாம் உலகமுழுமுதற் பொருளாம் முக்கண் மூர்த்தியையேசாரும். இஃது உண்மை! வெறும் புகழ்ச்சி அன்று. இதனை உறுதிப்படுத்தவே நம் அப்பர் பெருமானுர்,

> 'விரிவிலா அறிவி னுர்கள் வேறெரு
> சமயம் செய்து
> எரிவினுல் சொன்னு ரேனும் எம்பிராற்
> கேற்ற தாகும்'

என்றும்,

> 'ஆர்ஒருவர் உள்குவார் உள்ளத்
> துள்ளே
> அவ்வுருவாய் நிற்கின்ற அருளும்
> தோன்றும்'

என்றும், அருள் நந்தி சிவாசாரியார்,

> 'யாதொரு தெய்வம் கொண்டீர்
> அத்தெய்வ மாகி ஆங்கே
> மாதொரு பாக னுர்தாம் வருவர் '

என்றும் அறிவித்திருப்பதைக் காண்க.

இனி அப்பர் பெருமானு ரையும். அருணகிரியாரையும் இணைத்துச் சிறிதுஆய்வோமாக.

வாகீசப் பெருந்தகையார் சிவபெருமான் ஒருவனையே வழிபடும் நெறியில் நின்றவர். அருணகிரியார் சேயோன் ஒருவனையே புகழ்ந்து போற்றும் போக்கில் பொலிந்தவர். இங்ஙனம் அருணகிரியார் கந்தவேளையே கருதும் கசிந்த மனத்தவர் என்றுலும் தம் முன்னேர்களாகிய சைவசமய ஆசிரியர்களை ஆங்காங்குத் தம் திருவாக்குகளில் புகழ்ந்து போற்றுமல் சென்றிலர். இதனை அவர்தம் நூல்களில் சிறக்கக் காணலாம். ஆனல் ஒன்று கூற விரும்புகிறேன். அதாவது அருணகிரியார் தம் திருப்புகழ், திருவகுப்பு, கந்தர்அந்தாதி, கந்தர்அனுபூதி, கந்தர் அலங்காரம் ஆகிய இந்தநூல்களில் தாண்டக வேந்தரை யாண்டுமே கூறிற்றிலர். ஆளுடைய பிள்ளையாரையும், ஆளுடைய நம்பிகளையும், ஆளுடைய அடிகளாரையும் குறிப்பிட்ட நம் அருணகிரியார், ஏனே அரசுகளைத் தம்திருவாக்குகளில் குறித்திலர்! இது விந்தையாக இருக்கிறது! ஆனல் திருநாவுக்கரசரின் மாண்புக்குக்காரணமாய் இருந்த அப்பரின் தமக்கையார் திலகவதியாரை மட்டும் தம் நூலில் குறிப்பிட்டுள்ளனர். இதனைத் திருவாமூர்த் திருத்தலத் திருப்புகழில் வரும்,

> 'மாது புகழை வளர்க்கும் திருவாமூர்
> வாழும் மயிலில் இருக்கும் குமரேசா'

வரிகளைக் கொண்டு தெளியலாம்.

அருணகிரியார் சொல்வேந்தரைத் தம் நூல்களில் குறிப்பிட்டிலர் என்றுலும் அப்பர் திருவாக்குகளை நன்கு பயின்று, அந்தப் போக்கினைத் தம் நூல்களில் புகுத்தியுள்ளார் என்பதை எவரும் மறுக்கவோ, மறைக்கவோ ஒண்ணுது. இந்த உண்மையினைப்

பின்வரும் குறிப்புகளின் மூலம் உறுதிப் படுத்தலாம்.

அப்பர்பெருமானுர் தமக்கே உரிமைத் தான திருத்தாண்டகத்தில் இறைவன் உலகப் பொருள்களிற் கலந்திருந்தும், தனித்துத் துலங்கும் அவன் தன் இறைமைப் பண்பை,

'மண்ணல்லே விண்ணல்லே வலயம்
அல்லே
மலே அல்லே கடல் அல்லே வாயு அல்லே
எண்ணல்லே எழுத்தல்லே எரியும் அல்லே
இரவல்லே பகல் அல்லே யாவும் அல்லே
பெண்ணல்லே ஆணல்லே பேடும் அல்லே
பிறிதல்லே ஆனுலும் பெரியாய் நீயே
[1]உண்ணல்லே நல்லார்க்கும் தீயை அல்லே
உணர்வரிய ஒற்றியூர் உடையகோவே'[2]

என்று பாடியுள்ளார். இதனை அப்படியே அடி ஒற்றி அருணகிரியார்,

'தேனென்று பாகென் றுவமிக்
கொணுமொழித் தெய்வவள்ளி
கோனன் றெனக்கு பதேசித்த
தொன்றுண்டு கூற அற்ரு
வானன்று காலன்று தீயன்று நீரன்று
மண்ணுமன்று
தானன்று நானன் றசரீரி அன்று சரீரி
அன்றே'[3]

என்று பாடி மகிழ்ந்திருத்தலேக் காண்க.

கந்தரலங்காரத்தில் மேலும் பல பாடல்கள் திருநாவுக்கரசரின் சொல்லேயும் பொருளேயும் தழுவிச் செல்லும் முறையில் அமைந்துள்ளன.

'தந்தைக்கு முன்னம் தனிஞான
வாளொன்று சாதித்தருள்
கந்தச் சுவாமி எனேத்தேற்
றியபின்னர்க் காலன்வெம்பி
வந்திப் பொழுதென்னே என்செய்ய
லாம்சத்தி வாளொன்றினுல்
சிந்தத் துணிப்பன் தணிப்பருங்
கோபத்திரி சூலத்தையே'

என்பது,

'நாமார்க்கும் குடிஅல்லோம் நமனே
அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலே
இல்லோம்
ஏமாப்போம் பிணிஅறியோம் பணிவோம்
அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லே
தாமார்க்கும் குடியல்லாத் தன்மை யான
சங்கரன்நற் சங்கவெண் குழையோர்
காதில்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்சே வடியிணையே
குறுகி னேமே'

என்னும் திருத்தாண்டகத்தை ஒட்டியது என்பதை அறிக.

வாகீசர், திருவள்ளுவர் கூறியுள்ள,

'கோளில் பொறியில் குணமிலவே
எண்குணத்தான்
தாளே வணங்காத் தலே'

என்னும் திருக்குறளுக்குப் பெருவிளக்கம் போலத் திருவங்கமாலே என்னும் தலேப்பில் பலபாடல்களேப் பாடியுள்ளார். அவற்றுள் சிலபாடல்கள்,

'தலேயே நீவணங்காய்—தலே
மாலே தலேக்கணிந்து
தலேயா லேபலிதேடும் தலேவனேத்
தலேயே நீவணங்காய்'

கண்காள் காண்மின்களோ—கடல்
நஞ்சுண்ட கண்டன் தன்னே
எண்தோள் வீசிநின் ருடும் பிரான்
தன்னேக்
கண்காள் காண்மின்களே'

'கைகாள் கூப்பித் தொழீர்-கடி
மாமலர் தூவி நின்று
பைவாய் பாம்பரை ஆர்த்த பரமனேக்
கைகாள் கூப்பித் தொழீர்'

'வாயே வாழ்த்து கண்டாய்-மத
யானே உரிபோர்த்துப்
பேய்வாழ் காட்டகத் தாடும்பி ரான்தன்னே
வாயே வாழ்த்து கண்டாய்'

என்பன.

இப்பாடல்களின் கருத்தை உள்ளத்தில் கொண்டே அருணகிரியார் எதிர்மறை முகத்தால்,

'கோடாத வேதனுக் கியான்செய்த குற்ற
மென்குன் றெறிந்த
தாடாள னேதென் தணிகைக் குமரநின்
தண்டையம்தாள்

---

[1] உள்+நல்லே. [2] திருவொற்றியூர். [3] கந்தர் அலங்காரம்.

ஆடாத சென்னியும் நாடாத கண்ணும்
தொழாத கையும்
பாடாத நாவும் எனக்கே தெரிந்து படைத்
தனனே'

என்று பாடி இன்புறுகின்ருர்.

'ஒலேயும் தூதரும் கண்டுதிண் டாடல்
ஒழித்தெனக்குக்
காலேயும் மாலேயும் முன்னிற்கு மேகந்த
வேள்மருங்கில்
சேலேயும் கட்டிய சீராவும் கையில் சிவந்த
செச்சை
மாலேயும் சேவற் பதாகையும் தோகையும்
வாகையுமே'

என்னும் அலங்காரச் செய்யுளுக்கு ஆதாரம்,

வடிஏறும் திரிசூலம் தோன்றும் தோன்றும்
வளர்சடை மேல் இளமதியம் தோன்
றும் தோன்றும்
கடிஏறு கமழ்கொன்றைக் கண்ணி
தோன்றும்
காதில்வெண் குழைதோடு கலந்து
தோன்றும்
இடிஏறு களிற்றுரிவைப் போர்வை தோன்
றும்
எழில்திகழும் திருமுடியும் இலங்கித்
தோன்றும்
பொடிஏறு திருமேனி பொலிந்து தோன்
றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித
ஞர்க்கே'

என்னும் திருத்தாண்டகம் என்பதில் ஐயம் எழ இடனுண்டா?

அருணகிரியார் அப்பர் பெருமானின் அடிஒற்றிச் சென்றவர் என்பதை முன்னர்க் கண்டோம். அதனுல்தான் போலும் சிவ பெருமான் திருநாவுக்கரசருக்குப் பற்பல முறைகளில் திருவருள் சுரந்தமைபோல முருகப் பெருமானும் அருணகிரியாளரையும் பற்பல வழிகளில் ஆட்கொண்டுள்ளனர். இதனை இவ்விரு பேரருளாளர்களின் திரு வாய் மொழிகளைக்கொண்டே நிலைநாட்ட லாம்.

திருநாவுக்கரசர் என்னும் பெயர் இயற் பெயர் அன்று. இது சிவ பரம்பொருளால் சூட்டப்பட்ட திருப்பெயர். இதனைச் சேக் கிழார்,

'நாவுக் கரசென் றுலகே ழினும்நின்
நல்நாமம் நயப் புறநண் ணுகஎன்
றியாவர்க் கும்வியப் புறமஞ் சுறைவான்
இடையே ஒருவாய் மைஎழுந் ததுவே'

என்று அறிவித்தமையால் அறியலாம்.

இவ்வாறே அருணகிரியார் என்னும் திருப்பெயரைச் சூட்டியவர் முருகப் பெரு மானே என்பதை அருணகிரியாரே தாம் பாடிய பெரிய மடத் திருப்புகழில்,

"அருணகிரிநாதஎனும் அப்பனேபோற்றி"

என்று பாடிப் பரவியுள்ளனர்.

கண்ணுதல் பெருங்கடவுள் தாண்டகச் சதுரரைத் திருவாய்மூருக்கு வருமாறு பணித்தனர். இந்த உண்மையினை அப்பர் அடிகளே,

'எங்கே என்னை இருந்திடம் தேடிக்
கொண்
டங்கே வந்தடை யாளம் அருளினூர்
தெங்கே தோன்றும் திருவாய் மூர்ச்
செல்வனூர்
அங்கே வாஎன்று போனூர் அதென்
கொலோ'

என்று பாடியுள்ளனர்.

இவ்வாறே முருகப் பெருமானும் அருண கிரியாரை விராலி மலைக்கு வருமாறு கட் டளையிட்டனர். இதனை வியந்து அருண கிரியார் விராலிமலைத் திருப்புகழில்,

'தாமரையின் மட்டு வாசமலர் ஒத்த
தாளிணை நினைப்பில் அடியேனைத்
தாதவிழ் கடுக்கை நாகமகிழ் கற்ப
தாருஎன மெத்தி யவிராலி
மாமலையில் நிற்பம் நீகருதி உற்று
வாஎனஅ ழைத்தென் மனதாசை
மாசினைஅ றுத்து ஞானமு தளித்த
வாரமினி நித்தம் மறவேனே'

என்று அறிவித்திருப்பதைக் காண்க,

'வாக்கிற் கருணகிரி வாதவூ ரர்கனிவில்
தாக்கில் திருஞான சம்பந்தர்-நோக்கிற்கு
நக்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரனூர்
சொற்குறுதிக் கப்பர் எனச் சொல்'

என்பது ஒரு பழம்பாடல். இப்பாடல் அப்ப ரின் சொல்வன்மையினையும் அருணகிரியின் வாக்கு வன்மையினையும் ஒருங்கே புகழ்ந்த

வற்றைக் காண்க. இவ்விரு அருளாளர்களின்சொல் ஆட்சித் திறன் மிகமிகப் போற்றற்குரிய முறையில் உள்ளன என்பது உண்மை, வெறும் புகழ்ச்சி அன்று. இதற்குச் சான்றுகப் பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்னும் முதுமொழிக்கிணங்க இருவர்களின் திருவாக்குகளினின்று ஒவ்வோர் பாடல்களை மட்டும் காட்டி இக்கட்டுரையினை முடிப்போமாக.

'வானம் துளங்கில்என் மண்கம்பம்
ஆகில்என் மால்வரையும்
தானம் துளங்கித் தலைதடு மாறில்என்
தண் கடலும்
மீனம் படில்என் விரிசுடர் வீழில்என்
வேலை நஞ்சுண்
டுமையொன் றில்லா ஒருவனுக் காட்பட்ட
உத்தமருக்கே'

என்பது சொற்குறுதி அப்பர் எனச்சொல் என்பதற்கு ஏற்ற எடுத்துக்காட்டு.

'நாளென் செயும்வினை தான் என்
செயுமெனை நாடிவந்த
கோளென் செயும்கொடுங் கூற்றென்
செயும்குமரேசரிரு
தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டை
யும் சண் முகமும்
தோளும் கடம்பும் எனக்குமுன்
னேவந்து தோன்றிடிலே'

என்பது, "வாக்கிற்கு அருணகிரி" என்னும் தொடர்க்கு ஏற்ற சான்றுகும்.

ஆகவே, இதுவரையில் கூறிய கருத்தால் அருணகிரியார் அப்பர் பெருமானின் நூலில் ஆழ்ந்த ஈடுபாடு உடையவர் என்பதையும் அவர் அவ்வீடுபாட்டைத் தம் நூலில் வாய்ப்பு வந்துழி வந்துழி புகுத்தி மகிழ்வுற்றுர் என்பதையும் ஒருவாறு அறிந்து மகிழ்ந்தோம். இனி நாம் இவ்விரு பேரருளாளப் பெருமக்களின் திருவாக்குகளை மறவாது ஓதி உணர்ந்து இறைவன் திருவருளுக்கு ஆளாவோமாக.



# அப்பரும் கச்சியப்பரும்

திரு. கி. வா. ஜகந்நாதன், எம்.ஏ., சென்னை.

முருகப் பெருமானுடைய வரலாருகிய கந்த புராணத்தை இனிய செந்தமிழிற் பாடிய கச்சியப்ப சிவாசாரியார், தம் நூலில் சிவபரத்துவத்தைத் தக்க காண்டத்தில் மிகச் சிறப்பாகக் கூறியுள்ளார். நாயன்மார்களைத்தனியே துதித்து வாழ்த்தியதோடு, கண்ணப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகியவர்களைப்பற்றிய செய்திகளை இடையே வரும் பாடல்களிலும் இணைத்துள்ளார். அப்பர் சுவாமிகளைப்பற்றித்தனியே ஒரு துதிப்பாடலைக் கடவுள் வாழ்த்தில் அமைத்திருக்கிருர். அதனையன்றி இடையே அப்பர் பெருமானைப்பற்றிக் குறித்ததாகத் தெரியவில்லை.

ஆயினும் திருமுறைகளில் ஆழ்ந்த புலமையும் ஈடுபாடும் உடைய கச்சியப்பர் அந்நூல்களின் கருத்துக்களைத் தம்முடைய புராணத்தில் இடையிடையே எடுத்து வைத்திருக்கிருர். இந்தவகையில் அப்பர் சுவாமிகள் திருவாக்கோடு ஒப்புமையுள்ள பல பகுதிகளைக் கந்தபுராணத்தில் காணலாம்.

திருநாவுக்கரசர் சைவராகப் பிறந்தும் நம்பர் அருளாமையால் அமண் சமயங் குறுகினர். பிறகு சிவபிரான் அருளால் மீண்டும் சைவ சமயத்தை மேற் கொண்டார். அது கண்டு பொருமையுற்ற அமணர்கள் அவருக்குப்பலவகை இன்னல்களை மன்னனைக் கொண்டு செய்வித்தனர். அவற்ருல் துன்புருமல் இறைவன் திருவருளால் நலம் பெற்றுச் சிறந்தார். அமணர் மன்னன் செய்த கொடுமைகளில் ஒன்று அவரைக் கல்லொடு கட்டிக்கடலில் வீழ்த்தியது, அப்போது இறைவனது ஐந்தெழுத்தை எண்ணிப் பதிகம் பாடினர் அப்பர்.

"சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணை திருந்தடி பொருந்தக் கை தொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே!"

என்று தொடங்கி அப்பதிகத்தைப்பாடினர். அப்போது இறைவன் அருளால் அந்தக்கல் தூண் கடலில் மிதக்க அதையே தெப்பமாகக்கொண்டு கரையேறினர்,

இந்த அற்புதச் செயலை எண்ணிப் பல புலவர்கள் பாராட்டியிருக்கின்றுர்கள். கச்சியப்பரும் இவ்வற்புதச் செயலை நினைத்துப் போற்றுகிருர்,

"பொய்யுரை நூல்சில புகலும் தீயமண்
கையர்கள் பிணித்துமுன் கடல்அகத்திடு
வெய்யகல் தோணியாய் மிதப்ப மேற்படு
துய்யசொல் அரசர்தாள் தொழுது போற்றுவாம்,"

என்பது அவர் கூறும்துதி. 'பொய்யான உரைகள் அடங்கிய சிலநூல்களைச்சொல்லும் தீய அமணர்களாகிய கீழ்மக்கள் முதலில் கட்டிக் கடலினுள் இட்ட வெம்மையான கல்லே தோணியாக மிதக்க, அதன் மேலே தங்கி வந்த பரிசுத்தமான சொல் வேந்தராகிய திருநாவுக்கரசருடைய திருவடிகளைக்கைகளால் தொழுது மனத்தாலும் வாயாலும் போற்றுவோமாக என்பது இதன் பொருள்.

அப்பரைக் கடலில் இட்டவர்கள் பொய்யுரை நூல் சில புகலும் தீய அமணர்கள். அப்பரோ துய்ய சொல் அரசர். மிதப்ப மேற்படும் சொல்லரசர் என்று திருநாவுக்கரசருக்கும் அடையாக்கலாம். மிதக்கும்படியாக மேம்பட்டுப்பாடும் திருப்பதிகமாகிய சொல்லையுடைய அரசர் என்றும் பொருத்திச்சொல்லலாம். கல் நீரில் அமிழுந்தன்மையுடையது. அது தூயவரைத் தாங்கியதால் ஆழாமல்

மிதந்தது. கடலுள் ஆழ்த்துவதற்காகக் கட்டியகல்லாதலின் கொடுமையான கல்லாயிற்று. அது திருநாவுக்கரசருடைய தொடர்பால் ஆழும் கல்லாக இன்றி மிதக்கும் தோணிபோலாயிற்று. தூய்ய சொல் இந்த அற்புதத்தைச்செய்தது. பிறவிக் கடலில் ஆழும் கல்லான நெஞ்சுடைய உயிர்களுக்கு இந்தத்துய்ய சொல்லின் தொடர்பு கிடைத்தால் அவ்வுயிர்கள் மேலே மிதக்கும்; பிறவியில் ஆழாமல் மேம்படும் வாழ்வை அடையும் என்ற குறிப்பை இது காட்டுகிறது.

இனி, கந்தபுராணத்தில் அப்பர் அருந்தமிழிலுள்ள சொல்லும் பொருளும் வரும் இடங்களிற் சிலவற்றை இங்கே காணலாம். நூல் முழுவதும் வரும் பகுதிகளை எடுத்துத் தொடுத்துச் சொன்னால் மிகவிரியுமாதலின் சில எடுத்துக்காட்டுக்களை மட்டும் இங்கே பார்க்கலாம்.

பிரம விஷ்ணுக்கள் தம்தம் ஆயுட்காலம் நீங்கினால் மறைவார்கள் என்றும், அப்பால் புதிய பிரமனும் திருமாலும் தோன்றுவார்கள் என்றும் கூறுவது சைவர்கள் கொள்கை.

"நூறு கோடி பிரமர்கள் நுங்கினர்
ஆறு கோடிந ராயணர் அங்ஙனே"

என்று அப்பர் பாடுவார்.

கந்தபுராணத்தில் இறைவன் திருமாலோடு திருவாய் மலர்ந்தருளுகிறான். 'முன்பு இருந்த பிரமன் இறந்து போனான். பிறகு உன்னோடு கூடினோம். அப்போது இப்போதுள்ள பிரமனை உந்தியால் அன்னையாக நின்று அளித்தாய்' என்று கூறுகிறான். இங்கே பிரமன் ஒருவன் அல்லன் என்பதும், ஒரு பிரமன் இறந்தால் வேறொரு பிரமன் வருவான் என்பதும், புலனாகின்றன.

"முன்னை வேதன் முடிந்தனன் போதலும்
உன்னோ டேவந் துவப்பொடு
கூடினோம்,
பின்னர் இந்தப் பிரமனை உந்தியால்
அன்னை யாகி அளித்தனை அல்லையோ?"
(மகாசாத்தாப் படலம், 36)

இந்திரனுடைய மகனாகிய சயந்தன் இறையுணர்வுடையவன். அவனுடைய தாயும் தந்தையும் எங்கோ ஒளித்தார்கள். அந்த நிலையில் அசுரர் படைகள் அவனை எதிர்க்க வருவதாக அறிகிறான். அப்போது இறையுணர்வு மிக்கவனாதலால் உயிருக்கு அஞ்சாமல் வீரவாசகம் பேசுகிறான்.

"அஞ்சேன்மன்னோ அவர்க் கினியான்;
ஆவி பொருளாக் கொள்ளாதார்
நஞ்சே பொருவுந் தீங் குறினும்
நடுக்கஞ் செய்யார்; இடர்ப்படியார்;
தஞ்சே வகத்தின் நெறி பிழையார்"

என்கிறான்.

சமணர்கள் ஏவிய யானையைக் கண்டபோது அப்பர்பாடிய பதிகத்தில் ஒவ்வொரு பாசுரத்திலும்,

"அஞ்சுவ தியாதொன்றும் இல்லை; அஞ்ச வருவதும் இல்லை" என்று பாடுவதை இப்பாட்டு நினைப்பிக்கின்றது.

இறைவன் முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப்பழம் பொருளாய்ப் பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனாய் நிற்பவன், இதை அப்பரும் சொல்கிறார். திருத்தாண்டகத்தில்,

"புதியனவு மாய் மிகவும் பழையான்
தன்னை"
"பச்சை நிறமுடையார் பாலர் சாலப்
பழையர்"

என்று பாடுவார். இந்தக்கருத்தைக் கச்சியப்பர் ஆளுகிறார். சிங்கமுகாசுரன் முதலில் சூரபன்பனுக்கு முருகனுடைய பெருமையை எடுத்து உரைக்கின்றான். அதைச் சூரன் கேட்கவில்லை. பின்பு போரிட்டுமடிகிறான். அவ்வாறு முதலில் அறிவுறுத்தும் போது முருகனுடைய கடவுள் தன்மையை பலபடியாக விரித்து இயம்புகின்றான். ஓரிடத்தில்,

"வேதக் காட்சிக்கும் உபநிடத் துச்சியில்
விரிந்த
போதக் காட்சிக்கும் காணலன்; புதியதிற்
புதியன்;
மூதக் கார்க்குமு தக்கவன்"

என்கிறான். இங்கே இறைவன் பால் பழமையும் புதுமையும் இணைந்திருக்கும் பாங்கை அவன் கூறுகிறான்.

கருதுவார்க்கு ஆற்ற எளியனாகிய ஆண்டவன் தன் பக்தர்கள் வேண்டுவதை அருளும் கருணையுடையான். திருமறைக்காட்டுத் திருத்தாண்டகத்தில் அப்பர் இந்தக் கருத்தைக் கூறுகிறார்.

"காண்டற் கரிய கடவுள் கண்டாய்
கருதுவார்க் காற்ற எளியன் கண்டாய்
வேண்டுவார் வேண்டுவதே யீவான் கண்டாய்."

இந்தக் கருத்தை வெவ்வேறிடங்களில் ஆளு வார் கச்சியப்பர்.

"அண்ணலங் குமரனை அகத்துட்
கொண்டுழி
எண்ணிய எண்ணியாங் கெவர்க்கும் நல்கு
வோன்"

(மூவாயிரர் வதைப் படலம், 77)

என்பார் ஓரிடத்தில்,

"யாரும் எண்ணிய எண்ணியாங்கே ஈபவன்"
(உபதேசப்படலம்)

என்பார் பிறிதோரிடத்தில்.

இறைவன் அடியார்களுக்கு இந்திரன் பதவி முதலியவற்றில் ஆசை இராது அவற்றைத் துச்சமாக மதிப்பர். தொண்டர் அடித் தொடர்பை எதற்கும் மேலாகக் கொள்வர். திருமயிலாடுதுறைத் திருக் குறுந் தொகையில் அப்பர் இதைச் சொல் கிறார்.

"அண்டர் வாழ்வும் அமரர் இருக்கையும்
கண்டு வீற்றிருக் கும்கருத் தொன்றிலோம்
வண்டு சேர்மயி லாடு துறையரன்
தொண்டர் பாதங்கள் சூடித் துதையிலே"

இறைவன் பாத சேவையை எல்லாப் பதவிக்கும் மேலாக நினைப்பதாக வீரவாகு வின் கூற்றாக வைத்துக் கச்சியப்பர் பாடு வார்.

"கோலம் நீடிய நிதிபதி வாழ்க்கையும்
குறியேன்
மேலை இந்திரன் அரசினைக் கனவினும்
வெஃகேன்;
மால யன்பெறு பரத்தையும் பொருளென
மதியேன்;
சால நின்பதத் தன்பையே வேண்டுவன்
தமியேன்"

இரண்டு பாடல்களிலும் பதவியாசை யின்மை தொண்டர்களின் இயல்பு என்ற பொதுமையைக் காண்கிறோம்,

இறைவன் ஓங்காரத்துட் பொருளாய் நிலவும் உண்மையை அப்பர் பலகாலும் பாடுவார்.

"ஓங்காரத் துட்பொருளாய் நின்றான்
கண்டாய்"

"ஓங்காரத் துட்பொருளை"
"ஓங்காரத் தொருவனை"
"ஓங்கார மெய்ப்பொருளை"

கச்சியப்பரும் இதைச் சொல்கிறார். மறையும் எல்லை தேறுவதற்கரிய இறைவன் ஓங்காரமென்னும் மூலமந்திரத்தின் உணர் வாக உறைகிறானும்.

"ஆங்காறும் எல்லை அருமறையும்
தேறரிய
"ஓங்கார மூலத் துணர்வால் உறைபகவன்"

எல்லா நதிகளும் கடலை அடைவது போல எந்த மூர்த்தியை வணங்கினாலும் அது சிவபெருமானைப் போய்ச்சேரும்" என் பது சாத்திரக் கருத்து. வேதமும் இதைச் சொல்கிறது. இதை அப்பர் ஒருவகையாகச் சொல்வார்.

"விரிவிலா அறிவி னார்கள்
வேறொரு சமயம் செய்தே
எரிவினாற் சொன்னா ரேனும்
எம்பிரானற் கேற்றதாகும்"

என்பார்.

"ஆறு சமயத்தவரைத், தேற்றும்
தகையன்
தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே
ஏற்றும் தகையன்"

என்று திருவடியைப் பாடுவார்,

"தொண்டர்க்கங் கங்கே அறுசமய
மாகி நின்ற திக்கினை"

என்று இயம்புவார்,

'ஆரொருவர் உள்குவார் உள்ளத்துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந்
தோன்றும்'

என்று சமரசம் பேசுவார்.

இவ்வாறு கூறும் நெறியைப் பிற அரு ளாளர்களும் கூறியிருக்கிறார்கள். கூறுவ தைக் கேட்போம்.

"யாதொரு பொருளை யாவர்
இறைஞ்சினும் அதுபோய் முக்கண்
ஆதியை அடையும் அம்மா;
அங்கது போலத் தொல்லை

வேதம துரைக்கநின்ற
வியன்புகழ் அனைத்தும் மேலாம்
நாதனை அணுகும், எல்லா
நதிகளும் கடல் சென் றென்ன''

இவ்வாறே இறைவன் இயல்பும் தொண்டர் இயல்பும் சிவபெருமான் திருவருட் பெருமையும் அப்பர் வாக்கிலும் கச்சியப்பர் வாக்கிலும் ஒத்துநிற்கும் இடங்கள் பலப்பல. இங்கே காட்டிய சில எடுத்துக் காட்டுக்களைக் கொண்டே கச்சியப்பர் அப்பர் திருமுறைகளில் எவ்வளவு ஆழ்ந்தவர் என்பதை உணரலாகும்.



## அப்பர் அருளிய அகப்பாடல்கள்

தண்டமிழ் இலக்கண - இலக்கியங்களைத் துறைபோகக்கற்ற அப்பர் பெருமான் திருப்பாடல்களில் காதல் மணம் கமழும்! அகத்துறை நெறி திறம்பாது அடிகள் அருளிய பதிகங்களும் பாடல்களும் பலப்பல. அவர் தம் திருமுறைகளுள் இடம் பெற்றுள்ள அகப்பொருட் பதிகங்களையும், பாடல்களையும் கீழ்க்கண்டவாறு தொகுத் நோக்குதல் கூடும்.

| திருமுறை | | பதிகம் | | பாடல் | |
|---|---|---|---|---|---|
| திருமுறை | 4 | பதிகம் | 6 | பாடல் | 1—10 |
| ,, | 4 | ,, | 12 | ,, | 1—10 |
| ,, | 4 | ,, | 97 | ,, | 1—10 |
| , | 5 | ,, | 29 | ,, | 1—10 |
| ,, | 5 | ,, | 40 | ,, | 1—10 |
| ,, | 5 | ,, | 45 | ,, | 1—10 |
| ,, | 5 | ,, | 53 | ,, | 1—12 |
| ,, | 6 | ,, | 9 | ,, | 1—10 |
| ,, | 6 | ,, | 13 | ,, | 1—10 |
| ,, | 5 | ,, | 7 | ,, | 6— 8 |
| ,, | 5 | ,, | 46 | ,, | 1— 5 |
| ,, | 5 | ,, | 64 | ,, | 0— 6 |
| ,, | 5 | ,, | 66 | ,, | 0— 9 |
| ,, | 5 | ,, | 88 | ,, | 4— 9 |
| ,, | 6 | ,, | 25 | ,, | 0— 7 |
| ,, | 6 | ,, | 35 | ,, | 3— 7 |
| ,, | 6 | ,, | 45 | ,, | 1—4—8 |
| ,, | 6 | ,, | 58 | ,, | 3-7—0 |

நன்றி "அப்பர் தேவாரத்தில் இலக்கியப்பண்புகள்"
திரு. செர். சிங்காரவேலனார் எம். ஏ, டிப். லிங், அவர்கள்,

# அப்பரும் பரஞ்சோதியாரும்

பேராசிரியர் திரு வி சா. குருசாமி தேசிகர். தருமபுரம்

செயற்கரிய செயல் செய்கின்றபோது தான் அருளாளரையும் உலகம் அறிகின்றது. அப்பர் பெருமானை அமணர்கள் கல்லோடு பிணைத்துக் கடலில் வீழ்த்தியபோது அப்பரடிகள் ஐந்தெழுத்தோதிக் கல்லே புணையாக மிதந்து வரக் கரையேறிய அற்புதச் செயல்தான் அவரை உலகம் அறியச் செய்தது. அவ்வற்புதச் செயலே சைவத்தின் பெருமையைப் பல்லவ மன்னனுக்கு உணர்த்தி அவனைச் சிறந்த சைவனாக மாற்றியது. தமிழகத்தின் வடபகுதியனைத்தையும் திருநீற்றொளி பரவச் செய்தது.

இளமையில் நல்லாறு தெரிந்துணர நம்பர் அருளாமையினால் கொல்லாமை மறைந்துறையும் அமண் சமயம் குறுகினார் நாவுக்கரசர். தமக்கையார் செய்த தவத்தால் இறைவன் அடிகளாரைச் சூலை மடுத்து ஆட்கொண்டான். தங்கள் சமயத்தை விடுத்துத் தருமசேனராகிய மருள் நீக்கியார் சைவம் சார்ந்ததை அறிந்த சமணர்கள் தங்கள் சமயத்தைச் சார்ந்திருந்த மன்னனிடம் கூறி அவரை அழைத்துவரச் செய்து தண்டனைகள் அளிக்க முற்பட்டனர். அவரை வாழவிடுவது தங்கள் சமயத்திற்கு அழிவினைத் தரும் என்று அஞ்சினர். நீற்றறையில் இட்டனர். நஞ்சு கலந்த பாற்சோற்றை அளித்து உண்ணச் செய்தனர். மதயானையைவிட்டு இடறச் செய்யவும் முற்பட்டனர். அடிகள், 'ஈண்டுவரும் வினைகளுக்கு எம்பிரான் உளன்' என்ற துணிவோடு அவற்றையெல்லாம் ஏற்று சைவத்தின் பெருமையை உலகறியச் செய்தருளினார்.

சிவபெருமான் அருளால், நீற்றறை குளிர்ந்தது. நஞ்சு அமுதாயிற்று. மதயானை பணிந்து சென்றது. இவற்றையெல்லாம் கண்ட அமணர்கள் எப்படியும் அடிகளை அழித்தால்தான் தங்கள் சமயம் வாழும் என்று துணிந்து கல்லோடு பிணைத்து நடுக்கடலில் கொண்டு சென்று வீழ்த்தி விடுவதுதான் முடிவான வழிஎன்று கூடி முடிவெடுத்தனர். பல்லவனும் அதற்குப் பணிந்தான். கொலையாளர்கள் நாவுக்கரசரைக் கல்லோடு பிணைத்துக் கடலில் வீழ்த்தித் திரும்பினர்.

திருநாவுக்கரசர் திருவைந்தெழுத்தை ஓதி அதன் பெருமையைச் 'சொற்றுணை வேதியன்' என்ற திருப்பதிகத்தால் அருளிச் செய்தார். கல் தெப்பமாக மிதந்தது. கயிறுகள் அறுந்தன. கடலரசனாகிய வருணன் அடிகளைத் தம் முடிமேல் தாங்கித் திருப்பாதிரிப்புலியூர் என்னும் தலத்தின் பக்கத்தில் கொண்டுவந்து சேர்த்தான். இவ்வற்புதச் செயலைக் கண்ட உலகம், திருநீறும், திருவைந்தெழுத்தும், கண்டிகையுமே மெய்ப்பொருள்கள் என உணர்ந்தது.

பல்லவ மாமன்னனாகிய மகேந்திரவர்மன் அப்பர் பெருமானுக்கு இழைத்த கொடுமைகளுக்கு வருந்தி அவர் திருவடிகளைப் பணிந்து மன்னிப்பு வேண்டினான். தான் செய்த தவறுகளுக்குக் கழுவாயாகச் சமண் பாழிகளை இடித்து அக் கற்களாலேயே திருவதிகைக் கோயிலைக்கட்டிகுணபரன் என்ற தன் பெயரையே அக்கோயிலுக்குச் சூட்டி மகிழ்ந்தான். சிறந்த சிவபக்தனாக மாறினான். தென்னாட்டில் திருநாவுக்கரசர் வரலாற்றில் நிகழ்ந்த இவ்வற்புதச் செயல் மிகப் பெரிய சமயப்புரட்சியை உருவாக்கிற்று. புறச்சமயங்களைப் பின்பற்றிப் பொருளுணராதிருந்த தமிழ் மக்களைச் சைவநெறியில் திசை திருப்பிற்று. 'சைவத்தின் மேற்சமயம் வேறிலை, அதிற் சார் சிவமாம் தெய்வத்தின்மேல் தெய்வம் இல்லை' என்ற உறுதியை மக்கட்கு உருவாக்கிற்று.

சேக்கிழார் பெருமான் இவ்வற்புத நிகழ்ச்சியைப்பற்றிக் கூறும்போது, இது வியத்தகு செயலன்று என்று கூறுவது போல இந்நிகழ்ச்சியை வியக்கின்றார்.

'கரைகாண முடியாத பிறவிக் கடல் கருங்கடலைவிடப் பெரியது. ஆணவம், கன்மம், மாயை என்பன கருங்கல்லைவிட வலியன. நல்வினை தீவினை என்னும் நாண்கள் கயிறுகளைவிட உறுதியானவை. பிறவிக் கடலில் மும்மலக் கல்லோடு பிணைத்து இருவினைக் கயிறுகளால் இறுகப் பிணைத்து இடப்பெற்றுள்ள உயிர்களையே கரையேற்ற வல்லதாகிய திருவைந்தெழுத்து, கருங்கடலில் கல்லை மிதக்கச் செய்ததில் வியப்பென்ன இருக்கிறது? என்று கேட்பதுபோல வியந்துரைக்கின்றார் சேக்கிழார்.

"இருவினைப் பாசமும் மலக்கல் ஆர்த்தலின்
வருபவக் கடலிடை மாக்கள் ஏறிட
அருளுமெய் அஞ்செழுத் தரசை இக்கடல்
ஒரு கல்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ?

என்பது சேக்கிழார் திருவாக்கு. இவ்வற்புதச் செயலை அறிந்த அப்பூதி அடிகள் அப்பரின் அருந்தொண்டரானார். அப்பர் பெருமானை அப்பூதியடிகள் சந்தித்தபோது அவரை அப்பரென அறியாமல் அவரிடமே 'பொங்கு கடல் கன்மிதப்பில் போந்தேறும் அவர் பெருமை அங்கணர்தம் புவனத்து அறியாதார் யாருளரோ என்று கேட்கின்றார். இவ்வாறு கடலில் கல்மிதந்த அற்புதம் எல்லோர் உள்ளத்தையும் கவர்ந்ததுபோல சிவப்பிரகாசர் என்ற தெய்வப் புலவர் உள்ளத்தையும் பிணித்தது. ஞானசம்பந்தர் நாவுக்கரசர் சுந்தரர் வரலாறுகளில் அரிய அற்புதங்களைப் பொறுக்கி எடுத்து இவற்றில் எது சிறந்தது என்ற பட்டிமன்றத்தைத் தொடங்கி வைக்கிறார் சிவப்பிரகாசர்.

"போதமுண்ட பிள்ளையென்பு பொருகண் மாது செய்ததோ?
காதன்கொண்டு சொல்லின் மன்னர் கல் மிதப்ப உய்த்ததோ?
வாதுசெய்து முதலைகொண்ட மகனை நீ அழைத்ததோ?
யாதுநம்பி அரிதெனக்கிங் கெடுத்தியம்பவேண்டுமால்"

என்பது நால்வர்நான் மணிமாலைப் பாடல். திருவிளையாடற் புராணத்தைத் தேனொழுகு செழுந்தமிழில் வடித்துத்தந்த பரஞ்சோதி முனிவர் திருநாவுக்கரசரைப் போற்றிப் பாடிய தோத்திரத்திலும் இந்நிகழ்ச்சியை வைத்துப் பாடும் இயல்பைப் பாருங்கள்.

"அறப்பெரும் செல்விபாகத்து
அண்ணல் அஞ்செழுத்தால் அஞ்சா
மறப்பெரும் செய்கைமாறு
வஞ்சகர் இட்டநீல
நிறப்பெருங் கடலும் யாரும்
நீந்துதற் கரியஏழு
பிறப்பெனும் கடலும் நீத்த
பிரானடி வணக்கம் செய்வாம்."

தென்தமிழின் பெருமையை வியந்து பேசும் பரஞ்சோதியார் இறைவனைப் பரவையார்பால் தூதனுப்பியதும், முதலையுண்ட பாலனை அழைத்ததும், எலும்பைப் பூம்பாவை ஆக்கியதும் திருமறைக்காட்டில் வேதங்கள் அடைத்த கதவுகளைத் திறந்ததையும் வியந்து பாராட்டுகிறார்.

"தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை
உண்டபாலனை அழைத்ததும் எலும்பு பெண்ணுருவாக்
கண்டதும்மறைக் கதவினைத் திறந்ததும் கன்னித்
தண்டமிழ்ச் சொலோமறுபுலச் சொற்களோ சாற்றீர்'

என்ற பாடல் பரஞ்சோதி முனிவரின்தமிழ்ப் பற்றையும் சமயப்பற்றையும் புலப்படுத்துகின்றன.



# அப்பரும் குமரகுருபரரும்

திரு. கு. சுந்தரமூர்த்தி, பி.ஏ., திருப்பனந்தாள்

ஞாலம் உய்ய நாமுய்ய தொன்மைச் சைவ நன்னெறியுய்யத் தோன்றிய அருளாளர்கள் பலர். அவர்கள் அனைவரும் அவ்வப்பொழுது தோன்றி உயிர்களை நல்வழிப் படுத்துதலில் தலைநின்று விளங்கினர். அத்துறையில் வெற்றியும் பெற்றனர். அவ்வருளாளர்களுள் இருவரை ஈண்டு நினைவு கொண்டு வழிபடுவோம்.

ஒருவர் அப்பர் பெருமான். பிறிதொருவர் குமரகுருபரர். முன்னையவர் கி. பி. ஏழாம் நூற்றாண்டில் தோன்றி, எண்ணிறந்த சொன்மாலைகளை இறைவனுக்குச் சாத்தி வழிபட்டவர். பின்னையவர் கி. பி. பதினேழாம் நூற்றாண்டில் தோன்றி குருவருளால் வைத்தபடி வாழும் வகைமை பெற்றுப் பிரபந்த வகையில் அரியபல நற்கவிதைகளைப் பாடித் திருவருளையும் குருவருளையும் பெற்றவர். இவர்கள் காலத்தால் இடையிட்டுத் தோன்றினும் கருத்தால் ஒன்றுபட்டுச் செல்லும் பான்மையர்.

## செல்வத் தொண்டர் கூட்டம்:

[1] 'செல்வன் கழலேத்தும் செல்வம்
செல்வமே'

என்பர் ஆளுடைய பிள்ளையார். இத்தகைய அருட் செல்வத்தைப் பெற்றவர்களே 'திருத்தொண்டர்' எனப்படுவர். திருத்தொண்டர்கள் உள்ளத்திலேயே இறைவன் இருந்தருளுவன். [2]கவராதே தொழும் அடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே' என்பர் அப்பர் பெருமான். தொண்டர்கள், தாம் பூசும் நீறு போல் உள்ளமும் புனிதமாக விளங்குபவர்கள். ஆனால் அப்பர் பெருமான், உள்ளம் புனிதமின்றிக் கோலம் மட்டுமே தொண்டராய் இருப்பினும்கூட அவர்களும் வழிபடுதற்குரியவர்களே என்பர்.

[3]'எவரேனும் தாமாக விலாடத்திட்ட
திருநீறும் சாதனமும் கண்டால் உள்கி
உவராதே அவரவரைக் கண்டபோதே
உகந்து அடிமைத்திறம் நினைந்து'

வழிபடவேண்டும் என்பது அவர் கருத்து. பிறிதோரிடத்தில்,

[4] 'அங்கமெலாங் குறைந்தழுகு தொழு
நோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப
ராகில்
அவர்கண்டீர் நாம்வணங்கும் கடவு
ளாரே'

என அவ்வடியவர்களைக் கண்கண்ட கடவுளராகவே கருதி வழிபடவேண்டும் என உரைத்துள்ளார். இவ்வரிய கருத்தினைக் குமரகுருபரரும்,

[5] 'விழுத்தகு கல்வியும் ஒழுக்கமும் இல
ராய்ப்
பழிப்புள ராயினு மாக வழுத்துநின்
பொன்னடித் துணைசேர் நின்னடித்
தொண்டர்
திருவமு தார்ந்து தெருக்கடை யெறிந்த
பரிகல மாந்தியிப் பவக்கடல் உழக்கும்

---

[1] திருஞானசம்பந்தர் தேவாரம்.
[2] நாவுக்கரசர் 6–ஆம் திருமுறை 613.
[3] ,, ,,
[4] ,, ,, 703.
[5] பண்டாரமும் மணிக்கோவை—5.

வரனுடை ஞமலி யாகிநின்
அருளையும் அயராது அவதரிப் பதுவே'

என விளக்கிக் கூறுவது ஒத்துநோக்கி இன் புறுதற்குரியதாகும். அடியவரை வழிபட் டுய்யவேண்டும் என்பது மட்டுமல்ல; அவ் வடியார் அருந்தியபின் அவர் தம் இலையில் எஞ்சியிருக்கும் உணவும் போற்றியருந்து தற்குரிய தொன்று என்றுகூறும் அடிகள் வாக்கு நெஞ்சையீர்க்கும் பான்மையதாய் விளங்குகின்றது. [1]'விருந்தோம்பி மிச்சில் மிசை வான்புலம்' என்னும் திருக்குறளில்மிச் சில்என்பதற்குப்பாண்டசேடமின்றிப்பரிகல சேடமாக்குவாரும் உளர் என இராமானுச கவிராயர் கூறியிருப்பது ஈண்டு நினைவு கூர்தற்குரியது. உணவு கிடைக் காத நாளில் பாண்டசேடம் என்பது பலரும் விரும்புவதாயிருக்கும். பரிகல சேடம் என் பது எவரும் விரும்பாத பொருளாகும். அதனையும் உண்ணுதற்குப் போட்டியிட்டுக் கொண்டுவரும் நாய்களுள் ஒன்றாய் விளங்க வேண்டும் என அடிகள் விரும்புவராயின், தொண்டர்தம் பெருமை சொல்லவும் எளிதோ!

## திருவைந்தெழுத்து :

அப்பர் அடிகளுக்கு உற்ற திங்குகள் பல.அவையனைத்திலும் உய்ந்து இடரின்றி விளங்கக் காரணமாய் நின்றது திருவைந் தெழுத்தேயாகும். கற்றுணைப் பூட்டிக் கடலில் பாய்ச்சியபொழுது, 'நீலக்குடி அரன் நல்ல நாமம் நவிற்றி உய்ந்தேன்' என அப்பர் அடிகளே கூறுகின்றார், அரன் நாமம்-திருவைந்தெழுத்து, [2]'திருநாமம் ஐந் தெழுத்தும் செப்பாராகில்' என அடிகளே இதனை விளக்குவர். இத்திருவைந்தெழுத் தின் பெருமையை,

[3]''இல்லக விளக்கது இருள்கெ டுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலரும் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே''

என அருளிச் செய்கின்றார் அப்பர் பெரு மான். பண்ணிய உலகினிற் பயின்ற பாவத்தை நண்ணி நின்றறுக்கும் திருவைந் தெழுத்து பலருடைய அகத்தும் விளங்கி அவர்களை உய்வித்தருளுவதுடன், பண்டும் இன்றும் என்றும் உள்ள பொருளாக விளங் கும் பான்மையையும் உடையது. இவ்வழ கிய கருத்தைக் குமரகுருபரர்,

[4]'தொல்லுலகில்,
ஈறு முதலுமகன்று எங்கும் நிறைந்து
ஐந்தெழுத்து'

எனக் கூறும் பகுதியொடு ஒருங்கு வைத்து இன்புறுதற்குரியதாகும்.

## சொல்லாட்சிகள் :

இத்தகைய கருத்தொப்புமைகள் ஒரு புறம் இருக்க, அழகிய பல சொல்லாட்சி களும், இருவர்தம் இதயத்தும் ஒன்றுபடக் காட்சியளிக்கின்ற பான்மை கண்டு இன் புறுதற்குரியதாகும்.

## யானை :

இச்சொல்லை ஒரு பாடலில் ஆறுமுறை வருமாறு அமைத்துள்ளார் அப்பர் பெரு மான். ஆனால் யானை என்னும் விலங்கை ஆறு இடங்களிலும் குறியாது சொல்லின் விகுதியாகவே அமைத்துள்ளார். [5]'முறை யின் ஒருசிறு தூக்கின் எழுபரவையும் முடித்துற நிறுத்தான்' எனச் சேக்கிழார் பாராட்டப் பெறுதல்போல, முறையின் ஒரு சிறு தூக்கின் அறுயானையும் நிறுத்தி முடித் தவர் என இவரையும் பாராட்டி மகிழலா மன்றோ!

[6]''அரியானை அந்தணர்தம் சிந்தையானை
அருமறையின் அகத்தானை அணுவை
யார்க்கும்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
திகழொளியைத் தேவர்தங் கோனை
மற்றைக்

---

[1] திருக்குறள் 85.
[2] நாவுக்கரசர் தேவாரம் 6-ஆம் திருமுறை 934.
[3] ,, 4 ,, 111
[4] கந்தர் கலி வெண்பா 68-69.
[5] சேக்கிழார் பிள்ளைத் தமிழ்: அம்புலி.
[6] நாவுக்கரசர் தேவாரம் 6-ஆம் திருமுறை 1

கரியானை நான்முகனைக் கனலைக் காற்
றைக்
கனைகடலைக் குலவரையைக் கலந்து
நின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே"

என்பது அப்பர் பெருமான் அருள்வாக்கு. இங்ஙனமே குமரகுருபரர் ஐந்துமுறை யானை என்னும் சொல் வருமாறு அமைத்து ஒரு பாடல் அருளியுள்ளார்.

அப்பாடல் வருமாறு :

[1]"போரானை முதுகுறைப்பப் பொறையாற்
றுஞ்சி னகரத்துப்
புழைக்கை நால்வாய்க்
காரானைப் போர்வைதழீஇ வெள்ளானைக்
கருள்சுரந்த
கடவுளேயோ
ஓரானை முனைப்போருக் கொருகணை
தொட்டெய்திடுநீர்
ஒருத்தி கொங்கை
ஈரானை முனைப்போர்க்கும் வல்லீரே
லொருகணைதொட்
டெய்திடீரே"

இப்பாடலில் முதலன நான்கும் யானை என்னும் விலங்கைக் குறிப்பன. ஐந்தாம் இடம் கொங்கையை யானையாக உருவகம் செய்த இடமாகும்.

## காதன்மை :

காதன்மை– அன்புடைமை. இச்சொல் தொன்மை வாய்ந்தது.

[2]'காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதமை யெல்லாம் தரும்"

என்னும் திருக்குறளைக் காண்க. இதனை அப்பர் பெருமான் 4, 5, 6 ஆகிய மூன்று திருமுறைகளிலும் பயன்படுத்தியுள்ளார்.

'கழித்திலேன் காமவெந்நோய் காதன்மை
என்னும் பாசம்'

என்பது நாலாந் திருமுறை. (265)

'கங்கை மாலையர் காதன்மை செய்தவர்'
என்பது ஐந்தாம் திருமுறை. (271)

'காதன்மையால் தொழும் அடியார்
நெஞ்சினுள்ளே
கன்றுப்பூர் நடுதறியைக் காணலாமே'

என்பது ஆறும் திருமுறை.

இச்சொல்லைக் குமரகுருபரர் ஈரிடங்களில் எடுத்தாண்டுள்ளார்.

'காதன்மை யுண்டே இறைமாண்டார்க்கு
ஏதிலரும்
ஆர்வலரும் இல்லை யவர்க்கு'

என்பது நீதிநெறி விளக்கம் (46)

'மெய்வைத்த காதன்மை யரமகளிர்'

என்பது முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் (சிறுதேர்–5)

## கும்பிடுதல் :

இது வழக்குச்சொல். இச்சொல்லை பெருமான்.

[3]கோலமா மணிப் பாதமே கும்பிட்டே' என்றவிடத்து எடுத்தாண்டுள்ளார். குமர குருபரும்

[4]'சென்று கும்பிட்ட ஓர் ஏடார் குழற் கோதை' என்றருளுவர். [5]கும்பிட்டு வாழ் கிலேன், யான் கூற்றையும் ஆடல் கொள் வேன்.' [6]'கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத் தாடித்திரியே' என வருவனவும் ஈண்டு நினைவு கூர்தற்குரியனவாகும்.

இங்ஙனம் பேரின்பமாக்கடலில் திளைத் தாழும் இவ்விரு பேரருளாளர்களும் கருத் தொப்புமையாகவும் சொல்லொப்புமையாக வும் கூறும் இடங்கள் பல உள. அவை யனைத்தையும் ஆய்ந்து கண்டு இன்புற இக் கட்டுரை ஒரு தூண்டுகோலாகும் என்று நம்புகிறேன்.

வாழி பெருமான் புகழ் கேட்டவர் செவிகள்.

---

[1] மதுரைக் கலம்பகம் 18.
[2] திருக்குறள் 507.
[3] நாவுக்கரசர் தேவாரம் 4-ஆம் திருமுறை 485
[4] மதுரைக் கலம்பகம் 40.
[5] கம்பராமாயணம் யுத்தகாண்டம்.
[6] சிவஞான சித்தியார்.

# அப்பரும் சிவப்பிரகாசரும்

புலவர் திரு. ச. குமார அழகப்பன், விக்கிரமசிங்கபுரம்

## தோற்றுவாய்:

பழமை மிகுந்த நமது சைவசமயம் கிடைத்தற்கரிய கருத்துப் பெட்டகங்களைத் தன்னகத்தே கொண்டது. தமது பாட்டாலும், உரையாலும் அப்பெட்டகங்களை நிறைத்த பெருமை சைவசமயக்குரவர் நால்வர்க்கே உரியது. இந்நால்வரையும் போற்றிப் புகழ்ந்து, அவர்களது கருத்துக்களால் ஈர்க்கப்பட்ட பல பெரியோர், இவர்களது பாடல்களின் கருத்திலே நெஞ்சைப் பறிகொடுத்தனர். பயின்று பயின்று அவற்றின் சுவையில் அழுந்தினர். 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்னும் பொது நோக்கில், தமது இதயத் தடாகத்தில் நிறைந்த கருத்துமழையை, சொல்மடை திறந்து, சொற்றமிழ்ப் பாடல்களாக வெளியிட்டனர். அத்தகைய பெரியோர் பலருள் குறிப்பிடத்தக்கவர் 'கற்பனைக் களஞ்சியம்' எனப் புகழ்பெற்ற துறைமங்கலம் சிவப்பிரகாசர். அவர் தேவாரமும் திருவாசகமும் நன்கு கற்றவர். அவற்றின் பெருமையை விளக்க, அந்நூற்களின் ஆசிரியர்களான நால்வரையும் 'நால்வர் நான்மணி மாலை' என்ற நூலில் போற்றியுள்ளார். அம்மாலையின் மணிகளான வெண்பா, கலித்துறை, விருத்தம், ஆசிரியப்பா என்பன முறையே சம்பந்தர், நாவரசர், சுந்தரர், மணிவாசகர் ஆகியோரின் பெருமைகளைக் காட்டுவனவாகும். அவற்றுள் கலித்துறையில், அவர் காட்டும் அப்பரின் பெருமைகளை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

## பிறப்பதுண்டேல்....

திருநாவுக்கரசர் கி. பி. 7-ஆம் நூற்றுண்டில் வாழ்ந்தவர். சிவப்பிரகாசர் கி.பி. 17- ஆம் நூற்றுண்டில் வாழ்ந்தவர். இருவருக்கும் இடையே பத்து நூற்றுண்டுகள் கழிந்த பின்னரும் கூட அப்பரது புகழ் குன்றவில்லை; காரணம் என்ன? எண்ணுகிருர் சிவப்பிரகாசர். அவருக்கு நினைவு வருகிறது' "இடையருப் பேரன்பும் உழவாரப் படைவிடாத் திருக்கரமும் கொண்டு, ஓடும் பொன்னும் ஒன்றெனக் கொண்டு, முற்றும் துறந்தவர்க்கு முடியரசும் ஒரு தூசு எனக் கொண்டு, பற்றற்ருன் நெறியினையே பற்றி நின்றவர் அல்லவோ? அவரது புகழ் நிலைப்பதற்கும், உலகில் புகழ்மணம் பரவுவதற்குக் கேட்கவா வேண்டும்! இத்தகைய புதல்வரைப் பெறுதற்குத் தவம் செய்த புகழன் ஆர்? மாது இனி யார்? எனப்பலரும் இன்றும் பாராட்டும் வண்ணம் விளங்கும் அப்பரல்லவோ'சிறந்த பெரியோர் இதுவன்றே அவர் புகழுக்குக் காரணம்?" பெற்றோராக இருந்தாலும் அப்பரை போன்று அறிவறிந்த பிள்ளைக்கு அல்லவா பெற்ரோராக வேண்டும்? பிறந்த போதும் 'தந்தை என்ன தவம் செய்து பெற்ருனே? தாய் எவ்வாறு மகிழ்வு கொண்டாளோ, எனப் பிறரும் பாராட்டும் வண்ணம் விளங்கிய அப்பரைப் போல் அல்லவோ பிள்ளையாகப் பிறக்க வேண்டும்! "மற்றதெல்லாம் பிள்ளையாமோ?" என எண்ணுகிருர். அப்பரிடமே கூறுகிருர்.

"பெற்ருல் நினைப்பெற் றவர்போல்
பெறலும், பிறப்பதுண்டேல்
நற்ரு ணியில்நினைப்போற் பிறப்பதும்
நல்ல கண்டாய்!
செற்ருர் புரம்எரி செய்தவில் வீரன்
திருப்பெயரே
பற்ரு மறிவெண் திரைக்கடல் நீந்திய
பாவலனே"

## அரியதெது?

நாவுக்கரசரின் வாழ்க்கையை நன்கு அறிந்தவர் சிவப்பிரகாசர். சைவத்தில் பிறந்

தார். சமணத்தில் புகுந்தார். மீண்டும் இறையருளால் தமக்கையார் திருநீறளிப்ப் பெருவாழ்வு வந்ததெனப் பெரிதும் மகிழ்ந்து சைவநெறி ஏழுலகும் பாலிக்கச் செய்தார்.

அதற்கிடையில் அமணர்கள் அவர்க் கிழைத்த கொடுமைகள் எவ்வளவு! அனைத் தையும் எண்ணுகிருர் சிவப்பிரகாசர். "கடல் நஞ்சமுண்ட கண்டனை சிவபெரு மானின் அன்புக்கடலில் மூழ்கியெழுந்த நாவரசரே! அருகசமயமாகிய கடலுக்குள் புகுந்து, கரைகாணுது தவித்து, தமக்கை யென்ற புணையைத் துணைக் கொண்டு, சைவமாகிய கரையில் ஏறியருளினீர்! அத ஞல் பெர்ருமை கொண்டு, அமணர் கல்லி ஞேடு கட்டிக்கடலில் இட்டபோது கல்லையே தெப்பமாகக் கொண்டு கரை சேர்ந்தீர்; இரண்டுகடல்களைக் கடந்த உமக்குக் கடின மாகத் தோன்றிய அரியது எது? எனக் குக் கூறும்" எனக் கேட்கு முகத்தான்,

"அருகக் கடல்கடந் தேறியதோ? சிலை
அம்பியெனப்
பெருகக் கடல்கடந் தேறியதோ? சொல்
பெறுமிடறு
கருகக் கடல்விடம் உண்டோ னடியிற்
கசிந்துமனம்
உருகக் கடல் அன்பு பெற்றசொல்
வேந்த! உனக்கரிதே!"

என வினுத்தொடுக்கிருர். அப்பப்பா..! அவர் கடந்தது இரண்டு கடல்! இவர் வைத் திருப்பது நான்கு கடல்! அருட்கடலைக் கற் பனைக் கடல் கேட்கும் கேள்வி சிந்தையைத் தொடுகிறது.

## ஒருநம்பி அப்பூதி

அந்தணர் அப்பூதியர் அப்பர்பால் கொண்ட அன்பை நினைக்கிருர் அருட்சிவப் பிரகாசர்: அவர் அகங் கனிகிறது! அப்பூதி நலம் தெரிகிறது.

"உலகில் நல்லவர்களைக் காண்பதும், நல்லார் சொல்கேட்பதும், நல்லாரைச்சார் தலும், நல்லதாகும் என்பது மட்டுமல்ல. நல்லவர்களின் பெயரைச் சொன்னுலும் கூட நல்லபேறு கிடைக்கின்றதே! என்ன அதிசயம்! எனவியக்கிருர். அப்பூதியடிகள் காடுசென்று தவம் செய்தாரா? எரிமூட்டி நடுநின்ருரா? நீர் நடுவே நின்ருரா? உணவுண்ணுது உறுப்புக்களை அடக்கி ஞரா? இல்லையே! சிறந்த முறையில் இல் லறத்தை நடாத்தி, எல்லா நலன்களையும் அநுபவித்தவராயிற்றே! அவர் இந்த நாவுக் கரசரின் பெயரை எழுதியும், சொல்லியும் வந்ததால் அன்ருே, இப்பெரும்பேற்றை அடைந்தார்? பெயரைச் சொன்னதற்கே இப்பேரு?" எனவியப்பில் திளைக்கிருர், கவிதை பிறக்கிறது.

"உற்ருனலன் தவம், தீயில்நின்
ருனலன், ஊண்புனலா
அற்ருனலன் நுகர்வுந், திருநா
வுக்கரசெனுமோர்
சொற்ருனெழுதியும் கூறியுமே
என்றுந் துன்பில்பதம்
பெற்ருனொரு நம்பி அப்பூதியென்னும்
பெருந்தகையே'

அப்பரின் பெயருக்குத் தான் எவ்வளவு பெருமை!

## வறுமை உரைகல்:

வறுமை செல்வத்தின் வளஞ்சொல்லும் உரைகல். நல்குரவில்நின்ருர் எய்தியக் கால் செல்வத்தின் சிறப்புணர்வர். இது தெரிந்த உலகியல். தெளிந்த நடை முறை. இந்நடைமுறையில் அப்பரின் வாழ் வை இணைக்கின்ருர் அவர்! "சைவத்தால் அப்பர் சிறப்புற்ருர் அதேசமயம் சைவமும் அப்பரால் சிறப்புற்றது: ஏன்?" ஆராய் கிருர் சிவப்பிரகாசர். அப்பர் சைவராகப் பிறந்தார். அப்போது அதன்பெருமை அவருக்குத் தெரியவில்லை. நம்பர் அருளா மையால்,சமணசமயத்திற்சென்ருர்.அங்கும் பெருமைபெற்ருர். இறுதியில், அதன் குற் றங்களை உணர்ந்தார். மீண்டும் சைவத் திற்கு வந்தார். சைவத்தையும் வளர்த்தார். சைவத்தால் தானும் வளர்ந்தார். எந்தப் பொருளையும் ஒருதடவை இழந்து பெற்ருல் தான் அதன்பெருமை தெரியும்' என்பது உண்மைதான் என எண்ணியவராய் கருத் துத் தெரிக்கிருர். கவிதை மலர்கிறது.

"ஊர்ந்து வரும்இள வேறுடை
யான்தன் உளத்தருளாற்
சார்ந்து சமண்வீட் டுறுமுனக் கேவரும்
சைவநலம்

கூர்ந்து மிளிர்தரு நாவரசே!

நல்குரவு முனஞ்
சேர்ந்து மருவினர்க்கே சிறந்தோங்கு
றும் செல்வமுமே''

பாராட்டுரைகள்:

இவ்வாறு இனிமையுடன் பத்துப்பாடல்களில் நாவுக்கரசரின் சிறப்புக்களைக் கூறும் சிவப்பிரகாசர், நாவரசரைச்'சொல்வேந்தர்' 'தாண்டகவேந்தர்,' என்ற பெயர்களாலும், அவரது பாடலை 'வீட்டிற்குவாயில் எனும் தொடை' என்றும் சிறப்பிக்கின்றார். அப்பரது பல அருட் செயல்களையும் தமது பத்துப்பாடல்களில் நயம்பட விளக்கும் திறன் நலஞ்சேர்க்கிறது.

''அப்பர்தம் நல்வழி அவனியுளார்
செல்வாறேல்

எப்பொழுதும் இல்லை இடர்.''



L O O K

FOR THESE TRADE MARKS
While Buying Aluminium Utensils & Kitchen Equipments
Crown and Sun brands utensils are made from guaranteed pure aluminium virgin metal. They are the best you can buy.
PLEASE DO NOT ACCEPT INFERIOR SUBSTITUTES MADE FROM SCRAPS OF DOUBTFUL COMPOSITION.
JEEWANLAL (1929) LTD.,
127, Mint Street, Madras-1.
CALCUTTA, MADRAS, BOMBAY, HYDERABAD, DELHI.

# அப்பரும் தாயுமானரும்

திரு. கீ. இராமலிங்கனர், எம்.ஏ., சென்னே

**முகப்புரை :**

'அப்பாவும் அம்மாவும்' என்னும் பொருள் தருவது போன்றிருக்கின்றது. இக் கட்டுரையின் தலைப்பு. அப்பர் பெருமான் தந்தைபோல் விளங்குகிறவரே. அப்படியே தாயுமானுரும் அன்னையுள்ளம் படைத்த வரே. இருவரது, காலம், சூழ்நிலை ஆட் கொள்ளப்பெற்ற மாண்பு, பாடல்களில் சொல்லும் பொருளும் ஒன்றிய பகுதிகள் இவற்றை ஓரளவு சிந்திப்பதே இக்கட்டுரை யின் நோக்கம்.

**தந்தையும் தாயும்:**

திருநாவுக்கரசு நாயனுரை முதல் முதலில் கண்டபோது, திருஞானசம்பந்தப் பெருமானுக்கு, ஒரு தந்தை நிலையில் உள்ள வரைக் காண்பதுபோலிருந்தது. எனவே, கண்டதுமே, 'அப்பரே' என்று அன்புகனிய அழைத்தார். கயிலை எய்தியபோது அப்பர் பெருமானை 'அப்பர்' என்று ஆண்டவரே அழைத்ததாக வரலாறு உண்டு. எனவே திருநாவுக்கரசுப் பெருமான் அடியவருக்கும் அப்பர், ஆண்டவர்க்கும் அப்பர் அனை வர்க் கும் அவர் தந்தையே. தாய்த் திருவுருவில் சென்றுமகப்பேறு மருத்துவம் பார்த்ததை நினைவு கூர்வதற்காகத் திருச்சிராப்பள்ளி மலைமீது எழுந்தருளியுள்ள இறைவருக்கு அமைந்த 'தாயுமானவர்' என்னும் திருப் பெயரே தாயுமானுர்க்கு இடப்பெற்றது. எனவே, தாயுமானுர் நம்மனோர் எல்லோர்க் கும் தாய் அனையவரே.

பெயரளவிலே மட்டுமின்றி இருவரும் அவர்களது அருட்பாடல்களாலும் அம்மை யப்பராகத் தோன்றுகின்றனர். ஒரு தகப்ப னுர் கூறுவனபோன்ற சொல்லுறுதி கொண் டன, அப்பர் பெருமானின் அருட் பாடல் கள். அவர், மனிதகுலத்தை விளித்துக் கூறும் இப்பாடலின் நடையைப் பாருங்கள்!

'மனிதர்காள்! இங்கேவம்! ஒன்றுசொல்லு கேன்,
கனி தந்தால் கனி உண்ணவும் வல்லிரே,
புனிதன், பொற்கழல் ஈசன், எனும் கனி
இனிது சாலவும், ஏசற்றவர்கட்கே '

இனி தமக்குத்தாமே கூறிக்கொண்டு, தமது நிலைக்கு இரங்குவதுபோலக் காட்டி, மக்கள் அவர்களது அவல நிலையை உணர்ந்து, 'அருளாளர் கூட்டத்தைச் சேர வேண்டுமே, என்னும் எண்ணத்தை, அவர் கள் உள்ளத்தில்எழுப்பும் பின்வரும் பாடலை யும் காணுங்கள்.

'புழுவுக்கும் குணம் நான்கு, எனக்கும் அதே,
புழுவுக்கு, இங்கு எனக்குள்ள பொல் லாங்கில்லை,
புழுவினும் கடையேன், புனிதன் தமர்
குழுவுக்கு, எவ்விடத்தேன் சென்று கூடவே'

தாயுமானுரின் பாடல்களில் கண்ணீர் பெருக்கும்தகையன பல. அவை தாயின் நீர்மையுடையன.

'உண்ணிறைந்த பேரன்பால், உள்ளுருகி, மொழிகுளறி உவகையாகிக்
கண்ணிறைந்த புனல் உகுப்பக் கரமுகிழ்ப்ப,
விண்ணருளைக் கருத்தில் வைப்பாம்'

'கண்ணீர் சொரிய இருகரங்குவித்துத் தொழுதல் செய்வாம்?'

'கண்ணுர நீர்மல்கி உள்ளம் நெக்குருகாத கண்ணனேன்'

'எந்தநாள் கருணைக்குரித்தாகு நாள் எனவும்
என் இதயம் எனை வாட்டுதே?'

'பந்தமானதில் இட்டமெழுகாகி உள்ளம் பதைத்துப் பதைத்துருகவோ?'

'இனியேது எமக்கு உன்னருள் வருமோ
எனக்கருதி
ஏங்குதே நெஞ்சம் ஐயோ!'
'எந்தநிலை யேசினும் இணங்கவில்லை,
அல்லால்
இறப்பொடு பிறப்பையுள்ளே
எண்ணினுல் நெஞ்சது பகீர் எனும்
துயிலுரு (து)
இருவிழியும் இரவு பகலாய்ச்,
செந்தழலின் மெழுகான(து) அங்கம்,
இவை என்கொலோ?'

இப்பாடல்களில் தாயுமானுரின் உருகும் தாய் நெஞ்சத்தைக் காணலாம். அவருடைய கண்ணிகள் அவ்வளவும் தாயர் உள்ளக்கவலை கொண்டபோது உருகிப் பாடுவன போன்றவை.

இருவர் பாடல்களிலும் இங்கு எடுத்துக்காட்டியன, பாடல்களின் பெரும்போக்கான தன்மையைக் குறிப்பனவே. அப்பர் பெருமானின் பாடலில் தாய்க்கனிவு இல்லையென்ருே தாயுமானுரின் பாடலில் தந்தைப் பெருமிதம் இல்லையென்ருே கொள்ளல் கூடாது.

## இடையில் ஆயிரம் ஆண்டு

இருவரும் இருந்த காலத்துக்கு இடையில், ஆயிரம் ஆண்டுகள் இடைவெளி உண்டு. அப்பர் பெருமான் ஏழாம் நூற்ருண்டில் வாழ்ந்தவர். தாயுமானுர் பதினேழாம் நூற்ருண்டில் வாழ்ந்தவர்! இவ்வாயிரம் ஆண்டுகளில் எத்துணை எத்துணையோ மாறுதல்கள், நாட்டில் ஏற்பட்டுவிட்டிருந்தன. பல்லவர் ஆட்சியிலே அப்பர் இருந்தார். நாயக்கர் ஆட்சியிலே தாயுமானுர் இருந்தார்.

அப்பர் பெருமான் தோன்றியருளிய காலத்திலே, நாட்டில் கடவுள் உணர்வு குன்றுவதற்கான சூழ்நிலைகள் இருந்தன. இறை நம்பிக்கையில்லாத மக்கள் பகுதியினரே நாட்டில் செல்வாக்குடையவர்களாக இருந்தனர். அவர்கள் கொள்கையையே மன்னவனும் கொண்டிருந்தான். தமிழ்மொழி, சிவநெறியைப் பொறுத்த மட்டில், மறக்கப் பெற்றிருந்தது என்னலாம்.

திருநெறிச் செய்திகளைத் தமிழில் எடுத்து இயம்பினுல்தான், மக்கள் அந்நெறியின் சிறப்பினை உணரவும், அதில் பற்றுக்கொண்டு அதனைக் கடைப்பிடித்து ஒழுகவும், கூடும் என்பது திருவருள் குறிப்பாக இருந்தது. அதுபோது தோன்றியருளிய அப்பர் பெருமான் தமிழால் இசைபாடி தமிழால் சென்றவிடமெல்லாம் செந்நெறியைப் பரப்பினுர். தமிழின் மேன்மையை—அருள் நெறி வாழ்வுக்குத் தமிழின் இன்றியமையாமையை எடுத்து ஓதிவந்தார்.

அவர் பாடல்கள் யாவும் தனித்த இனிய தமிழ் மொழியால் இயன்றவை. சிவபெருமானை 'தமிழன்' என்கிருர். 'தமிழே இறைவனின் இன்ப வடிவம்' என்றும் இயம்புகிருர். வடமொழியையும் போற்றிக் கொண்டு, தமிழுக்கு நடுநாயகமான இடம் அளிக்கிருர்.

'வடமொழியும் தென்தமிழும் மறைகள்
நான்கும்
ஆனவன் காண்.'

அவனை 'எண்ணும் எழுத்தும் சொல்லாருய்ப்போற்றி' என்று போற்றுகிருர். வடமொழிவேதங்களையும் ஆறங்கங்களையும், பல இடங்களில் சுட்டிக்கொண்டே வந்தாலும் அப்பர் பெருமான் 'விரித்தானை நால்வர்க்கு வெவ்வேறு வேதங்கள்' என்னும்தொடரால் போந்த, நான்மறைகள், எவை என்பது பற்றிய, உண்மைக் கருத்தை நினைவில் கொண்டிராமல் இல்லை. அறம் பொருள் இன்பம் வீடு குறித்த மெய்ம்மறைகளைக் கல்லால நிழலின்கீழ், நால்வர்க்கு உணர்த்திய செய்தியை மறந்துவிடவில்லை.

தாயுமானுர் தோன்றிய காலத்தில் வடமொழிக்கு ஏற்றம் இருந்தது. மன்னன் தெலுங்கு மொழியினனுக இருந்ததால், அம்மொழியைத் தமிழினின்றும் தனியாக்கி, அதற்கு வளமூட்டிய வடமொழிக்குச் செல்வாக்கு இருந்ததில் வியப்பில்லை. தமிழும் போற்றப்பெற்று வந்தாலும், வடமொழி வல்லமை, தமிழுக்கு ஆக்கந் தருவதாகக் கருதப்பெற்றது.

தாயுமானுர் தமிழில் இயல்பான ஆற்றல் நிறைந்திருந்ததோடு, வடமொழியிலும் மேன்மை பூண்டிருந்தார். எனவே, அவர் பாடல்களில் வடமொழிக் கலப்பை வளமாகச் செய்துள்ளார், என்ருலும், காதுக்கு இன்னேசை விளைகின்ற வகையிலேயே

தமிழோடு வடமொழியைப் பிணைத்துப் பாடுவது அவரது சிறப்பு. விரவிவரும் வட சொற்களின் பொருள் பாடல்களைப் படிப் போர்க்கு, விளங்காவிட்டாலும், பாடல்களை விரும்பி ஓதவும், இன்ப உணர்வு பெறவும், ஏற்றதன்மையிலேயே, அவ்விரவல் அமைந் திருக்கின்றதைக் காணலாம்.

வடநூல்களை, சிவநெறிக்கண் கொண்டு, துருவிப்படித்தவர் தாயுமானுர். சிலர், வட மொழியைக் கற்றதன் விளைவாகத் தமிழ் நெறியின் பெருமையை மறந்துவிடுவ துண்டு. தம்மை வடமொழியாளர் என்றே ஏமாந்து எண்ணிக்கொண்டு, வடநூற்கருத் துகளுக்கே ஏற்றந்தந்து பேசுவதுண்டு. ஆனல், தாயுமானவப் பெருமானுர், வடநூற் பொருள்களை எத்துணைப் பயின்ருலும்,

"'அத்துவிதம்' என்ற அந்நியச் சொல்
கண்டுணர்ந்து
சுத்த சிவத்தைத் தொடருநாள்
எந்நாளோ?''

என்று இரங்கும், சிவநெறியுள்ளம் மாருதவ ராக இருந்தார். ஏகான்மவாதக் கருத்துச் செறிந்த வடநூற்பகுதிகளை மூளையில் ஏற்றிக்கொண்டபோதும்,

'ஆணவத்தோடு அத்துவிதமானபடி
மெய்ஞ்ஞானத்
தானுவினேடு அத்துவிதம் சாருநாள்
எந்நாளோ?'

என்றே, சிவமெய்க் கலையுணர்வு, முற்றிக் கைவரும் நாளை, எதிர்நோக்கி ஏக்கமுறு கிருர். 'சைவ சமயமே சமயம்' என்று செம் மாந்து விளம்பும் அவரது முடிந்த முடிபான விதந்துரையையும், கண்டு பெருமிதம் அடைகிருேம்.

## மற அருள் மாண்பு:

அப்பர் பெருமான்; கடவுள் உண்டு என்பதை உணராத புறநெறியில் சென்று, அந்நெறியை விளக்கும் பெருந்தலைவராகத், 'தருமசேனர்' என்னும் பட்டத்தோடு, விம் மிதமுற்றிருந்தார் என்பது வரலாறு. அவரை, இறைவன் மறை அருள் காட்டி ஆளாது இருந்திருந்தால், அவர் அந்நெறியிலே உழன்று, தாமும் உய்யாமல், நாட்டையும் உய்விக்க வாய்ப்பில்லாமல், சென்று விட்டி ருப்பார்.

திடும் என, ஒருநாள், அவருக்கு இறை வரது மறை அருள், இருள் வடிவான சூலை நோயாக, அவரது வயிற்றின் அகம் படிந்தது. அப்பிணி, அவரை, 'வயிற்ருேடு துடக்கி முடக்கியிட்டது', 'நஞ்சாகி வந்து' அவரை நலித்தது. அந்நோய் தம்மை, 'நணுகாமல் துரந்து கரந்தும் இடர், அஞ்சேலும் என்னீர்' என்று கடவுளிடம் முறையிடுகிருர். கூற்றுப் போன்ற இப் பிணியை ஆண்டவன் அவருக்குத் தந்து அதே நேரத்தில் அவருள்ளத்தில் ஆண்ட வர்பால்அன்பு ஊற்றெடுக்க அறக்கருணை பாலித்து, ஆண்டருளிச் சிவச்செந்நெறிக்கு அவரை ஆளாக்கிச் சிவப்பணி புரிய வைத்தார்.

இதே போல, தாயுமானவப்பெருமான் நாயக்க மன்னரிடம் அரசின் கணக்குத் துறைத் தலைவராக (Accountant general) அலுவல் ஆற்றிவந்தார். அவர் அப்படியே அவர் வாழ்வினைக் கழித்து விட்டிருக்கக் கூடும். ஆனல், இறைவன் மற அருள் காட்டி அவரையும் ஆட்கொண்டார்.

அரசியின் உள்ளத்தில், சிற்றின்ப வேட் கை எனும் பேய் வடிவில் அம்மறக்கருணை உருவாயிற்று. தாயுமானவத் தூய பெருந் தகையை, தன் வேட்கைக்கு ஆளாக்கிக் கொள்ள ஆசைப்பட்டாள் அரசி. தன் அரசினையும் நன்கொடையாகத் தர முன் வந்தாள். இது இறைவனின் மறக்கருணை. அதே நேரத்தில், இப் பேய்ச் சூழலி லிருந்து விடுபெறும் பெரும் பரபரப்பையும், பெயரா உறுதியையும். தாயுமானவர் திரு வுள்ளத்தில் இறைவன் வளரவிட்டார். ஆண்டவரின் மறக்கருணையும் அறக்கருணை யும் விரைந்து வேலை செய்யவே முடிவில், தமது உயர்வான அரசப்பணியை உதறித் தள்ளிவிட்டுத், தாயுமானப் பெரியார் வெளியேறினர்.

இவ்விரு பேரருளாளர்களும், இயல்பாக வே, சிவநெறிப்பற்று மிக்கவர்களாக இருந் தனர். அயல் நெறியாளர்களின் தலைவராக அமர்ந்திருந்த அந்நாளிலும், அப்பர் பெரு மான் சிவபெருமானை இறைஞ்சாமல் இல்லை.

'நெஞ்சம் உமக்கே இடமாகவைத்தேன்
நினையாது ஒருபோதும் இருந்தறியேன்'

என்றும்,

‘ஏற்ருய் அடிக்கே இரவும்பகலும்
பிரியாது வணங்குவன் எப்பொழுதும்’

என்றும்,

‘சலம்பூவொடு தூபம் மறந்தறியேன்
தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்
நலந்திங்கினும் உன்னை மறந்தறியேன்,
உன்நாமம் என் நாவில் மறந்தறியேன்’

என்றும், திருவதிகையில் இறைவனுல், தம் தமக்கையார் திலகவதியாரின் அருளார்ந்த இடையீட்டால், ஆட்கொள்ளப் பெற்ற போது, பாடுவதைக் காணுங்கால் பெருமானது உள்ளம் முன்பேமறைமுகமாகச் சிவ நெறியில் எத்துணை ஆர்வத்துடன் ஈடுபட்டிருந்தது என்பதை யறிகிருேம்.

அங்ஙனமே, தாயுமானுரும், திருநெறிநூல்களை ஓதல், மௌன குருபரனுரிடம் அருள் பெறல், கோவில் வழிபாடு ஆற்றல், இவற்றில் திளைத்திருந்த வண்ணமே, அரசப்பேரலுவலை ஆற்றிவந்தார். புறத்தே, புறச்சமயச் சார்பும், அரசப்பணியும் மூடிட்டு வந்தன வாயினும், அகத்தே இருவரும் அரன் அன்புநிரம்பி அகங்கசிந்துவந்தனர் என்பது இனிது விளங்குகின்றது. அன்பு, பழுத்துப் பயன்படும்நிலை எய்தியதும், பழத்தின் புறத் தோலை அறுத்தெறிந்து போக்குவதுபோல, இறைவன், இருவரது புறஈடுபாட்டிலிருந்து அவர்களை விடுவித்துவிட்ட மறக்கருணை மாண்பைக் கண்டு இறும்பூது எய்துகிருேம்.

### உள்ளத்தால் ஒருநிலையர் :

காலத்தாலும், சூழ்நிலையாலும், அப்பரும் தாயுமானுரும் வேறுபட்டிருந்தாலும், இருவரும் சிவநெறி, சிவமெய்க்கலை, அவற்றின் முடிந்த முடிவு, இவற்ருல் உள்ளத்தால் ஒத்தவர்களே. சிவநெறியிலும், மெய்க்கலையிலும் வழிவழியாக ஆழ்ந்தபற்றும், அடர்ந்த அடைவும், பெற்ற இருபெருஞ் சைவக்குடும் பத்திலே, பிறந்தவர்கள். தமிழ்மரபில் தோய்ந்தவர்கள். எனவே, இருவருக்கும் கொள்கைகளில் வேறுபாடு ஏதும் இல்லை.

தாயுமானுர், அப்பர்பெருமானுக்கு நெடுங்காலம் பிந்தியவராதலின், அப்பெருமானின் அருட்பாடல்களை அகனமர்ந்து படிக்கும் வாய்ப்பு அவருக்கு இருந்தது. அப்பெருந்தகையைப்பற்றிய வரலாற்றுச் செய்திகளைச் சேக்கிழார் பெருமானின் சொல்லோவியத்தால், அறிந்து, சுவைத்து ஈடுபட்டவர். எனவே, அப்பமூர்த்தியினைக் குறித்துத் தம் பாடல்களில் பொன்னெழுத்துக்களால் பொறித்துள்ளது இயல்பே.

‘மூவர் பனுவலது பகரவோ, இசையு மில்லை’ என்று, தேவாரங்களை இசையோடு ஓத அவருக்கு இருந்த அவாவினை வெளிப்படுத்துகிருர்.

மூவர்சொலும் தமிழ்கேட்கும் திருச்செவிக்கே மூடனேன் புலம்பியசொல் முற்றுமோதான்’ என்று தேவாரப் பாடல்களின் சிறப்பைப் போற்றுகிருர். ‘சிவனப்பா! என்ற அருட் செல்வத்தேவே!’ என்று ஞானப் பால் உண்டு சிவனுகவே விளங்கிய ஞான சம்பந்தர் அப்பரடிகளை ‘அப்பரே!’ என்று அழைத்த செய்தியை உருக்கத்துடன் குறிக்கிருர். கயிலையிலமர்ந்த சிவன் அப்பா என்று அப்பரை அழைத்த செய்தியையும் இது குறிக்கும்.

அப்பர் பெருமான் இருநிலனுய்த் தீயாகி என்று தொடங்கிப்பாடிய திருத்தாண்டகப் பாடலின் அருமையை வியந்து சுட்டி,

‘இருநிலனுய்த் தீயாகி’ என்ற
திருப்பாட்டின்
‘பெருநிலையைக் கண்டணைந்து
பேச்சறுவது எந்நளோ?’

என்று, தமது எந்நாட் கண்ணியில் ஏசறுகிருர்.

அப்பர்பெருமானின் கருத்துகளை அடியொற்றி, அவரது அருள்மொழிகளையும் அப்படி அப்படியே, தம்பாடலில் பொருத்திப் பாடியுள்ள இடங்கள் பல உண்டு. ஆனுல் அவற்றில் சிலவற்றையே இங்குக் குறிக்க இடமுண்டு.

‘தன்கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணிசெய்து கிடப்பதே’
—அப்பர்.

‘என்னைபுரப்பது அருளின் கடனும்,
என்கடனும்
நின்னிற் பணியறவே நிற்கை’
—தாயுமானுர்.

'மனைவிதாய், தந்தைமக்கள் மற்றுள்
சுற்றம், என்னும்
வினையுளே விழுந்தழுந்தி, வேதனைக்கு
இடமாகாதே'
—அப்பர்.

'மனைவி புதல்வர் அன்னை பிதா மாடு
வீடென்றிடும் மயக்கம்
தனையும் மறந்து இங்கு உனைமறவாத்
தன்மை வருமோ தமியேற்கே'
—தாயுமானுர்.

'தந்தை தாய் தமர் தாரம் மகவு என்றும்
இவைஎலாம்
சந்தையில் கூட்டம் இதுவோ
சந்தேகம் இல்லை'
—தாயுமானுர்.

'தந்தை தாயொடு தாரம் எனும் தளைப்
பந்தம்' —அப்பர்

'தந்தை தாய் தமர் மகவு எனும் அவை
எலாம் சகத்தில்
பந்தமாம்' —தாயுமானுர்.

'அப்பன்நீ அம்மைநீ' —அப்பர்.

'தந்தை தாயும்நீ' —தாயுமானுர்.

'ஆட்டுவித்தால் ஆர்ஒருவர் ஆடாதாரே'
காண்பார் ஆர் கண்ணுதலாய்க்
காட்டாக்காலே'' அப்பர்.

'கூத்தாட்டினையே' —தாயுமானுர்.

''அவன் அன்றி ஓரணுவும் அசையாது
எனும் பெரிய
[1] ''ஆப்தர் மொழி'' —தாயுமானுர்

'வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்'
—அப்பர்.

'வாயுண்டு வாழ்த்த மவுனம்செய்போது
மவுன அருள் தாயுண்டு
தாயுமானுர்'

'கரவாடும் வன்நெஞ்சர்க்கு அரியானைக்
கரவார்பால்
விரவாடும் பெருமானை'
—அப்பர்,

'பொய்வளரு நெஞ்சினர்கள் காணுத
காட்சியே
பொய்யிலா மெய்யர் அறிவில்
போதபரிபூரண அகண்டிதாகாரமாய்ப்
போக்குவரவற்ற பொருளே!'
—தாயுமானுர்.

'பூக்கைக்கொண்டு பொன்னடி
போற்றிலன்' —அப்பர்.

'புல்லாயினும் ஒருபச்சிலையாயினும்
போட்டிறைஞ்சி
நில்லேன்'
—தாயுமானுர்,

'எண்ணுகேன் என்சொல்லி எண்ணு
கேனே
எம்பெருமான் திருவடியே எண்ணின்
அல்லால்'
—அப்பர்.

'உன்தன் குரைகழல் குறுகின் அல்லால்
ஆறுமோ தாபசாபம் அகலுமோ
அல்லல்தானே'
—தாயுமானுர்.

இவ்வாறு சொல்லும் பொருளும் இணைந்து பொருந்தும் தொடர்கள் இன்னும் எத்தனையோ உண்டு.

---

[1] 'ஆப்தர்'என்று தாயுமானுர், அப்பர் பெருமானையே குறிக்கின்ருர் எனத் திருப்பனந்தாள் பதிப்பில் காணலாம்.

முடிப்புரை!

அப்பர் பெருமானைப் பின்பற்றினுர் தாயுமானுர். இருவரும் சைவச் செந்நெறியைப் பின்பற்றி ஒழுகி, அருள்வாழ்வு வாழ்ந்து, பின்வந்த நம்மனோர்க்கு வழிகாட்டியருளிச் சென்றுர்கள். நாம் யாரைப் பின்பற்றுகிறேம்? அப்பர் அடிகளின் பாடல்களில் தாயுமானுர் தோய்ந்தது போன்ற தோய்வு, நமக்கு உண்டா? இருவர் காட்டிய வழியில் நாம் செல்லுகிறேமா? இச்சிந்தனையில் ஈடுபடுவதற்காகவே இக்கட்டுரை பயன்படவேண்டுமென்றும் அருள்நோக்குடன், நம் தருமபுரத் திருமடத்தின் தம்பிரான் அடிகளார் அவர்கள், இதனை, என்பால் கொண்ட பரிவால், நான் எழுதுமாறு பணித்தார்கள். ஏதோ எழுதினேன் எவ்வளவு வரை பயன் படுமோ!




Estd : 1945 Phone : 34121-34789

**A GIFT for all accasions**

**QUALITY STAINLESS STEEL UTENSILS**

*BUY FROM*

**M/s. N. Kasiviswanatha Aiyar & Sons.,**

*Dealers in :*

*STAINLESS STEEL UTENSILS AND COOKERS*



**3/21, N. S. C. Bose Road,**

**CHINA BAZAAR, MADRAS-1.**

# அப்பரும் சிவஞானசுவாமிகளும்

திரு. சு. சாமி ஐயா, எம் ஓ.எல்., சிதம்பரம்

மூவரில் ஒருவரே துறவுக்கோலத்தோடு காட்சி தருபவர். பாலருவாயராகிய ஞான சம்பந்தப் பெருமானும், 'ஒரு மணத்தைச் சிதைவு செய்து வல்வழக்கிட்டாட்கொண்ட உவனைக்கொண்டே யிருமணத்தைக் கொண்டருளிப் பணிகொண்ட வல்லாளன்' ஆகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளும் பெருத துறவுப் பேற்றினைப் பெற்றவர் வாகீசர் ஆவார். எனவே, அப்பர் அடிகளின் வேடப்பொலிவில் ஈடுபட்ட சேக்கிழார்,

> 'தூயவெண் ணீறு துதைந்தபொன்
> மேனியுந் தாழ்வடமும்
> நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையும்
> நைந்துருகிப்
> பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும்
> பதிகச் செஞ்சொல்
> மேயசெவ் வாயும் முடையார் புகுந்தனர்
> வீதியுள்ளே'

(பெரிய. புரா. திருநாவு. 140 என்று கூறுகின்றார். துறவை அவாவி இளமையில் அதனை மேற்கொண்டு வாழ்ந்த சிவஞான சுவாமிகளுக்கு வாகீசப் பெருந்தகையிடத்தில் ஈடுபாடு ஏற்பட்டதில் வியப்பு ஒன்றும் இல்லை. ஞான முனிவராய்த் தமிழ்ஞால மளந்த சுவாமிகள் பற்பல இடங்களில் ஞான வேந்தரர்கிய தாண்டகவேந்தரின் வேடப் பொலிவிலும், பாடற் பொலிவிலும் ஈடுபட்டுப் போற்றியும் புகழ்ந்தும் கூறுகின்றார்.

சிவஞான முனிவர் இயற்றிய பல சிற்றிலக்கியங்களுள் ஒன்று சோமேசர் முதுமொழி வெண்பாவாகும். இது திருக்குறளின் ஒவ்வோர் அதிகாரத்தும் ஒரு குறளெடுத்து அதற்கு விளக்கமாக எடுத்துக் காட்டொன்றைக் காட்டிக் குறள் கருத்தை நிறுவுகின்ற நூலாகும். ஊழ் என்னும் அதிகாரத்தில் சிறந்த குறளாக முனிவர் கருதியது ;

> "பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்றும்
> ஆகலூ ழுற்றக் கடை" (திருக்கு. 372)

என்னும் குறளே ஆகும். இக்குறள் கருத்தை விளக்குவதற்குத் திருநாவுக்கரசர் வரலாற்றையே சான்றாகக் காட்டுகின்றார். 'தவமென்று பாயிடுக்கித் தலைபறித்து நின்றுண்ணும் அவமொன்று நெறிவீழ்வான் வீழாமே அருளும்'' எனக் கூறிய திலகவதியார் கனவில் தோன்றி, 'உன்னுடைய மனக்கவலை ஒழிநீ உன்னுடன் பிறந்தான் முன்னமே முனியாகி எனை அடையத் தவமுயன்றான், அன்னவனை இனிச் சூலை மடுத்தாள்வன்' என்று இறைவன் கூறியருளிய நிலையினைச் சேக்கிழார் பெருமான் கூறுகின்றார்.

பொருள் இழத்தற்குக் காரணமான பேதைத் தன்மையை இழவூழும்; பொருள் ஆவதற்குக் காரணமான அறிவைப் பெருக்கும் தன்மையை ஆகூழும் தரும் என்பதே மேற்காட்டிய குறளின் கருத்தாகும்

"ஒருவனுக்கு எல்லா அறிவும் உளவாயினும், கைப்பொருளிழத்தற் கேதுவாகிய ஊழ்வந்துற்ற விடத்து அஃது அதனைப் பேதையாக்கும்; இனி அவனறிவு சுருங்கியிருப்பினும், கைப்பொருளாதற்கேதுவாகிய ஊழ்வந்துற்ற இடத்து அஃததனை விரிக்கும், எனப் பரிமேலழகர் இக்குறளுக்கு உரைகூறினர். இதன் கண் கைப்பொருள் என்பதற்கு விளக்கம் கூறவந்தவர், "ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்' என்ற முதற் குறளால் 'கைப் பொருளென்பது அதிகாரத்தான் வந்தது' என்றும் கூறினர்.

இக்குறளுக்கு விளக்கம் கூறவந்த மாதவச் சிவஞான யோகிகள்,

''முன்னர் சமண்மதத்து மூண்டரசர் பின் சைவந்
துன்னியது மென்வியப்போ சோமேசா—உன்னுங்கால்
பேதைப் படுக்கும் இழவூழ் அறிவகற்றும்
ஆகலூழ் உற்றக் கடை'' (சோமே: 38)

என்று கூறினார்கள். ஈண்டு சுவாமிகள் பொருள் என்பதை மெய்ப் பொருளாகிய இறைவன் என்றே பொருள் கொள்கின்றார். சைவ சமயமே மெய்ப்பொருளைத் தருதற்கு உரியது என்றும், பிற சமயமாகிய அமண் சமயம் அம்மெய்ப் பொருளை இழக்கச் செய்தது என்பதனையும் 'அமண்மதத்து மூண்டு என்பதனாலும், 'சைவந்துன்னியது மென் வியப்போ' என்று கூறிச் செல்லும் நிலையில் சுட்டிச் செல்கின்றார். பொருள் என்பதற்குக் கைப்பொருள் என்று பரிமேலழகர்கொண்ட பொருளைக் காட்டிலும் சுவாமிகள் கொண்ட பொருள் ஒருபடி உயர்ந்து விளங்குகின்றது.

இனி, அடுத்த நிலையில் இவ்வெண்பாவில் சிந்திக்கத்தக்கது மற்றொன்று உண்டு. ஆகூழ் வருங்கால் அறிவு விரியப்பெறும் என்பதே வள்ளுவர் குறளால் கிடைக்கும் கருத்தாகும். போகூழைப் பொருத்தவரை மருள் நீக்கியார் அறிவு, சமண் சமயம் சேர்ந்த நிலையில் பேதைப்பட்டது என்று கூறுதல் பொருந்தும். ஆனால், மீண்டும் வருங்காலத்தில் சூலைநோய் வந்து வந்தாரே அன்றி அறிவு பெருகிற்று எனக்கூற இடமில்லாதிருப்பதாகச் சிலர் எண்ணக் கூடும். சுவாமிகள் அப்பர் அடிகளின் வாழ்க்கையை எண்ணி எண்ணியே அதனை அமைத்துள்ளார். இடறி வீழ்கின்றவன் இடறிய கல்லுக்குக் கீழே ஒரு பொன் கிடந்தால் கல்லை வாழ்த்தத்தானே செய்வான்? அதுபோலக் கிட்டாத மெய்ப்பொருளைக் கிட்டுமாறுசெய்ய இறைவனாலே கொடுக்கப்பட்டது இச்சூலை நோய். அதற்கு எவ்வாறு கைமாறு செய்வதென்றே தெரியவில்லை எனச் சேக்கிழார் கூறுகின்றார். இதனை நாவுக்கரசர் பெருமான் கூற்றாகவே அமைத்து,

''பொய்வாய்மை பெருக்கிய புன்சமயப் பொறியில் சமண்நீசர் புறத்துறையாம். அவ்வாழ்குழியின்கண் விழுந்தெழு மாறறியாது மயங்கி அவம் புரிவேன்; மைவாச நறுங்குழல் மாமலையாள் மணவாளன் மலர்க்கழல் வந்தடையும், இவ்வாழ்வு பெறத்தரு சூலையினுக் கெதிர்செய் குறை என் கொல்? எனத் தொழுவார்''

எனக் கூறுகின்றார். எனவே முனிவர், அறிவிற்குக் காரணமாகிய சூலைநோயை அறிவாகவே கொள்ளுகின்றார். இதனால், சுவாமிகள் சொற்கோவின் வரலாற்றினை ஊன்றி எண்ணியுள்ளமை இனிது புலனாகின்றது.

துறவின் பெருமையைப் பல விடங்களில் புலப்படுத்துகின்றார்; ஒன்றினை மட்டும் பார்க்கலாம். குறிஞ்சி வாழ் பொருப்பர்தம் வாழ்வினுக்கு உவமை காட்ட வந்தவர்,

''முருக வேட்கிடு தூம மோம்புற முளிய கில் சந்
துருவ வாரமுற் பெய்து புன்பயிர் விளைத்துவப்பார்
பெருவளந்துறந்தூர் தொறுமிடுபலி பேணும்
பொருவில் வாழ்க்கையர்தஞ் செயல் போன் மெனப் பொருப்பர்''
(காஞ்சிப் : திருநா; 39)

எனத் துறந்தோருடைய வாழ்க்கையைக் காட்டுகின்றார். பெருஞ்செல்வத்தைக் கைவிட்டு ஊர்கள் தோறும் சென்று பிறரிடும் பலியை விரும்பியேற்கும் ஒப்பிலாத துறவற வாழ்க்கையை யுடையோர் செயலை ஒக்கும் என்று கூறும்படி, மலையில் வாழும் குறவர்கள் முருகக்கடவுளுக்குப் புகையினை ஓம்பப் புறத்தில் உலர்ந்த அகில் கட்டைகளையும் சந்தனக் கட்டைகளையும் நிறைந்த தீயிற் போட்டுப் புல்லிய தினைமுதலிய பயிர்களை விளைவித்து மகிழ்வார்கள் என்ற கருத்தமையக் கூறினார். இதில் விலை மதிப்பு மிக்க சந்தனம் அகில் முதலியவற்றை எரித்தும், புன்பயிரை விளைவித்து மகிழ்தலுமே, துறவினை இவர்கள் வாழ்க்கைக்கு உவமை கூறுதற்கு ஏற்ற தாயின. அப்பரடிகள் உழவாரப்படை நுழைந்த இடத்தெங்கும் பொன்னினொடு நவமணிகள் பொலிந்திலங்கின.

''செம்பொன்னும் நவமணியும் சேண் விளங்க ஆங்கெவையும்
உம்பர் பிரான் திருமுன்றில் உருள்பருக் கை யுடன் ஒக்க
எம்பெருமான் வாகீசர் உழவாரத் தினில் ஏந்தி
வம்பலர்மென் பூங்கமல வாவியினிற் புக எறிந்தார்''
(பெரி: 416)

எனச்சேக்கிழார் ஓடும் செம்பொனும் ஒக்க வே நோக்கிய வாகீசர்தம் துறவு நிலையினைத் தெளிவுறுத்துகின்ருர். இதனை, ''புல்லோடும் கல்லோடும் பொன்னேடும் மணியோடும் சொல்லோடும் வேறுபா டிலா நிலைமை'' (பெரி : 417) எனவும் கூறுகின்ருர்.

தாண்டக வேந்தர் கூற்ருகவும் இத் துறவு வாழ்வின் நிலையினைக் காணலாம்,

''அகலிடமே இடமாக ஊர்கள் தோறும்
அட்டுண்பார் இட்டுண்பார் விலக்கார் ஐயம்
புகலிடமாம் அம்பலங்கள் பூமிதேவி
உடன்கிடந்தால் புரட்டாள் பொய் யன்று மெய்யே
இகலுடைய விடையுடையான் ஏன்று கொண்டான்
இனியேதும் குறைவிலோம் இடர்கள் தீர்ந்தோம்
துகிலுடுத்துப் பொன்பூண்டு திரிவார் சொல்லும்
சொற் கேட்கக் கடவோமோ துரிசற்ருேமே''

என்ற பாடலில் அழகுறப்புலப்படுத்துகின்ருர். சிவஞானசுவாமிகள் 'ஊர்தொறுமிடுபலி பேணும்' என்ற அடியை இப்பாடலை நினைந்தே கூறுகின்ருர் என்று கூறவும் வேண்டுமோ?

இனி, காஞ்சிப் புராணம் சிறப்புப் பாயிரத்தில் நால்வர் துதி கூறுகின்ற இடத்து வாகீசப் பெருந்தகையின் உருவினைக் கண் முன்னிறுத்துமாறு அவர் வடிவினை வடித்துக் காட்டுகின்ருர்:

''இடையருப் பேரன்புமழை வாருமிணை விழியுமுழவாரத்தின்
படையருத் திருக்கரமுஞ்சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சு
நடையருப் பெருந்துறவும் வாகீசப்பெருந் தகைதன் ஞானப்பாடற்
ருெடையருச் செவ்வாயுஞ் சிவ வேடப் பொலிவழகுந் துதித்துவாழ்வாம்''
(காஞ் : 18)

என்று அப்பர் துதி பாடுகின்ருர்.

'சலம் பூவொடு தூபமறந்தறியாதவரை' இடையருப் பேரன்புடையவர் என்ருர். 'கண்ணும் பொழிமழை ஒழியாதே' என்று கூறியதனை மழைவாரு மிணை விழிஎன்று கூறி, ஊறுபடாத துறவு என்பதினைச் சுட்ட நடையருப் பெருந்துறவும் என்று கூறுகின்ருர். 'பதிகச் செஞ்சொல் மேயசெவ்வாய்' எனக் கூறிய சேக்கிழார் பெருமான் வாக்கினை நயப்படுத்தி'ஞானப்பாடல் தொடையருச்செவ்வாயும் எனக்கூறுகின்ருர். இப்பாடலில் இறைவன் பால் பதித்த நெஞ்சும் ஞானப்பாடல் கூறும் வாயும், உழவாரப்படை தாங்கிய கைகள் என்றமையால் செயலும் ஆயமூன்றும் திருவருட் பணிக்கே ஆக்கினமையை அழகுறப் புலப்படுத்துகின்ருர். இவ்வாறு சுவாமிகள் தெளிவுறச் சுட்டுதற்கு அவர்கள் வாழ்வும் தூய்மை உடையதாய் இருந்தமையும் வாழ்ந்து கண்ட அனுபூதிநிலையுமே காரணம் ஆகும்.

சுவாமிகளின் தோற்றப் பொலிவினைப் புலப்படுத்தும் ஒருதனிப்பாடல்,

''கருணைபொழி திருமுகத்தில் திருநீற்று நுதலும்
கண்டாரை வசப்படுத்தக் கனிந்த வாயழகும்
பெருமை தரு துறவோடு பொறையுளத் திற் பொறுத்தே
பிஞ்ஞகனுர் மலர்த்தாள்கள் பிரியாத மனமும்
மருவினர்கள் அகலாத ஞானமே வடிவாம்
வளர்துறைசைச் சிவஞான மாமுனி வன் மலர்த்தாள்
ஒருபொழுதும் நீங்காமல் எமதுளத்தில் சிரத்தில்
ஓதிடுநா வினிலென்றும் உன்னி வைத்தே உரைப்பாம்''

என்று அழகுறக்காட்டுகின்றது. இடையருப் பேரன்பு, பிஞ்ஞகனுர் மலர்த்தாள்கள் பிரியாத மனமும்'என்பதனுல் விளங்குகின்றது. 'ஞானப்பாடல் தொடையருச் செவ்வாயும்' என்ற தொடரோடு 'மருவினர்கள் அலகாத ஞானமே வடிவாம்' என்றதொடரும், 'கண்டாரை வசப்படுத்தக்கனிந்த வாயழகும் என்றதொடரும், 'கண்டாரை வசப்படுத்தக்கனிந்த வாயழகும் 'என்றதொடரும் ஒப்பிட்டுப்பார்த்து மகிழத்தக்கன. எவ்வாறு வேடப்பொலிவில் ஈடுபட்டு வாகீசப் பெருந்தகையைத்துதித்து முனிவர் வாழ்த்தினரோ அவ்வாறே அவரிடம் ஈடுபாடுகொண்டோர் 'வளர்துறைசைச் சிவஞான மாமுனிவன் மலர்த்தாள், ஒருபொழுதும் நீங்காமல்

எமதுளத்தில் சிரத்தில் ஓதிடுநாவினிலென் றும் நினைந்து கூறுகின்ற திறம் அமைந்துள்ளது. இதனால், திருநாவுக்கரசரிடம் ஈடுபாடு கொண்ட சிவஞான யோகிகள் நினைவு, சொல், செயல் எல்லாமே அப்பரடிகளுடைய மறுபதிப்பாக அமைந்து விட்டனவோ எனத் தோன்றுகிறது. இத்துறவுப் பொலிவினைச் சுவாமிகள் பலஇடங்களில் எண்ணி எண்ணி இன்புறுகின்ற நிலையினை,

"உள்ளொளி ததும்பிமேற் பொங்கிப்
புறத்தினும்
உவட்டெடுத் துப்பரந்தாங்
கொழுகொளிய வெண்ணீறு மெய்ம்
முழுதுமட்டித்
துயர்ந்தவடி யார்கள் குழுமி
வெள்ளொளியினுனுஞ் சிவத்துதி
முழக்கானும்"

என அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ் சப்பாணிப் பருவத்தில் கடலுக்கு உவமையாக அடியார்களைக் கூறுகின்றார். இவற்றால் கருத்துக்கள் மட்டுமல்லாமல் தோற்றப்பொலிவாலும் அப்பரடிகளைச் சுவாமிகள் ஒத்திருந்தமை இனிது புலனாகின்றது.



நமச்சி வாயவென் பாருள ரேலவர்
தமச்ச நீங்கத் தவநெறி சார்தலால்
அமைத்துக் கொண்டதோர் வாழ்க்கைய னாகிலும்
இமைத்து நிற்பது சால அரியதே

—அப்பர்: 5—977

செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று
பத்தி செய்மனப் பாறைகட் கேறுமோ
அத்த னென்றரி யோடு பிரமனும்
துத்தி யஞ்செய நின்றநற் சோதியே

—அப்பர்: 5—1007



# அப்பரும் இராமலிங்க அடிகளும்

தவத்திரு ஊரன் அடிகள், சமயபுரம்

அப்பர் முன்னவர். இராமலிங்க அடிகள் பின்னவர். முன்னவராகிய அப்பரைப் பின்னவராகிய இராமலிங்க அடிகள் எங்ஙனம் போற்றுகின்றனர், இருவரது கருத்தொற்றுமை யாது என்பதனைச் சற்று ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம். இராமலிங்க அடிகள், சமயகுரவர் நால்வரிடத்தும் பேரீடுபாடு கொண்டவர். நால்வரைப்பற்றி, ஆளுடைய பிள்ளையார் அருண்மாலை, ஆளுடைய அரசுகள் அருண்மாலை, ஆளுடைய நம்பிகள் அருண்மாலை, ஆளுடைய அடிகள் அருண்மாலை என நான்கு பாமாலைகளை அருளியிருக்கிறார். இந்நான்கும் சிவப்பிரகாச சுவாமிகள் அருளிய நால்வர் நான்மணி மாலையை ஒக்கும்.

ஆளுடை அரசுகள் அருண்மாலையில், 'உழவாரப்படை கைக்கொண்ட புண்ணியனே', 'ஆகம நெறியை வளர்க்க வந்த வள்ளலே', 'அப்பூதி அடிகட்கின்பம் தந்த பெருந்தகையே', 'சைவ அணியே' 'சைவக்கனியே', 'எங்கள் குல தெய்வமே' 'சைவக் கொழுந்தே' என்றெல்லாம் வள்ளற் பெருமான் அப்பர் பெருமானைப் போற்றுவர்.

திருப்புகலூர்த் திருத்தாண்டகத்தில் அப்பர் பெருமான் 'ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்' என அருளுகிறார்.

'எண்ணுகேன் என் சொல்லி எண்ணு
கேனோ
எம்பெருமான் திருவடியே எண்ணி
னல்லால்
கண்ணிலேன் மற்றோர் களைகண்
இல்லேன்
கழலடியே கைதொழுது காணின்
அல்லால்
ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்
ஒக்க அடைக்கும்போ துணர
மாட்டேன்
புண்ணியா உன்னடிக்கே போது
கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே.'

(6-99-1) 7215

இப்பாடலின் கருத்தையும், 'ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்' என்னும் தொடரையும் எண்ணி உருகும் வள்ளற் பெருமான் 'ஒண்ணுளே ஒன்பது வாய் வைத்தாய் என்ற உத்தமனே' எனப் போற்றிமகிழ்கின்றார்.

'கண்ணுளே விளங்குகின்ற மணியே
சைவக்
கனியேநா வரசேசெங் கரும்பே வேதப்
பண்ணுளே விளைந்தஅருட் பயனே
உண்மைப்
பதியோங்கு நிதியேநின் பாதம் அன்றி
விண்ணுளே அடைகின்ற போகம் ஒன்றும்
விரும்பேன்என் றனையாள வேண்டுங்
கண்டாய்
ஒண்ணுளே ஒன்பதுவாய் வைத்தாய் என்ற
உத்தமனே சித்தமகிழ்ந் துதவு வோனே'.

—திருவருட்பா, நான்காம்திருமுறை
—ஆளுடைய அரசுகள் அருண்மாலை 5.

ஒன்பது வாசலும் ஒக்க அடைக்கும் காலம் நமக்கொன்றுண்டு என்பதை நாம் கருதுவதில்லை. அப்பரும், வள்ளலாரும் அதனைக் கருதினர். இவ்விருவர்க்கும் ஒன்பது வாசலும் ஒக்க அடைத்ததில்லை. ஒன்பது வாய்ப் பாண்டமாகிய உடம்பே ஒளியுடம்பாகப்பெற்று இறைவனோ டிரண்டறக் கலந்தனர்.

கல்லொடு கட்டிக்கடலிற் பாய்ச்சப் பெற்ற அப்பர் பெருமான் நமச்சிவாயத் திருப்பதிகத்தைப் பாடிக் கல்லே தெப்பமாக மிதக்கப் பெற்றுக் கரையேறினார்.

'சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சிவாயே'

என்பது நமச்சிவாயத் திருப்பதிகத்தின் முதற்பாடல். சொற்றுணை வேதியன் எனத் தொடங்கும் நமச்சிவாயத் திருப்பதிகத்தில் மனத்தைப்பறிகொடுத்த வள்ளற்பெருமான்,

'சொற்றுணை வேதியன் என்னும் பதிகச் சுருதியைநின்
பொற்றுணை வார்கழற் கேற்றியப் பொன்னடிப் போதினையே
நற்றுணை யாக்கரை ஏறிய புண்ணிய நாவரசைக்
கற்றுணை யாதிநதக் கற்றுணை யாமென் கடைநெஞ்சமே'

—திரு அருட்பா, முதல் திருமுறை
திருஅருண்முறையீடு 132.

எனப் பாடுகின்றார். சமணர்கள் திருநாவுக்கரசரைக் கருங்கல்லில் கட்டி உவர்நீர்க் கடலில் வீழ்த்தினர்கள். நானும் கருங்கல்லிற் கட்டி கடலிடை வீழ்த்தப்பட்டு உழல்கின்றேன். என்னைக்கட்டியவர்கள் மாயையாகிய சமணர்கள். என்னைக்கட்டியது மனமாகிய கருங்கல்லில். என்னை வீழ்த்தியது பாவமாகிய கடலில். மாயைச் சமணரால் மனக் கருங்கல்லிற் கட்டப்பட்டுக் பாவக்கடலில் வீழ்த்தப்பட்டு உழல்கின்ற நானும் திருநாவுக்கரசரைப்போல் ஐந்தெழுத்தை ஓது கின்றேன். என்னையும் கரை ஏற்று அரசே! என இறைவனை வேண்டுகின்றார்.

'சீர்தரு நாவுக் கரையரைப் போலிச் சிறியனும்ஓர்
கார்தரு மாயைச் சமணுன் மனக்கருங் கல்லிற்கட்டிப்
பார்தரு பாவக் கடலிடை வீழ்த்திடப் பட்டுழன்றே
ஏர்தரும் ஐந்தெழுத் தோதுகின் றேன்கரை ஏற்றரசே.'

—திருவருண் முறையீடு 135.

இறைவன் திருநல்லூரில் திருநாவுக்கரசருக்குத் திருவடி தீக்கை செய்தருளிய திறத்தையும், 'நனைந்தனைய திருவடியென் தலை மேல்வைத்தார்' என அதனை அப்பர் பெருமான் கூறியருளுவதனையும் வள்ளற் பெருமான் நினைந்து நினைந்து மனங்குளிர்வர்.

'துடிவைத்த செங்கை அரசேநல் லூரில்நின் தூமலர்ப்பொன்
அடிவைத்த போதெங்கள் அப்பர்தம் சென்னியது குளிர்ந்தெப்
படிவைத்த தோஇன்ப மியான்எணுந் தோறும்இப் பாவிக்குமால்
குடிவைத்த புன்தலை ஒன்றோ மனமும் குளிர்கின்றதே'

—திருவருண் முறையீடு 151.

அப்பர் திருவடி தீக்கை பெற்றபோது அவரது சென்னி குளிர்ந்தது. அதனை எண்ணுந்தோறும் அடிகளது மனம் குளிர்கின்றது. என்ன ஈடுபாடு!

அப்பர் பெருமானின் அருள்வாக்குகளிலும், அவரது அருள் வாழ்க்கையில் நிகழ்ந்த அற்புதங்களிலும் வள்ளற்பெருமான் பெரிதும் ஈடுபட்டவர் என்பதனைத் திருவருட்பாவில் பலவிடங்களிற் காண்கிறோம்.

'என்கடன் பணிசெய்து கிடப்பதே' எனக்கிடந்தார் அப்பராகிய திருநாவுக்கரசர். 'தன்கடன் அடியேனையும் (அடியாரைத்) தாங்குதல்' என்று தாங்கினன் அப்பனாகிய இறைவன். இவ்வாறே வடலூர் மண்ணில் சங்கம் கண்டு, சாலை அமைத்து, சபை நிறுவிச்சன்மார்க்கம் வளர்த்துப்பணிசெய்து கிடந்தார் வள்ளலார். தாங்கித் தானாக்கிக் கொண்டான் அருட்பெருஞ் சோதியாம் அப்பன்.

'நமனையஞ்சோம்' என்றார் அப்பர். நமனுக்கு இனி இங்கு வேலை இல்லை என்றார் வள்ளலார். 'சென்று நாம் சிறு தெய்வம் சேர்வோமல்லோம்' என்றார் அப்பர். சிறு தெய்வ வழிபாட்டை ஒழித்தார் வள்ளலார்.

கொள்கையால், தொண்டினால், பெற்ற பேற்றால், இன்ன பலவயால் அப்பரும் வள்ளலார் இராமலிங்க அடிகளும் ஒப்புடையராவர்.

திருமணஞ்சேரியில் எழுந்தருளியுள்ள அருள்வள்ளல் நாயகரை வாழ்த்தும் அப்பர் பெருமான் 'மணஞ்சேரியெம் வள்ளலார் கழல் வாழ்த்தல் வாழ்வாவதே, என வாழ்த்துகின்றார், நாமும் அம்மொழியே கொண்டு வடலூரெம் வள்ளலார் கழல் வாழ்த்தல் வாழ்வாவதே' என வாழ்த்திஅப்பர் பெருமான் அடிமலர் பணிந்து அமைகின்றோம்.

அப்பர் பெருமான் அடிமலர் போற்றி.
வள்ளலார் கழல் வாழ்த்தல்
வாழ்வாவதே.

# அப்பரும் திருமூலரும்

திரு ம. சிவசம்பு, சங்கர் நகர்

## அருள் வாக்கு

தருமபுர ஆதீனப் பிரசார நிலையத்தில் அன்பர்கள் திரளாகக் கூடி இருந்தார்கள். திருவாமூர் அப்பர் அடிகள் குருபூசை விழாவுக்கான ஏற்பாடுகள் நடந்துகொண்டிருந்தன. ஸ்ரீமத் சோமசுந்தரத்தம்பிரான் சுவாமிகள் ஓய்வுஇல்லாமல் வேலை செய்துகொண்டிருந்தார்கள். நான் சுவாமிகளைத் தெரிசனம் செய்யச் சென்றேன். ஸ்ரீமத் சுவாமிகள் திருநாவுக்கரசரும் திருமூலரும் என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதவேண்டும் என்று சில கருத்துக்களைக் கூறினார்கள். சுவாமிகள் அருள் வாக்கைக்கொண்டே இக் கட்டுரையை வரைந்துள்ளேன்.

## நடமாடும் கோயில்

நடமாடும் கோயில் எது? இறைவன் எழுந்தருளியுள்ள இடத்தைக் கோயில் என்கிறோம். இறைவன் மக்களின் உள்ளக் கோயிலிலும்குடிகொள்ளுகிறான்; எப்போது? அகந்தைக் கிழங்கை அகழ்ந்து எடுக்கும் தொழும்பர் உள்ளக் கோயிலில் விளக்காக இருக்கிறான். காலையும் மாலையும் திருவடியைத் தொழுவார் உளத்தில் இருக்கிறான். 'நினைப்பவர் மனத்தைக் கோயிலாக் கொண்டவன்' சிவபெருமான் 'கோயிலா என் சிந்தை கொண்டாய் போற்றி' என்று கூறுகிறார் நாவுக்கரசர். அடியார் திருமேனி திருவுள்ளம் எல்லாம் கோயிலாகப் போற்றுதல் நம்மரபு. 'மாலர நேயமும் மலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரன்எனத் தொழுமே' என்பது சிவஞான போதம். நாவுக்கரசர் உடலை ஒரு கோயிலாக்கி அக்கோயிலை வாய்மையால் தூய்மைசெய்து மனமணி லிங்கமாக எழுந்தருளச் செய்து அதற்கு அன்பே நெய்யாகவும், பாலாகவும், நீராகவும் அபிடேகம் செய்து பூசனை செய்கிறார்.

"காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக
நேயமே நெய்யும் பாலாநிறைய நீரமைய வாட்டிப்
பூசனை யீசனார்க்குப் போற்றவிக் காட்டி னோமே."

மன்னன் கட்டிய கோயிலைவிட அடியார் மனக் கோயிலைத்தான் இறைவன் விரும்புகிறான்.

## திருமூலர் காட்டும் கோயில்

ஊனுடம்பை ஆலயமாகவும், உள்ளத்தை மூலத்தானமாகவும், சீவனை சிவலிங்கமாகவும் வாயைக் கோபுர வாயிலாகவும் புலன்களை காளாமணி விளக்குகளாகவும் காட்டுகிறார். திருமூலர்

'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளற் பிரானுக்கு வாய் கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளாமணி விளக்கே'

## ஈசன் எனும் கனி

கனியை விரும்பாத மக்கள் இந்த உலகில் இல்லை. சிறியவர்கள், பெரியவர்கள், ஆண்கள், பெண்கள் என்ற வேறுபாடு இல்லாதுஎல்லோரும் விரும்புகிறார்கள். கனி உண்டால் உடல் நலம் கொடுக்கும். மலம் நீக்கும். உடலை மாண்புடன் விளங்கச்செய்யும். உண்ண எளிதானது. பயன் பெரிதானது, இவ்வளவு சிறப்புக்கள் இருந்தும் கனியிருப்பக் காய் கவர்ந்த நிலையில் வாழும் மக்கள் எத்தனைபேர்? அவர்களைக் கண்டார் நாவுக்கரசர். மனிதர்களே! இங்கே

வாருங்கள். நான் ஒன்று சொல்லுகிறேன். அருமையான கனி ஒன்று தருகிறேன்; அதை உண்பதற்கு வரமாட்டேன் என்கிறீர் களே! நான் கொடுக்கும் கனி மிகவும் இனி மையானது; அக்கனி உண்டால் பிறவி நோய் நீங்கும். அதுவே 'புனிதன் பொற் கழல் ஈசன் என்னும் கனி. அதை உண்டு இன்பம் பெற்று உய்யுங்கள் என்கிறார்.

''மனிதர் காளிங்கேவம் மொன்று
சொல்லுகேன்
கனி தந்தாற் கனியுண்ணவும் வல்லீரே
புனிதன் பொற் கழலீச னெனுங்கனி
இனிது சாலவு மேசற் றவர்கட்கே''

## நமச்சிவாயக் கனி

திருமூலரும் ஒரு கனி தருகிறார். சாப் பிட்டுப் பாருங்களேன். மனிதர்களே! நீங் கள் விரும்பும் கனி ஒன்றைக் கண்டு விட் டேன். இந்த உலகில் உள்ள ஒரே கனி அது. அக்கனியில் விதை கிடையாது. கடித்தால் கடிபடாது. தின்றால் மெத் தென்றிருக்கும். அக்கனியைப் பார்த்தால் இனிக்கும், நினைத்தால் இனிக்கும். பெய ரைச் சொன்னால் இனிக்கும். உண்டால் மிகவும் தித்திக்கும். அந்த அற்புதக் கனி எது என்று கேட்கிறீர்களா? சொல்லட்டுமா? நமச்சிவாய என்னும் நற்கனியேயாகும்.

'ஒன்றுகண் டேனிவ் வுலகுக் கொருகனி
நன்றுகண் டாவது நமச்சிவாயக்கனி
மென்றுகண் டாவது மெத்தென் றிருக்கும்
தின்றுகண் டாவது தித்திக்குந்தானே'
(திரும 2649)

## சிவகதி

நாவுக்கரசர் புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன் அடி என் மனத்தே வழு வாது இருக்க வரம் தரல்வேண்டும் என்று வேண்டினார். கருவாய்க் கிடந்தாலும் உன் கழலே நினைக்கும் கருத்துடையேன். அறிவு பெற்ற நாள்முதல் உன் நாமத்தைப் பயின் றேன். உனது அருளால் திருவாய் சிறப்பு அடையும்படி 'சிவாயநம' என்றுகூறித் திரு நீறு அணிந்தேன், ஆதலால், சிவகதி தர வேண்டும் பாதிரிப்புலியூர் அரனே என்று வேண்டுகிறார். நமச்சிவாய என்னும் மந்திரம் உறுதியாக சிவகதி தரக்கூடியது. ஆதலால் சிவாயநம என்று சிந்திக்கப்பெற்றேன்' என் கிறார்.

'கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங்
கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்து உன்றனுமம் பயின்
றேன் உனதருளில்
திருவாய்ப் பொலியச் சிவாய நமவென்று
நீறணிந்தேன்
தருவாய் சிவகதிநீ பாதிரிப்புலியூரரனே''

திருமூலரும்,

'சிவாய நமவெனச் சித்தம் ஒருக்கி
அவாயம் அறவே யடிமைய தாக்கிச்
சிவாய சிவசிவ வென்றென்றே சிந்தை
அவாயங் கெடநிற்க ஆனந்தமாமே.'

மேலும்,

'சிவசிவ என்கிலர் தீவினையாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளுந்
சிவசிவ என்றிடத் தேவருமாவர்
சிவசிவ என்னச் சிவகதிதானே'

என்கிறார்.

## சிவக்கொழுந்து

கொழுந்தை விரும்பாதவர்கள் இல்லை. கொழுந்து பார்ப்பதற்கு அருமையாக இருக் கும். நறுமணம் தரும். மனத்திற்கு மகிழ் வூட்டும் நாவுக்கரசர் சத்திமுற்றத்து இறை வனை சத்திமுற்றத்து உறையும் சிவக் கொழுந்து' (6·36·4) என்கிறார். திருமூலர் இறைவனை புவிக்கு எழிலாம் சிவக் கொழுந்து என்கிறார். காப்புச் செய்யுளில் விநாயகப் பெருமானை 'நந்தி மகன் தனை ஞானக்கொழுந்தினை' என்று பாடுகிறார்.

## தமிழ்த் தொண்டு

'என்னை நன்றாக இறைவன் படைத்
தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யும் மாறே'
என்கிறார் திருமூலர்,

'தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்'
என்கிறார் திருநாவுக்கரசர்.

இப்படி ஆயிரம் சிந்தனைகள். திருமூலன் உரைசெய்த மூவாயிரம் தமிழை யும் வாகீசர் உரை செய்த பண்ணார் இன்ற மிழையும் படித்துப் பரவசம் அடைவோம்.

# அப்பரும் திருவள்ளுவரும்

திரு. ஔவை நடராசன், எம்.ஏ., எம்.லிட்., சென்னை

இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்து அறமுரைத்த திருவள்ளுவருக்கும், ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்குமுன் வாழ்ந்த வாகீசப் பெருமானுக்கும் பெரிய தொடர்புண்டு. வாழையடி வாழையென வந்ததிருக் கூட்டம் என வள்ளற் பெருமான் காட்டும் திருக்கூட்டத்தில் திருவள்ளுவர் முன்னவராகத் தோன்றியும் அப்பரடிகள் பின்னவராகத் தோன்றியும் பெருந்தொண்டாற்றினர்.

அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப் பொருள்களை வரையறை செய்து வலியுறுத்தும் திறம் திருக்குறளுக்கே தனிச் சிறப்பு வாய்ந்ததாகும். ஆலும் வேலும் பல்லுக்குறுதி நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி'' எனத் தோன்றிய முதுமொழியும் திருக்குறள் அறமுரைத்த திறத்தை வியப்பதாகும். திருவள்ளுவரைப் போலவே திருநாவுக்கரசரும் உறுதிப்பொருள்களை அழுந்த உணர்த்திய திறம் வியந்த சான்றோர் ஒருவர் "சொற்றுறுதிக்கு அப்பரெனச் சொல்'' எனக் கூறியுள்ளார். திருவள்ளுவர் வாழ்வு அறநெறிக்கும் அன்புநெறிக்கு உரியதாதல் போலவே நாவரசர் வாழ்வும் அறத்தொடும் அன்பொடும் இணைந்த அருள் வாழ்வாகும். உண்மைத் துறவியருக்கு திருக்குறள் கூறும் இலக்கணம் முழுவதும் அப்பரடிகட்குப் பொருந்துவதாகும். இவ்வாறு இவ்விருபெரு மக்களின் வாழ்வும், உணர்வும் வாக்கும் ஒரு வாசகமாகவே கருதப்படும். 'தேவர் குறளும் திருநான்மறை முடிவும் மூவர் தமிழும் ஒரு வாசகமென்றுணர்' என்று ஔவையார் அருளிய பாடல் இதனை வலியுறுத்தும்.

'அகர முதல' எனத் தொடங்கும் முதல் திருக்குறளின் பொருளையே விளக்குவதாக "அகரத்தின் முன்னெழுத்தாய் நின்றார் போலும்'' என அடிகள் பாடியருள்கின்றார். எண்குணத்தான் எனத் திருக்குறள் கூறுமாறு "எட்டுவான்குணத்து ஈசன் எம்மான்'' எனவும் வருவது காணலாம். மக்களுக்குத் தோன்றும் மனக்கவலையை மாற்றுதற்குத் தனக்குவமை இல்லாதான் தாளினை சேர்தலே தக்கவழி என்றுரைத்த திருக்குறளறத்தை இனிது பயின்று மேலும் எளிய சொற்களால் உலகெலாம் உணர்வதற்கேற்ற வகையில் "உயிர்கட்கெல்லாம் இடர்தனைக்கழிக்க வேண்டில் இறைவனை ஏத்துமினோ' என்று அடிகள் அருள்கின்றார். வாலறிவன், என்று திருவள்ளுவர் வழங்குமாறு 'அண்டனே அண்டவொணா அறிவனே அஞ்சல் என்னாய்' என்று அப்பர் கூறுகின்றார்.

கைம்மாறு கருதாது உலகிற்கு வளம் வழங்கும் வானத்தின் இயல்பு இறைவன் திருவருளாலேயே நிகழ்வது என்ற திருக்குறள் அமைப்பை நுண்ணிதின் உணர்ந்து 'சொரிவிப்பார் மழை' என்று நாவரசர் விளக்குகின்றார். உரன் என்னும் தோட்டியால் ஓரைந்தும் காப்பான்' என்ற குறளின் பொருள் தெளிந்து, ஐவையைந்தும் அடங்காக் களிறு; அவற்றைத் தக்கநெறியில் உய்ப்பதே அறிவின் பயன் என்று கூறுவது போல

'வருத்தின களிறுதன்னை வருத்துமா
வருத்த வல்லார்
கருத்தினில் இருப்பர் போலும் கடவூர்
வீரட்டனாரே'

என்று நாவரசர் விளக்கக் காணலாம்.

தாம் புறச்சமயத்தே சார்ந்து பொழுது கழித்ததை எண்ணி வருந்தும் அடிகள் திருக்குறளை நினைந்து உருகிய திறத்தை

'மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த
மேனியான் தாள்தொழாதே
உய்யலொம் என்றெண்ணி உறிதூக்கி
அழிதந்துன் உள்ளவிட்டுக்

கொய்யுலாம் மலர்ச்சோலைக் குயில்கூவ
மயில்ஆலும் ஆரூரரைக்
கையினால் தொழா தொழிந்தே கனியிருக்
கக் காய்கவர்ந்த கள்வனேனே'

என்ற திருப்பாடலில் தெளியக் காணலாம். நில்லா உலகத்து நிலைமையைத் திருக்குறள் காட்டுமாறே "இன்றுளேன் நாளை யில்லேன் என் செய்வான் தோன்றினேனே" என்று எடுத்துரைக்கிறார்.

பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும் என்பது குறளறம். தொழிலால் மட்டும் சிறப்பைக் காணும் இயல்பு மாறி நால்வகைச் சாதிகளும் வழக்குகளும் பின்னர் பெருகலாயின. இவையே சமய வாழ்விற்குப் பெருந் தடையாயும் நின்றன. நாவரசர் "சாத்திரம் பலபேசும் சழக்கர்காள் கோத்திரமும் குலமும் கொண்டு என் செய்வீர்" என்று சாடுவதன் நோக்கம் பண்டைக் குறள் நெறியை நினைப்பிப்பதற்காகவே எனக்கருதலாம்.

மக்கள் வாழ்வு அகவாழ்வு புறவாழ்வு என இருவகைப்படும். உள்ளமும் உலகமும் ஒன்றி வாழ்தல் வேண்டும். நினைப்பது ஒன்றும் சொல்வது ஒன்றும், எண்ணுவது வேறு இயற்றுவது வேறு என்றும் நடத்தும் இரண்டாட்ட வாழ்வு இடர்தருவதாகும். அகத்தே கருத்துப்புறத்தே வெளுத்திருக்கும் இயல்பையும் திருவள்ளுவர் பல இடங்களில் கடிந்துரைக்கிறார். மனத்துக்கண் மாசிலாததே அறம் என்றும் தெளிவாக்குகிறார்.

கோடி தீர்த்தம் கலந்து குளித்தவை
ஆடினாலும் அரனுக்கு அன்பில்லையேல்
ஓடுநீரினை ஓட்டைக் குடத்தட்டி மூடி
வைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே.

என்ற அப்பர் அருள் மொழியை ஓதும் போது 'மனத்தது மாசாக மாண்டார் நீராடி மறைந்தொழுகும் மாந்தர் பலர்' என்ற திருக்குறள் விளக்கம் பெறுகிறோம்.

'அஞ்சாமை அல்லால் துணைவேண்டா' என்று திருவள்ளுவர் காட்டும் ஊக்கம்.

"நாமார்க்கும் குடியல்லோம்
நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை
இல்லோம்
ஏமாப்போம் பிணியறியோம்
பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை"

என்று அப்பர் பெருமானால் பெரு விளக்கம் பெறுகிறது.

ஈதல், இசைபட வாழ்தல் இவ்விரண்டும் வாழ்வின் ஊதியம் என்பர் திருவள்ளுவர். இரப்பவர்க்கு ஈயவைத்தார் ஈபவர்க்கு அருளும் வைத்தார் எனப் பெருமான் கூறும் பகுதி நினைக்கத்தக்கது, விழைவதூஉம்விட்டேம் என்பார்க்கும் உழவின்றி ஒரு தொழிலும் இல்லை என்று உழவின் பெருமையைத் திருக்குறள் குறிக்கிறது. உழவுத் தொழில் உலகின் தலைத் தொழிலாகும். போர்வீரரை வில்லேருழவர் என்றும் நாவீரரை சொல்லேருழவர் என்றும் திருக்குறள் கூறும். உழவு செய்து உலக நலம் விளைவித்தல்போல தொண்டர்களும் சிவகதியெனும் செந்நெல்லை விளைவிக்கவேண்டுமென்று,

மெய்ம்மையாம் உழவைச்செய்து
விருப்பெனும் வித்தை வித்தி
பொய்மையாம் களையை வாங்கிப்
பொறையெனும் நீரைப் பாய்ச்சி
தம்மையும் நோக்கிக்கண்டு
தகவெனும் வேலி யிட்டு
செம்மையுள் நிற்ப ராகில்
சிவகதி விளையும் அன்றே

என்று காட்டுகின்றார்.

திருக்குறள் தலைவன் தலைவியின் மாட்டுப் பெற்றத் தனியின்பத்தை வியக்கும் போது ஐம்புலன்களாலும் ஆரத்துய்க்கும் பெற்றிமையை நினைந்து உருகுகிறான். அருளரசரான நம் அப்பரடிகள் ஈசன் இறைவனடிநிழல் அடியவர்க்கு ஐம்புலன்களுக்கும் இன்பம் தரும் அமைதியுடையது எனக் காதலின்பத்தை கடவுளின்பமாக உயர்த்திக் காட்டுன்றார்,

"குடி செய்வல் என்னும் ஒருவர்க்குத்
தெய்வம்
மடிதற்றுத் தான் முந்துறும்"

என்ற குறட்கோட்பாடே,

"தன் கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே"

என்ற அப்பர் அருள் வாக்கில் வலியுறுத்தப் படுகிறது. உயிர் தன் கடனை ஒருங்குற நிகழ்த்துமானால் உடையவன் அதனை ஊக்குவித்து ஆட் கொள்வது இயல்பு தானே! அறமும் அன்பும் நிறைந்த உயிர் வாழ்வினைத் திருக்குறள் காட்டுகிறது.

'கடனென்ப நல்லவை எல்லாம்'

'மனத்தானும் மாந்தர்க்குணர்ச்சி'

என்று சொல்லி நல்ல மனமும் நல்ல செயலும் நாளும் பெருக நல்லறம் காட்டுகிறது.

திருத்தொண்டின் உறைப்பாலே வென்ற திருப்பேருடைய நாவரசரும் நல்ல உள்ளமும் நல்ல உழைப்புமே வடிவாக விளங்கியவர்.

எனவே வள்ளுவப் பெருந்தகையின் வாக்கும் வாகீசப் பெருந்தகையின் நோக்கும் ஒரு நெறியில் இலங்கிடக்காண்கிறோம். அறிவியல் தலைவராகத் திருவள்ளுவரையும் அருளியல் தலைவராக நாவரசரையும் நாம் போற்றி வணங்குவோமாக!



"ஊனாகி உயிராகி யதனுள் நின்ற
உணர்வாகிப் பிறவனைத்தும் நீயாய் நின்றாய்
நானேதும் அறியாமே என்னுள் வந்து
நல்லனவும் தீயனவும் காட்டா நின்றாய்
தேனாருங் கொன்றையனே நின்றி யூராய்
திருவானைக் காவிலுறை சிவனே ஞானம்
ஆனாய்உன் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டம் கொண்டடியேன் என்செய் கேனே"

அப்பர்-6 ; 621.

# அப்பர் தேவாரத்தில் ஆலயங்கள்

கம்பன் அடிப்பொடி திரு. சா. கணேசன், காரைக்குடி

"ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்பது அவ்வைப்பிராட்டியாரின் அருள் வாக்கு. கோயிலிற் சென்று வழிபடுவதே மிக்க பயனுடையது என்பது கருத்து. இதை வலியுறுத்தவே "கோயிலில்லா ஊரில் குடியிருக்கவேண்டாம்" என்று 'உலகநீதி' கூறிற்று. இவையும், இவைபோன்ற பிற பலவும் ஆலயம் அல்லது திருக்கோயில் மக்களின் நல்வாழ்வுக்கும், நற்கதிக்கும் எத்துணை இன்றியமையாத தென்பதைத் தமிழர்கள் தென்றுதொடு காலமாக நன்கு ணர்ந்துள்ளார்கள் என்பதை நன்கு புலப் படுத்திக்கொண்டிருக்கின்றன. இந்தப் பரம் பரையில் வந்தவர்தாமே அப்பர் பெருமானும்! அனைத்துக் கலைகளையும் ஆய்ந்து தெளிந்த அருட் செல்வர் அவர்.

"நிலைபெறுமாறு எண்ணுதியேல்,
நெஞ்சே! நீவா;
நித்தலும் எம்பிரானுடைய கோயில்
புக்கு,
புலர்வதன்முன் அலகிட்டு,
மெழுக்கும் இட்டு,
பூமாலை புனைந்து, ஏத்தி, புகழ்ந்து
பாடி
தலைஆரக் கும்பிட்டு, கூத்தும் ஆடி
சங்கரா! சயபோற்றி! போற்றி! என்றும்,
அலைபுனல்சேர் செம்சடை எம்
ஆதி! என்றும்
ஆரூரா! என்றுஎன்றே அலறுநில்லே,"

என்று தம்பேரியல்பு தோன்ற, அனுபவ நிலையில் அறிவுறுத்தி மகிழ்கின்றார் இந்த மெய்ப்பாடுகள் தோன்ற வேண்டும். உணர்ச்சிப் பெருக்கெடுக்கக் காட்சியே உதவும். நம் அனையோர் அகத்துள் கண்டு அவனை உணர்தல் என்பது அசாத்தியம். திருக்கோயிலுக்குச் செல்லவேண்டும். அப் புனிதத் தலத்தில் மனம் ஈடுபட்டுப் பணிகள் ஆற்றி, அங்குள்ள எம்பெருமான் திருமேனிக்கு அலங்காரங்கள் செய்து, அந்தத் திருமேனிக்குரிய பரமனைப் பலவாறு அவன் சீர்த்திகள் புலப்படுமாறு பாடி ஆடி வாழ்த்தி வழிபடவேண்டும். அப்போதுதான் நம்மனத்தில் அவனுடைய குறைவிலா நிறைவுக்கோலம் படியும். அவ்வுணர்வு ஏற்பட ஏற்பட நாம் தம்வயம் இழந்து இறைவயம் ஆவோம்.

கோயிலும் அங்குள்ள அருள்சுரக்கும் கலைக் கருவூலங்களான படிமங்களும், திருமேனிகளும் இன்றேல், முழுநிலை அறிவினர்களை யன்றி மற்றையோர் நல்ல முறையில் குறிக்கோளை அடையும் நெறியை உணரவும் முடியாது. ஆகவேதான் உருவ வழிபாட்டை வற்புறுத்தத் தவறுவதில்லை.

இத்தகைய பெரும் பயனை நல்கும் கோயில் தோன்றிய வரலாற்றை ஆயப் புகுவோமேயானல் அது பெரிதும் நீண்டுவிடும்.

கல் தோன்றி மண் தோன்றாக் காலத்திலேயே கோயில் தோன்றிவிட்டது. அதுதான் முதற்கோயிலான குகைக்கோயில். அங்கு வணங்கப்பட்ட தெய்வம் "குகன்" எனப்பெயர் பெற்றான். ஆகவேதான் முருகன், முதல் நிலமான குறிஞ்சிக்குத் தெய்வம் ஆனான்.

மக்களின் எண்ணிக்கை வளர்ச்சிக்கும் எண்ண வளர்ச்சிக்கும் ஏற்ப, மக்களினம் நெய்தல், முல்லை' மருதம் ஆகிய மற்றை மூவகை நிலங்களிலும் குடியேறி வாழத் தொடங்கினர், அங்கங்கெல்லாம் எப்படியோ ஆலயத்தை அமைக்கத் தவறினார்களில்லை. கொடிக் கூடம், மரநிழல், காவணம்,குடில், மண்தளி, சுடு மண்தளி, மரம்பலகைகளால் சமைத்த அம்பலம்; குடைவரை, ஒற்றைக்கற்றளி, கற்கோயில்,

என்று அவை படிப்படியாய் வளர்ந்தன. அவற்றின் வகை, தொகைகளை எல்லாம் ஆய இங்கு இடம் போதாது.

பலவகைக் கோயில்களும் அடிநாளி லிருந்து நீர்நிலைக் கருகிலேயே அமைக்கப் பெற்ற உண்மையை நாம் இன்றும் கண்டு தெளியலாம். ஒருக்கால் நீர்நிலைஅருகில் இன் றேல் கோயில்களின் அருகே குளம் தொட்ட அருமையை உணரலாம். பொதுவாக கான், காவு, கடல், மலை, ஆறு, ஏரி, பொய்கை, அருவிபோன்ற அமைதியும், அழகும், தூய் மையும் உள்ள இடங்களில் அல்லது அருகில் தான் ஆலயங்கள் அமைக்கப்பட்டன என் பதை ஊன்றிப்பார்த்தால் முன்னையோர் முறையின் அருமை பெருமைகளை நாமும் கூட நன்குணரலாம். அங்ஙனம் ஆக்கிய ஆயிரம் பல்லாயிரம் ஆலயங்கள் அமைத் தது அமைத்தபடியே இன்றில்லை. கால, தேச, எண்ணங்கட்கு ஏற்ப எத்தனை எத்த னையோ மாற்றங்களை அடைந்து அவை விளங்குகின்றன.

அந்தப் பழங்கால ஆலயங்களில் ஒருசில வற்றின் படிவங்கள் (Models) ஆகவே மாமல்லபுரத்தில் சிலவற்றை மாமல்லன் காலத்துப் பெருந் தச்சர்கள் ஆக்கி வைத் திருக்கிறார்கள். ஆனால், அவற்றை "ரதங் கள்" என்று கூறி நாம் நமது அறியாமை யைப் புலப்படுத்திக் கொண்டிருக்கிறோம். அத்தகைய ஆலயங்களில், அப்பர்பெரு மான், சிலவகையை நமக்குப் புலப்படுத்தி யருளுகிறார். முதலில் பாசுரத்தைப் பார்ப் போம்; பின்னர் கோயில் வகைகளைப்புலப் படுத்திக் கொள்வோம்.

"பெருக்கு ஆறு சடைக்கு அணிந்த
பெருமான் சேரும்
பெரும்கோயில் எழுபதுனோடு எட்டும்,
மற்றும்
கரக்கோயில், கடிபொழில்சூழ் ஞாழல்-
கோயில்
கருப்பறியல் பொருப்புஅனைய கொகுடிக்
கோயில்
இருக்கு ஓதி மறையவர்கள் வழிபட்டு
ஏத்தும்
இளம்கோயில் மணிக்கோயில்
ஆலக்கோயில்
திருக்கோயில் சிவன் உறையும்
கோயில்.."

## 1. பெருங்கோயில்

இதையே மாநகர் என்றும் கூறுவர். பல கோட்டங்களும், விமானங்களும், மண் டபங்களும், திருச் சுற்றுகளும், திருமாளி கைப் பத்திகளும், கோபுரங்களும் கொண்டு அனைத்து அங்கங்களுடன் விளங்குவது. திருவாரூர், மதுரை, ஆனைக்கா, திருவண்ணா மலை முதலியன பெருங்கோயில் வகையாம்.

## 2. கரக்கோயில்

மரக் கைகள் பரப்பி அதன்மீது புல் கீற்று அல்லது ஓடு வேய்ந்து அமைக்கப் படுவது. சாலை, அர்த்தசாலை, கூடம் என இது மூவகையாக அமைக்கப்படும். தில்லைச் சிற்றம்பலம் இவ்வகையாம், இவ் வகை இன்று கேரளத்தில் மிகுதியாகக் காணப்படும்.

## 3. ஞாழல்கோயில்

பல சிறு மரங்கள் சூழ்ந்த ஒரு கூடாரம் போன்ற இடத்தில் மரங்களின் நிழலில் அமைக்கப்படும் மேடைக் கோயில். பெரும் பாலும் வேலி சூழ்ந்த காவனத்தில் அமைக் கப்படும் இக்கோயிலே பல கால் மண்டபங் கட்கு வித்தாயிற்று என்னலாம். (ஞாழல்= கொன்றை) இதற்குக் கூரை இல்லை.

## 4. கொகுடிக்கோயில்

முல்லை, பிரம்பு போன்ற கொடிவகை கூடம்போல் ஓங்கி விளங்கி நிழல் தவழும் கொடிக்கூடம். "கருப் பறியல் பொருப்பு அனைய" என்ற அடைமொழியால், உள்ளீடு குடைந் தெடுக்கப்பட்ட மலை போன்ற தன்மையை அப்பர் பெருமான் அழகாக நமக்கெல்லாம் உணர்த்தியருளும் கருணைத் திறத்தை மனக்கொள்ள வேண் டும். கொடிமரம் என்பது இதுவே.

## 5. இளங்கோயில்

இதைச் சில அறிஞர்கள் 'பாலாலயம்' எனக் கொள்கின்றனர். எளியேன் கருத்து மாறுபாடுடையேன். இளங்கோயில் என் பது திருவுண்ணாழி (கர்ப்பக்கிருஹம்) மட்டும் அமைந்த கோயில், பின்னே வளரக்கூடிய நிலையுடையது. மீயச்சூர் இளங்கோயில் போன்றவற்றை நோக்கவேண்டும்.

## 6. மணிக்கோயில்

இது வண்ணந் தீற்றிய விமானத்தை யுடைய சிற்பங்களுடன் கூடிய அழகிய சுதை வேலையுள்ள கோயிலாகும். மண்ணீட்டாளர் கைவன்மை புலனாகும் இக் கோயில் வகைகளில். திருவதிகை இதற்கு நல்லதோர் எடுத்துக்காட்டு.

## 7. ஆலக் கோயில்

நாற்புறமும் நீர் சூழ்ந்த இடத்தில் அமையும் கோயில், தஞ்சை, வலிவலம் முதலிய ஊர்க்கோயில்களை நினைவுகூரலாம்.

## 8. திருக்கோயில்

பஞ்சப் பிராகாரங்களுடன் கூடிய பெருங்கோயில் அல்லாவிட்டாலும், பெரிய அளவில் சிற்ப நலங்களுடன் கூடிய, பல மண்டபங்களும், கொடிமரம், சுற்றாலயங்கள் முதலியவையும் அமைந்த ஆலயம் ஆகும். இங்ஙனம் அப்பரடிகள் கோயில் வகைகளை ஒருவாறு எடுத்து விளக்கியருளுவதை மனத்தில்கொண்டு பல வேறு வகைகளில் தென்னாட்டில் திகழும் திருக்கோயில்களைக் கண்டு கலை இன்பம் துய்ப்பதுடன் மனித வாழ்வின் குறிக்கோளை எய்த அவனருளையே துணையாய்க் கொண்டு உய்தி பெறுவோமாக,

> "காடும், காவும், கவின்பெறு துருத்தியும்
> ஆறும், குளனும், வேறுபல் வைப்பும் —
> சதுக்கமும். சந்தியும், புதுப்பூங் கடம்பும்
> மன்றமும்,பொதியிலும் கந்துடைநிலை..'!

— திருமுருகாற்றுப்படை.



> "திருக்கோயி லில்லாத திருவி லூரும்
> திருவெண்ணீ றணியாத திருவி லூரும்
> பருக்கோடிப் பத்திமையாற் பாடா வூரும்
> பாங்கி னொடு பலதளிக ளில்லா வூரும்
> விருப்போடு வெண்சங்கம் ஊதா வூரும்
> விதானமும் வெண்கொடியு மில்லா வூரும்
> அருப்போடு மலர்பறித்திட் டுண்ணா வூரும்
> அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே"

அப்பர் — 6 : 933

# அப்பரடிகளின் ஐம்பூத எண்ணலங்காரம்

திரு. எம் சிவானந்த முதலியார், சென்னை, திரு. நீலநாராயணன், சென்னை,

ஒன்றல்ல இரண்டல்ல. ஒன்றிரண்டு மல்ல, நன்றல்ல தீதல்ல நாதவிந்து மல்லாத தத்துவங்களை எல்லாம் கடந்து தானே ஒன்றாய்ப் பிறங்கும் ஒப்பற்ற ஒரு தனி முதலை இறைவன் என்று சித்தாந்த சைவர்களாகிய நாம் கூறுகின்றோம்.

எண்ணத்திற்கு எட்டாத ஒருவனை, கணக்கிட்டுக் கருதவொண்ணாக் கடவுளை. "எண்ணிறந்த எல்லை இலாதானே" என்றார் மணிவாசகப்பெருமான். கருவிகளின் துணை கொண்டு பண்டங்களை அளந்தறியும் விஞ்ஞானிகளுக்குக் கண்களாக விளங்குபவை கணிதம். ஒன்று முதலாகிய எண்களைக் கொண்டு பொருள்களின் நீர்மையைக் கணக்கிட்டு அளக்கின்றனர் இவர்கள். பண்டங்களை அளந்தறிய உதவும் கணிதம் பரமனை அளந்தறியும் திறத்தில் பயனற்றதாய்ப் போய்விடுகின்றது. இங்குதான் விஞ்ஞானம் விழிக்கின்றது. விம்மும் தன்மையுடைய விஞ்ஞானம் வெடிக்கும் நிலையை இங்கேதான் அடைகின்றது. அதனின் அவல நிலை இந்த எல்லை வரைவந்து முடிவடைகின்றது.

ஆனால் மெய்ஞ்ஞானமோ தான் அறிவு மயமாக உறையும் உடம்பையே முதலில் அளவைக் கருவியாகக் கொண்டு தன்னையே காண்கின்றது. தன்னுள்ளிருக்கும் தத்துவப் பொருள்களைக்கண்டு, எண்ணங்களை மேலாம் நிலைகளில் பெருக்கி, அதனின் தொகைப் பொருளான அருளைக்கண்டு, அதன் தெளிவாய் இன்பப்பெருக்கை யடைந்து, இறையுருவைத் தெரிசிக்கின்றது. இவையனைத்தும், மெய்ஞ்ஞானம் விண்ட மேல் நிலை.

இவ்விதம் மெய்ஞ்ஞானம் உண்முக நிலையில் கண்ட இறைவனை வெளி நிலையில் காணும்போது காணும் கண்கள் அருளின் நீர்மைத்தாகி காட்சிப் பொருளனைத்திலும் கண்ணுதலையே காண்கின்றன. இத்தகைய ஒப்புயர்வற்ற அருட்கட் புலனையடையப் பெற்ற மெய்ஞ்ஞானிகளுள் தலைநின்றவர் நம் அப்பர் பெருமானார். இவர் கண்ணுடையார் மட்டுமல்ல; இறைவனை தக்க முறையில் வைத்து எண்ணும் எண்ணுடையார் என்பதை எடுத்துரைக்கவும் வேண்டுமோ! இருப்பினும் ஓர் எடுத்துக்காட்டுக் காண்போம். புள்ளிருக்கு வேளூர் திருத்தாண்டகத்துள் அப்பர் பெருமான்,

"மின்னுருவை விண்ணகத்தில் ஒன்றாய் மிக்கு
வீசுங்கால் தன்னகத்தில் இரண்டாய்ச் செந்தீத்
தன்னுருவின் மூன்றாய்த்தாழ் புனலின் நான்காய்த்
தரணிதலத் தஞ்சாகி யெஞ்சாத் தஞ்ச
மன்னுருவை வான்பவளக் கொழுந்தை முத்தை
வளரொளியை வயிரத்தை மாசொன் றில்லாப்
பொன்னுருவைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே"

என்கின்றார்.

என்றுமே ஒளிக்கு நிலைக்களனாகிய விசும்பு வியாபகப் பண்புடையதால் அதில் விரவியுள்ள இறைவனை இரண்டாகக் காணவியலாதாகையால் ஒன்றென்றும்; விசும்பை ஆதாரமாகக் கொண்டியங்கும் காற்று மிக்கு

வீசுங்கால் இரண்டாகின்றன. (வீசுங்கால்-வீசும்போது எனவும், வீசும்காற்று எனவும் இருபொருள் படும்) காற்று அண்டவளவில் ஒன்ருக விருப்பினும், பிண்டவளவில் இரண்டாகும்; காலிரண்டையன்றி இக் கடத்தை நடப்பிக்க உயிரால் ஆகாதன்ருே? இக்குறிப்பும் மிளிர வீசுங்கால் தன்னகத் தில் இரண்டாய் என்ருர் பெருமான்.

மேலும் காற்றுக்கு விண்ணே முதல் என் ருலும் விண்தன்ருல் காற்றுக்கு இயக்க மின்றிக் கடவுளின் ஆணையால் இயக்கமுறு வதால், காற்றுடன் கலந்த இறைவன் விண் ணும், விண்ணில் நிறைந்த காற்றுமாக இரண்டாகின்ருன் என்ருர்.

விசும்பால் காற்றும், காற்ருல் கனலும் விளங்குவதால் இம்முப்பொருள் தன்னில் இறைவனும் முக்கூறனுகின்ருன். விண்ணி னின்றே வீழும் புனலாகையால் விசும் பொடு சேர்த்தெண்ண புனல் நான்காவ தால் இறைவனின் உருவமேனியும் நான்கா கின்றது.

அதுமட்டுமின்றி வீழ்ந்தபுனல் மண்ணை யடையுங்கால் நாலு பக்கங்களிலும் பரவி வியாபகப்படுவதாலும் நாலாம் நிலையைப் புனல் பெறுகிறது என்றதோர்க் கருத்தும் ஈண்டுப் பெறப்படுகின்றது. " தரணிதலத் தஞ்சாகி " என்பதில் மன்னுயிரனைத்தும் பூதவுடம்பைப்பெற தரணித்தலத்தையே தஞ்சமடைவதாலும்—அவ்வித மடையுமு யிர்களுக்குள் உயிராய் ஒங்கும் ஒருவனே யாகையால் இறைவனை அஞ்சாகவும் வைத்து சுவாமிகள் விளக்கியது வியப் பன்ருே!

எல்லாப் பூதங்களும் ஊழியில் தன்னுரு வங்களை இழந்தாலும் என்றும் பொன்ரு நிலைபேறுடைய இறைவன் தன்னுருவில் திரிபடையான் ஆதலின் அவனின் அருட் டிருமேனியை மன்னுருவென்ற அற் புதம் ஆழ்ந்து நோக்கற்பாலது. இவ் வண்ணம் ஒன்ருகிய உவமையிலானை ஐந்து என்னும் எண்ணலளவையில் கொண்டு வந்து காண்பது மெய்ஞ்ஞானிகளுக்கே யன்றி மற்றையரால் ஆகும்கொல்?

மேலும் எண்களுள் ஒன்று முதல் ஐந்து வரையே அரும்பொருட் சிறப்பமைந்தவை. இவற்றிற்கு மேற்பட்டவைகளுக்கு பொரு ளிருப்பினும் பொதுவே; சிறப்பாகா. பூதங் களைந்து, பொறியைந்து, புரியச்செய்யும் இலக்கணம் ஐந்து, புண்ணிய எழுத் தைந்து என்பதே பெருவழக்கம். நமது தெய்வத் தமிழில் உள்ள ஐந்தெழுத்தரு ணிலையை நோக்குவார்க்கு இவ்வுண்மை புலனுகாமற் போகா!

செய்யுளின் மற்ற அடிகளின் பொருள் எல்லாம்வல்லானை புகலுமாறு புகழும் இயல்பாம்; வெளிப்படையுமாம்.

ஐம்பூதப் பகுப்பில் இறைவனை ஒன்று முதல் ஐந்துவரை காணும் அப்பரடிகள் மற்ருெரு திருத்தாண்டகத்தில் கீழ்மேலாகக் காணுகின்ற எண்ணலங்காரம் இன்புறற் பாலதாம். பூதவகையில் ஐந்தாக விரிந்த ஆண்டவனின் இருப்பு என்றும் ஒன்ருகை யால் அவனை அவ்வொன்றிலேயே ஒன்ற வைத்து அடிகள் காணவும் தவறிஞரல்லர். அதனைத் திருக்கற்குடித் திருத்தாண்டகத் தில்.

"மண்ணதனில் ஐந்தைமா நீரில்
நான்கை
வயங்கெரியில் மூன்றைமாருதத்தி
ரண்டை
விண்ண தனிலொன்றை விரிகதிரைத்
தண்மதியைத் தாரைகைகள் தம்மின்
மிக்க
எண்ணதனில் எழுத்தை ஏழிசையைக்
காமன்
எழிலழிய எரியுமிழ்ந்த இமையா
நெற்றிக்
கண்ணவனைக் கற்குடியில் விழுமி
யானைக்
கற்பகத்தைக் கண்ணுரக் கண்டேன்
நானே."

என்றருளிச் செய்தார்.

மண்ணுெடு சேர்த்தெண்ண ஐந்தாமாகு மிறைவன் மாசங்காரக் காலத்து முதலில் மண்ணையொடுக்க நீர் முதல் நான்கிலே நிறைந்தும்; நீரையொடுக்க நெருப்பு முத லான மூன்றில் ஊன்றியும்; நெருப்பை

யணைக்க கால் முதலான இரண்டில் கரந்தும்; காற்றைக் கடிய விண்ணதனில் வியாபகப் பட்டும் ஒன்ருகின்ருன், மற்றவடிகள் அணை த்தும் நாதவிந்து தத்துவப்பாடுகளே; உய்த் துணர்க.

அரியயன் கீழ்மேலுற நின்ற எம்மான் பூதப்பொருள்களில் உள்ள எண்ணலளவை களிலும் கீழ்மேலுற நிற்கின்ற அருட்டிறத் தைக் கண்டு காட்டிய அப்பர் பெருமானுர் அன்பால் அளந்தறிந்த திறந்தான் என்னே என்னே! இவ்விதம் யாம் இறும்பூதெய்தல் எத்துணைப்பற்றியெனின்—மாலும், மலரோ னும் செருக்கால் ஓடிக்காணுத ஒருவனைத் தான் தேடிக்கண்ட திறத்தை அப்பர் பெரு மானுரே, திரு அங்கமாலையில்.

"தேடிக் கண்டுகொண்டேன் திரு
மாலொடு நான்முகனும்
தேடித் தேடொணுத் தேவனை—யென்
னுளே
தேடிக் கண்டு கொண்டேன்"

என்ருேதியருளிய திருவாக்கால் மெய்ஞ் ஞானித் திட்ப மேன்மையும், அருட்கண்ணு டையார் அருமையும் புலப்படும். இக்கருத் தையுள்ளிட்டே ஐம்பூதத்தலங்களை அமை த்து அங்கங்கே நின்ருருகிய ஆண்டவனின் ஆற்றலை விளக்கினர் போலும் நம் முன் னேர்க்கு முன்னேர்கள்.

நமது அடிகள் பல பதிகங்களில் இறை வனை ப்பூதங்களோடு இணைத்துப் பாடியிருப் பினும் மேலே அடியேம் எடுத்துக்காட்டிய இரண்டு திருத்தாண்டகங்களில் எண்களி லேயே வைத்துத் தன் எண்ணங்களை உருவ கப்படுத்துவது அலங்காரமாகவமைந்த சது ரால், வெளியிட்டோம். அப்பர் பெருமான் இணையடி வாழ்க! அம்மெய்ஞ்ஞானியை ஈன்ற தமிழும், தமிழுலகும், சைவமும் வாழ்க! சீரடியார் வாழ்க, வாழ்க!



"அப்பன்நீ அம்மைநீ ஐய னும்நீ
அன்புடைய மாமனும் மாமி யும்நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொ ருளும்நீ
ஒருகுலமும் சுற்றமும் ஒரு ரும்நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்று வாய்நீ
துணையாயென் நெஞ்சந் துறப்பிப் பாய்நீ
இப்பொன் நீ இம்மணிநீ இம்முத்துநீ
இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே"

அப்பர்—6 : 929

௯

# கவியரங்கில் ஒரு ஏடு :

★

அப்பர் கவிதைகளில் அகங்குழைந்து நின்றிருந்தேன் : ஏனென்றால்...

"அப்பர் கவிதைகளில் அகங்குழைந்த காரணத்தைச்
செப்பு எனச்சொன்னால் செப்புவது எப்படியோ?
தென்றல் தருசுகத்தைத் தெரிவித் திடுஎன்றால்
என்றும் இயன்றிடுமோ ; ஏதேனும் வார்த்தையுண்டோ?
நெஞ்ச உணர்வு ; நினைவின் அலைமோதல் ;
கொஞ்சல் மொழிகள் ; குழந்தைகளின் நன்மழலை
தந்த இன்பத்தைத் தானெடுத்து மொழிந்திடுதல்
இந்த உலகத்தில் எவருக்கும் கைவருமோ?

விண்ணெடுத்துச் சுருட்டியொரு வேர்க்கடலைத் தோலுக்குள்
கண்ணிமைக்கும் நேரத்தில் கரந்திடுதல் ஒல்லுவதோ ?
புல்லெடுத்துச் சிங்கத்தின் பொல்லாத பாய்ச்சலினை
வெல்லுவது கூடுமென விரித்துரைக்கும் மூடருண்டோ ?
நல்லுணர்வு இல்லாதான் ஞாலத்தின் மேன்நிலையில்
வெல்லும் நெறிவகுத்து வென்றிடுதல் கூடுவதோ ?

அதுபோல,

அப்பர் கவிதைக்கு அகங்குழைந்த காரணத்தைச்
செப்பிவிடும் வல்லமையைச் சிந்தைசெயக் கூடுவதோ ?

பாட்டின் நலமா ; பசுமைவளர் செந்தமிழா
நாட்டு புதுநெறியா ; நானிலத்தின் நோக்குகளா
பத்திக் கனிவா ; பாடலிழை நுண்ணுணர்வா
எத்தைச் சொல்லி என்நிலையைப் பாடுவது ?

கல்மிதக்கும் அவர்மொழிக்கு-நெஞ்சம்
காற்றில் மிதக்காதா ?
நஞ்சமுதம் அவர்மொழிக்கு-என்
நெஞ்சம் மயங்காதா
தாள்திறக்கும் அவர்மொழிக்கு- உள்ளத்
தடையைத் திறக்காதா?
காசுபெறும் அவர்மொழிக்கு-எந்தன்
மாசு மறையாதா?

அப்பர்மொழி தேன்கூடு - அந்த
அடைஎடுக்கும் வேட்டுவன் நான் !
அப்பர்மொழி தேன்நிலவு – அதன்
அருகிருக்கும் காதலன் நான்!
அப்பர்மொழி பூக்காடு - அங்கே
ஆடிவரும் வண்டினம் நான்!
அப்பர்மொழி பூங்காற்று - அதில்
அமைந்துவரும் நன்மணம் நான்!

சொல்லிய பாட்டின் சுவைதெரிந்து பாடுகின்ற
வல்லாளர் அப்பர்மொழி வாய்திறந்து பாடிவிட்டால்
கல்லில் சிலையாவேன் : கனிவிற் பழமாவேன்
மகுடிக்குப் பாம்பாகி மயங்கிச் சுழன்றிடுவேன்
தாயன்பின் சுகங்காணும் தனிக்குழவியாகிடுவேன்
போயன்பு நீர்பெருகப் புதுவானில் நான்பறப்பேன்....

திருவாரூரில் 30–4–70 இல் நிகழ்ந்த கவியரங்கில் புலவர் இரா. செல்வக்கணபதி பாடிய கவிதையில் ஒரு பகுதி.